உ

சிவமயம்.

சீர்காழி

அம்பலவாணக் கவிராயரவர்கள்

அருளிச்செய்த

# அறப்பளீசுரசதகம் மூலமும்

திருநெல்வேலி வித்வான்

குப்புசாமிப்பிள்ளை அவர்கள் செய்த

# உரையும்.


சென்னை: இட்டா - பார்த்தசாரதி நாயுடு அவர்கள்

குமாரர்

இட்டா. கோவிந்தராஜுலு நாயுடு அவர்களால்

சென்னை. சக்கரவர்த்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

உ

சிவமயம்.

# அறப்பளீசுரசதகம்.

## அதாவது.

சதுரகிரி யென்னுந் தலத்தில் 'அறப்பளீசுரம்' என்னும் ஆலயத்தில் எழுந்தருளியிருக்கிற சிவபெருமானது திருநாமத்தைச் செய்யுள்தோறும் அமைத்துப் பாடப்பெற்ற நூறுசெய்யுள்கொண்ட ஒருபிரபந்தம். இந்நூலின் செய்யு ளொவ்வொன்றின் இறுதியிலும் "அருமை மதவேள் அனுதினமு மனதினினைதருசதுர கிரிவள ரறப்பளீ சுரதேவனே" என்பது மகுடமாக அமைக்கப்பட்டிருத்தல் காண்க. அறப்பளீ சுரனைப் புகழ்கின்ற சதகம் என இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை யென்றாவது, அறப்பளீசுரனது சம்பந்தமான சதகம் என ஆறாம் வேற்றுமைத் தொகையென்றாவது விரித்துரைத்துக் கொள்க. அறப்பள்ளி யென்பதைக் கோயிற்பேரெனக்கொண்டால் அங்கு எழுந்தருளியிருக்கிற ஈசுரர்மேற் பாடிய சதகம் என்றாகும், சதகமாவது தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று, அகப்பொருள் ஒன்றன்மேலாவது புறப்

பொருள் ஒன்றன்மேலாவது நூறுசெய்யுள் கற்பித்துக் கூறு தல் இதனிலக்கணம். அகப்பொருள்-காமவிஷயம். புறப்பொ ருள்-மற்றவிஷயங்கள். இந்நூலில் பலவகை நீதிகளும் மற்றும் பலவகை இயல்புகளும் கூறப்பட்டுள்ளன வாதலால் இது புறப் பொருளின்மேற் கூறிய தாகக்கொள்க. "விளையுமொரு பொ ருண் மேலொருநூறு, தழையவுரைத்தல் சதகமென்ப" என் பது (இலக்கண விளக்கம்) சதம்-நூறு என்னுந்தொகையை யுணர்த்தும் வடசொல், அதுகப் பிரத்தியயம் பெற்றுச் சதகம் என்றாயிற்று,

இந்நூல், முதலிற் காப்புச் செய்யுளாயுள்ள வெண்பா வொன்று தவிர நூறு ஆசிரியவிருத்தங்களை யுடையது. இந் நூலாசிரியர் அம்பலவாண கவிராயரென்பதை, இந்நூலினீற் றில் தற்சிறப்புப்பாயிரமாக கூறியசெய்யுளில், "அம்பலவாண கவிராயனுடமேன் புன்கவியையுஞ் சூடியே மனமகிழந் திடுவே ணுன் கடனுகும்" என்று இந்நூ லாசிரியர் தாமே கூறியிருத் தலால் இனிது விளங்கும். இவர், சோழநாட்டில் தில்லை யாடி யில் வேளாளர் குலத்தில் சற்றேறக் குறைய இருநூறு வரு டங்களுக்குமுன் தோன்றிப் பின்பு சீகாழியில் தங்கி, அறுபத் தேழுவயதுவரையில் வாழ்ந்து, இராமநாடகம், அநுமார் பிள் ளைத் தமிழ், சீகாழிப் புராணம் முதலிய நூல்களைச் செய்து பிரசித்திபெற்ற சீகாழி அருணாசலக் கவிராயரது புதல்வர் மூவருள் மூத்தவர். ஆகவே இவர் பிறந்தகாலம் ஏறக்குறைய நூற்றைம்பது வருடங்களுக்குமுன் என்பது விளங்குகின்றது.

இவர் புதல்வர் சுப்பராயக்கவிராயர் என்பவர் இந்நூற்செய்யுட்களின் மகுடந்தோறும், "அருமை மதவேள் அனுதினமு மனத்தினினே" என்ற அடைமொழியைச் சிவபெருமானுக்கொடுத்துக் கூறியிருத்தலால், இவர் மதவேள் என்னும் வேறுபெயருள்ள ஒருபிரபுவினால் ஆதரிக்கப்பட்டவரென்று அறியலாம். அந்தப்பிரபுவானவர், வேளாளசாதியில் தோன்றினவர் என்றும், கங்காகுலத்தவர் என்றும், மோழை பூபதி என்னும் பிரபுவினது புதல்வர் என்றும் ஈகை, அறிவு, அழகு, அதிகாரம், கீர்த்தி, முதலியவற்றிற் சிறந்தவர் என்றும் இந்நூலால்விளங்குகிறது, இந்நூலின் முதற்செய்யுளில், "மோழைபூபதிபெற்ற அதிபனேமதருமை 'மதவேள்" என்றும், ௩-வது செய்யுளில், "நீதிசேரரசனேம தருமை மதவேள்" என்றும், ஏ-வது செய்யுளில், "கங்காகுலத்தலைவன் மோழைதருமழகனேமதருமை மதவேள்" என்றும் அ-வது செய்யுளில், இவையெலா மறியுமேன தருமைமதவேள்" என்றும், க0-வதுசெய்யுளில், "கற்பதருவாகுமேம தருமைமதவேள்" என்றும், கஎ-வது செய்யுளில், "அவனிபுக ழருமைமதவேள்" என்றும், எ௩-வது செய்யுளில், "ஆழிபுடைசூழுலகில் வேளாளர்குலதிலக னேமேம தருமைமதவேள்" என்றும் எகூ-வது செய்யுளில், "பைங்குவளைமாலையணி மார்பனு மண்ணலேம தருமைமதவேள்" என்றும், கூஎ-வது செய்யுளில், "இச்சேகமேலாங் கொண்டாடவே அருள்கற்ப தருவென்ன வோங்கிடுந் தானதுரையாகுமேம தருமைமதவேள்" என்றும்: இவரை இந்நூலாசிரியர் பாராட்டிக் கூறியிருத்தல் காண்க. அறப்பள்ளி யென்பது வைப்புஸ்

தலங்களாகிய சிவஸ்தலங்களுளொன்றென்றும், அது கொல்லி மலையைச்சார்ந்தது என்றும், அதற்குச் சதுரகிரியென்னும் பெயருண்டென்றும், வைடூசதகத்தைப் பாலித்த பிரபுவானவர் கொல்லிமலையிலுள்ள குண்டுணிநாட்டுத் தலைவராகிய கருமக்கவுண்டர் என்றும், வைடூசதகத்தில் மகவேள் என்று கூறப்படுகிறவர் இவர்தாம் என்றும், போரைமுக்கவுண்டர் என்பவர் இவருடைய தந்தையென்றும் சில முதியோர் கூறுகின்றனர்.

சிவமயம்,

# அறப்பளீசுரசதகம்

## மூலமும் உரையும்.

---

காப்பு-வெண்பா.

உம்பர்கோ னெம்பெருமா னோங்கறப்பளீ சுரன்மேற்
பைப்பொருள்சே ருஞ்சதகம் பாடவே—அம்புவியோர்
ஆக்குந் துதிக்கையுளா னன்புடையார்க் கின்பருளிக்
காக்குந் துதிக்கையுளான் காப்பு.

(இ-ள்.) உம்பர்கோன்-தேவர்களுக்குத் தலைவனும், எம்பெருமான்-எம்பெருமானும் ஆகிய, ஓங்கு - உயர்ந்த, அறப்பளீசுரன்மேல்-அறப்பளீசுரர்மீது, பை பொருள் சேரும் சதகம்-வளமான அர்த்த விசேஷங்கள் கூடின ஒருசதகத்தை, பாட (நான்) பாடுதற்கு, அம் - அழகாகிய, புவியோர் - பூமியிலுள்ளோர், ஆக்கும்-செய்கிற, துதிக்கை - தோத்திரங்களை, உள்ளான்-உடையவன், அன்பு உடையார்க்கு (தன்னிடத்தில்) அன்புடையவர்களாகிய அடியார்க்கு, இன்ப அருளி - பேரின்பத்தை யருள்செய்து, காக்கும் - காக்கின்ற, துதிக்கை உள்ளான்-தும்பிக்கையுள்ளவன், (அந்தவிநாயகக் கடவுளானவன்) காப்பு-காவலாகக்கடவன் எ-று.

உம்பர்-மேலிடம், வான், அது அவ்விடத்திலுள்ள தேவரை யுணர்த்தலால் இடவாகுபெயர். கோ-அரசன், அது னக

ரச்சாரியை பெற்றுக் கோன் என்றாயிற்று. உம்பர்கோனும் எம்பெருமானுமாகிய அறப்பளீசுரன் என்றியையும். பெருமான்-பெருமையுடையோன். அம்புவி ஒருசொல்லெனக்கொண்டு உலகு எனப் பொருளுரைத்தலுமாம். அம்புவியோர் என்றது கற்றோரும்மற்றோருமாகிய இருதிறத்தாரையு முணர்த்தும், கற்றோர் கவிகளால் துதிப்பவர், மற்றோர் வாய்ச்சொற்களால் துதிப்பவர் ஆதலால், துதிக்கை - துதித்தல், இது தொழிலாகுபெயராய்த் துதித்தலையுடைய தோத்திரத்திற்காயிற்று. துதிக்கையுளான் என்பதற்கு துதித்தற்குரிய கடவுளா யிருப்பவன் என்றுரைத்தலும் பொருந்தும், இப்பொருட்கு துதிக்கு ஐ உளான் எனப் பிரித்துக்கொள்க. அன்பு-பக்தி, சைவசமயிகள் யாதேனுமோர் நூல்செய்யத் தொடங்குங்கால், முதலில் விநாயகர்கடவுள் வணக்கங் கூறுதல் மரபாதலால் இந்நூலாசிரியரும் ஆன்றோரொழுக்கப்படி உம்பர்கோனென்னும் முதற்குறிப்புள்ள இவ்வெண்பாவினால் விநாயகக் கடவுள் வணக்கங்கூறினார். இவ்வாறுகூறுதல் யாதுக்கெனின் தொடங்கும்நூல் இடையூறின்றி யினிதுமுடியுமென்பது கருதியென்க இடையூறு வாராமற் காத்தலால் விநாயகக் கடவுளுக்கு விக்நராஜர் என்னும் பெயர்வழங்கும் விநாயகர் என்பதற்குத் தமக்குமேலொரு தலைவரில்லாதவர் என்பதுபொருள் இக்காப்புச்செய்யுளில் தெய்வவணக்கமும் செயப்படு பொருளும்கூறப்படுதலால் இது தற்சிறப்புப் பாயிரம் எனப்படும். தெய்வவணக்கமாவது விநாயகக்கடவுளை வணங்குதல், செயப்படுபொருளாவது அறப்பளீசுரசதகம், ("தெய்வவணக்கமுஞ்

செயப்படுபொருளும், எய்தவுரைப்பது தற்சிறப்பாகும்") என்ப திலக்கணம். பாடுதற்கு எழுவாயாகிய நான் என்பதுவருவித்துரைக்கப்பட்டது. காப்பு என்னும் பெயர்பயனிலையோடு ஆகக்கடவன் என்பது சேர்க்கப்பட்டது. அம்புவி-நீர் சூழ்ந்தபூமியெனினுமமையும். அம்-நீர். (கடல்.) எல்லா நீர்க்கு முதலாதலால் கடலை நீரென்றே கூறலாம் எல்லா நீர்க்கும் என்றது ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பவற்றுக்கும் என்றபடி.

## உயர் பிறப்பு.

கடலுலகில் வாழுமுயி றெழுபிறப் பினுண்மிக்க
காட்சிபெறு நரசன்ம மாய்க்
கருதப் பிறத்தலரி ததினுமுயர் சாதியிற்
கற்புவழி வருத லரிது
வடிவமுட னவயவங் குறையாது பிழையாது
வருதலரிது தனினு மரிது
வந்தாலு மிதுபுண்ய மிதுபாவ மென்றெண்ணி
மாசில்வழி நிற்ற லரிது
நெடியதன வானுத லரிததி னிரக்கமுள
நெஞ்சினோ னுத லரிது
நேசமுட னுன்பதத் தன்பனுப் வருதலிந்
நீணிலத் தனினு மரிதாம்
அடியவர்க் கமுதமே மோழைபூ பதிபெற்ற
வதிபனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) கடல்-கடல்சூழ்ந்த, உலகில்-உலகத்தில், வாழும் வாழ்கின்ற, உயிர்-உயிர்களின், எழுபிறப்பினுள்-எழுவகைபிறவிகளுக்குள்ளே, மிக்க-மேலான, காட்சிபெறு-அறிவைப் பெற்ற, நரசென்மமாய்-மானுடப்பிறப்பாக, கருத-மதிக்கும்படி பிறத்தல்-பிறப்பது, அரிது-அருமையாகும், அதினும்-அதை பார்க்கினும், உயர்சாதியிற்-உயர்குலத்தில், கற்புவழிவருதல்-கற்புள்ளவமிசத்தில் பிறத்தல், அரிது அருமையாகும், அது தன்னினும் அதைப்பார்க்கிலும், வடிவமுடன்-உருவோடு அவயவம்-உறுப்புகள், குறையாது-குறையாமலும், பிழையாது-தவராமலும், வருதல்-பிறத்தல், அரிது - அரிதாகும், வந்தாலும் (அப்படி) பிறந்தாலும், இது புண்ணியம் இது பாவம் என்று எண்ணி-இதுபுண்ணியம் இது பாவம் என்றுநினைத்து மாசு இல்வழி நிற்றல் குற்றமற்றவழியில் நிற்பது, அரிது-அரிதாகும், (அதினும் - அதிற்காட்டிலும்) கொடிய தனவான் ஆதல்-பெருஞ்செல்வனாகுதல், அரிது-அரிதாகும், அதினும்-அதைப்பார்க்கிலும், இ - இந்த, நீள் நிலத்து-பெரிய நிலவுலகத்தில், நேசமுடன் - பக்தியோடு, உன்பதத்து - உன் திருவடிக்கு, அன்பனாய்வருதல்-அன்பனாகிவருதல், அரிது - அரிதாகும், அடியவர்க்கு-அடியவர்க்கு, அமுதமே-அமிர்தம்போல்பவனே, மோழைபூபதிபெற்ற அதிபன்-மோழைபூபதியீன்ற அதிபனாகிய, எமது அருமை மதவேள் என்பவன், அநுதினமும்-நாள் தோறும், மனதில்-மனத்தில், நினை தரு-நினைக்கின்ற சதுரகிரி தனில்வளர் - சதுரகிரியில் வளராநின்ற, அறப்பளீசுரதேவனே - அறப்பளீசுரன் என்னும் கடவுளே எ-று.

உயிரெழு பிறப்பு என்றது. தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவற்றை காட்சி-அறிவு, கருதல்-மதித்தல், கற்பு-ஆடவர்க்குக் கல்வியென்றும் மாதர்க்குப்பதிவிரதா தருமமென்றும் கொளக வடிவம்-முழு வடிவு அழகுமாம். அவயவம்-உறுப்புகள், அவை கால் கை முகம் தலை முதலியன. குறைதல்-உறுப்பிருந்தும் குறைந்திருத்தல், பிழைத்தல் அவயமில்லாமலேயிருத்தல் மாசில்வழி - நல்வழி (முத்திநெறி) நெடிய என்பதை தனத்துக்காதல்விசேடணமாக் குக நினைதல்- தியானித்தல், (நினைதரு) பகுதி நினைதா.

## மனையாட்டி சிறப்பு.

கணவனுக் கினியளாய் ம்ருதுபாஷி யாய்மிக்க
கமலேங்கிக ரூப வதியாய்
காய்சினமி லாளுமாய் நோய்பழி யிலாதவோர்
கால்வழியில் வந்த வளுமாய்
மணமிக்க நாணமட மச்சம்பயிர்ப் பென்ன
வருமினிய மார்க்க வதியாய்
மாமிமா மற்கிதஞ் செய்பவளு யாய்வாசல்
வருவிருந் தோம்பு பவளாய்
இணையின்மகிழ் நன்சொல்வழி நிற்பவளுமாய் பிரர்த
மில்வழி செலாத வளுமாய்
அணியிழை யொருத்தியுண்டாயினவள் கற்புடைய
ளாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) கணவனுக்கு-தன்நாயகனுக்கு இனியவள் ஆய்-இனிமையுள்ளவளாகி, ம்ருதுபாஷி ஆய்-மென்சொல்லையுடையவளாகி மிக்க-மேலான கமலேநிகர் - திருமகளைநிகர்க்கிற ரூபவதி ஆய்-வடிவுடையவளாகி, காய் சினம் இல்லாளும் ஆய்-சுடுகின்றகோபமில்லாதவளுமாகி, நோய்பழிஇல்லாதது-நோயும் பழியுமில்லாததாகிய, ஓர்-ஒப்பற்ற, கால்வழியில் வந்தவளும் ஆய்-சந்ததியில் தோன்றினவளுமாகி, மணம் மிக்க-வாசனை மிகுந்த, நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னவரும்-நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்று சொல்லும்படி யுண்டாகிய, இனிய மார்க்கவதி ஆய்-நன்னெறி யுடையவளாகி, மாமி மாற்கு-மாமிக்கும் மாமனுக்கும், இதம் செய்பவளும் ஆய்-உபசாரம் செய்பவளுமாகி, வாசற் வரு விருந்து ஓம்புபவள் ஆய்-தன் வாசலில் வந்த விருந்தினரையும் உபசரிப்பவளாகி, இணை இல் நிகரற்ற, மகிழ்நன்-கணவனது, சொல்வழி-சொல்வழியிலே நிற்பவளும் ஆய்-நிற்பவளுமாகி, வந்தி என்பெயர் இல்லாதவளும் ஆய்-மலடியென்கிற பெயரில்லாதவளுமாகி, இரதியெனவே - இரதியென்றே சொல்லும்படி, லீலைபுரிபவளும் ஆய்-லீலை செய்பவளுமாகி, பிறர் இல்வழி செல்லாதவளும் ஆய்-அந்நியரது வீட்டுவழியே போகாதவளுமாகி, அணியிழை ஒருத்தி உண்டாயின்-பெண்ணொருத்தி யுண்டானால் அவள்-அந்தப் பெண்ணானவள், கற்புடையவள் ஆகும்-கற்புடையவளாவாள், எமது அருமைமதவேள். எ-று.

கணவன்-கண்ணோட்டமுள்ளவன், கண்-கண்ணோட்டம் (தாக்ஷிண்யம்) இதில் அகாம் சாரியை, வகரம் உடம்படுமெய்,

பாஷி-பாஷிப்பவள் (பேசுகிறவள்) தாமரை மலரி லிருப்பவ ளாதலால் திருமகளுக்குக் கமலையென்னும் பெயர்வந்தது இது கமலா என்னும் வடசொற்றிரிபு, ரூபம், வடிவு, (அழகு) காய் தல், சுடுதல், அடுத்தாரைச்சுடுதலால் சினத்தைக் காய்சினம் என்றார் "சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லி யினமென்னும் ஏமப்புணையைச்சுடும்,, என்றார் பெருநாவலரு கால்வழி, சந் ததி, மணம்வாசனை, அது இங்குப் புகழைக்குறித்தது "தற் காத்துத் தற்கொண்டாற் பேணித்தகைசான்ற, சொற்காத்து சோர்விலாள்பெண்" என்பது திருக்குறள், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கும் பெண்மைக்குணங்கள் இவற்றுள், நாணமாவது பரபுருடரைக்காண நாணுதல், மட மாவது, தன்கணவன் பணிவிடை செய்தலையன்றி வேறொன் றையும் அறியாமை அச்சம்-பரபுருஷதரிசன மாத்திரையால் அஞ்சுதல் பயிர்ப்பு - பரபுருஷரைக்கண்டால் அருவருத்தல், லீலை-புணர்ச்சி அணியிழை-வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை ஆபரணமணிந்தவள் என்பது பொருள்.

நன்மக்கட் பேறு.

தங்குலம் விளக்கிடப் பெரியோர்கள் செய்துவரு
தருமங்கள் செய்துவரலுந்
தன்மமிகு தானங்கள் செய்தலுங் கனயோக
சாதக னெனப் படுதலும்
மங்குத லிலாததன் றந்தையாய் குருமொழி
மருதுவழி பாடு செயலும்

வழிவழி வருந்தமது தேவதா பத்திபுரி
மார்க்கமுந் தீர்க்கா யுளும்
இங்கித குணங்களும் வித்தையும் புத்தியு
மீகையுஞ் சன்மார்க்கமு
மிவையெலா முடையவன் புதல்வனு மவனேயே
யின்வறன் புண்ய வானும்
அங்கச விரோதியே சோதியே நீதிசே
ராசனெம தருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) தம்குலம் விளங்கிட - தமது குலமானது விளங்கும்படி, பெரியோர்கள் செய்துவரும் - பெரியோர்கள் செய்து வந்த. தருமங்கள் செய்துவாலும் - தருமங்களைச் செய்துவாலும், தன்ம மிகுதானங்கள் செய்தலும்-தரும மிகுந்த தானங்களைச்செய்தலும், கனயோக சாதகன் எனப்படுதலும்-பெரிய யோகஜாதகனென்று பிறரால் சொல்லப்படுதலும் மங்குதல் இல்லாத - குறையாத அறிவினையுடைய, தன் - தனது, தாய் தந்தை குரு - தாய் தந்தை குரு என்பவர்களுடைய, மொழி சொல்லை, மருது - மறுக்காமல், வழிபாடு செயலும் - வழிபடுதலும், வழிவழிவரும்-வமிச பாரம்பரியமாய்வந்த, தமது-தம்முடைய, தேவதாபத்திபுரி மார்க்கமும் - தேவதாபத்தியைச் செய்கிற நன்னெறியும், தீர்க்காயுளும் - தீர்க்காயுசும், இங்கித குணங்களும்-இனிய குணங்களும், வித்தையும்-கல்வியும், புத்தியும்-அறிவும், ஈகையும் - கொடையும், சன்மார்க்கமும் - நன்

னெறியும் ஆகிய, இவை யெலாம் - இவை யாவையும், உடைய வன்-உடையவனே, புதல்வன் ஆம் - புத்திரனுவன், அவனை ஈன்றவனே - அவனைப் பெற்றவனே. புண்யவான் ஆம் - புண்ணியவானுவான். அங்கஜ விரோதியே - மன்மதசத்ருவே, சோதியே-ஒளியுருவனே, நீதிசேர் அரசன்-நீதி பொருந்திய அரசனுகிய, எமது அருமைமதவேள். எ-று

தம் குலம் விளங்கிட என்றுராயினும் குலத்துக் கின மாகியகோத்தி ரத்தையும் சேர்த்துக் குலகோத்திரங்கள் விளங்கிடஎனபொருளுரைத்துக் கொள்க. பெரியோர்கள்-முன் னோர்கள், தருமங்கள் 32-வகைத்தருமங்கள் அவையாவன:— வண்ணுன், நாவிதன், காதோலை, சோலை, மடம், தடம், சுண் ணும்பு, அறவைப்பிணம்சுடல், மங்களவாத்தியம், அன்னமளி த்தல் தண்ணீர்ப்பந்தல், தலைக்கெண்ணெய், பெண்போகம், ஐயமிடல், ஆதுலர்க்குச்சாலை கட்டுவித்தல், ஏறு விடுத்தல், ஓதுவார்க்குண்டி, விலங்குக் குணவுகொடுத்தல், பிணிக்கு மருந்து கொடுத்தல், சிறைச்சோறளித்தல், பிறர்துன்பம் நீக் கல், கன்னியாதானஞ்செய்தல், கற்றவராகிய அறுசமயத் தார்க்கும் உணவுகொடுத்தல், விலைகொடுத்து உயிர்களைமீட்டு விடுதல், குழந்தைகட்குப் பால்கொடுத்தல், பிள்ளைபெறுவித் தல், குழந்தைகளை வளர்த்தல் என்பன, தானங்கள்-கோதான பூதான ஹிரண்யதானங்கள். கனயோகசாதகன் - பெரியயோ கத்திற் பிறந்தவன். மங்குதல் - புகழ்குறைதல், தீர்க்காயுள் - நெடுங்காலம் உயிர்வாழ்ந்திருத்தல், இங்கிதம் - இனிமை (நன்மை) உடையவன் என்பதனீற்றில் பிரிநிலை யேகாரம்

தொக்கது. அங்கச விரோதி - மன்மதனையெரித் ததினால் வந்தபெயர்.

## சகோதர ரொருமை.

கூடப் பிறந்தவர்க் கெய்துதுயர் தமதுதுயர்
கொள்சுகந் தஞ்சுக மெனக் [கொள்
கொண்டுதாந் தேடுபொரு ளவர்தேடு பொருளவர்
கோதில்புகழ் தம்புக ழெனத்
தேடுற்ற வவர்நிந்தை தந்நிந்தை தந்தவந்
தீதிலவர் தவமா மெனச்
சீவனொன் றுடல்வே றிவர்க்கென்ன வைந்தலைச்
சீறரவ மணிவாய் தொறும்
கூடுற்ற விரையெடுத் தோருட னிறைத்திடுங்
கொள்கைபோற் பிரி வின்றியே
கூடிவாழ் பவர்தம்மை யேசகோ தரரெனக்
கூறுவதுவே தருமமாம்
ஆடிச் சிவந்தசெந் தாமரைப் பாதனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) கூடப் பிறந்தவர்க்கு - உடன்பிறந்தவர்களுக்கு, எய்துதுயர்-உண்டாகிய துன்பம், தமது துயர் என - தமக்குண்டாகிய துன்பம் என்றும், கொள்சுகம் - அவர்களடைந்த இன்பம், தம்சுகம் என - தாமடைந்த இன்பமென்றும், கொண்டு (உட்கொண்டு, நினைத்து,) தாம் தேடுபொருள் அவர் தேடும்

பொருள் என-தாம் சம்பாதித்தபொருள் அவர் சம்பாதித்த பொருளென்றும், அவர்கொள்-அவரடைந்த, கோதுஇல் புகழ் குற்றமில்லாத புகழ், தம் புகழ் என - தமது புகழ் என்றும், தேடுற்ற அவர் நிந்தை - தேடிக்கொண்ட அவர்பழி தம் நிந்தை என-தமது பழியென்றும், தம்தவம் தமது தவம், தீது இல்-தீமையில்லாத, அவர் தவம் ஆம் என-அவர் தவமாகும் என்றும், இவர்க்கு-இவ் விருவர்க்கும், சிவன் ஒன்று-உயிரொன்று, உடல்வேறு - உடல் வேறாயிருந்தன, என கண்டோர் சொல்லும்படி, ஐந்தலை - ஐந்துதலைகளையுடைய, சீறு அரவம் சீறுகின்ற பாம்பானது, மணிவாய் தொறும் - அழகியவாய் தோறும் கூடுற்ற இரையெடுத்து-சேர்ந்த இரையை யெடுத்து ஓர் உடல் நிறைத்திடும் கொள்கைபோல் - ஒரு உடம்பை நிரப்புகிற தன்மைபோல, பிரிவு இன்றி-பிரிவில்லாமல், கூடிவாழ்பவர் தம்மையே - சேர்ந்து வாழ்கின்றவர்களையே, சகோதரர் எனக்கூறுவதுவே - சகோதரர் என்று சொல்லுதலே, தருமம் ஆம்-தர்மமாகும், ஆடி சிவந்த - நடனஞ்செய்து சிவந்த செந்தாமரைப்பாதனே - செந்தாமரைமலர்போலுந் திருவடிகளை யுடையவனே, அண்ணல் - பெருமையை யுடைய, எமதருமை மதவேள். எ-று.

கோதில்புகழ் - எக்காலத்தும் விளங்கும்புகழ். தவம்-தவப் பயன். உடல்வேறு-உடம்பிரண்டு ஐந்தலை அரவம்என வியையும், மணிமாய்-மாணிக் கத்தையடக்கும் வாய்எனினுமமையும் இரை-உண்வு, ஒருடல் என்றது ஒருவயிறு என்றபடி. பாம்புக்கு உடல் முழுதும்வயிறே யாதலால் வயிற்றை உட

லென்றேகூறினர். சகோதரர்-ஒருவயிற்றிற்பிறந்தவர்-உதரம் வயிறு- தாமரை-பொருளாகுபெயர்.

## சற்குரு வியல்பு.

வேதாந்த சித்தாந்த வழிதெரிந் தாசார
 விவரவிஞ் ஞான பூர்ண
வித்யா விசேஷசற் குணசத்ய சம்பன்ன
 வீர வைராக்ய முக்ய
சாதா ரணப்பிரிய யோகமார்க் காதிக்ய
 சமாதி நிஷ் டானுபவராய்
சட்சமய நிலைமையும் பரமந்த்ர பரதந்த்ர
 தருமமும் பர சமயமும்
நீதியி லுணர்ந்தநுத் தவமார்க்க ராய்ப்பிரம
 நிலைகண்டு பாச மிலராய்
நித்திய னந்தசை தன்யரா யாசையறு
 நெறியுளோர் சற் குரவராம்
ஆதார மாயுயிர்க் குயிராகி யெவையுமா
 மமலவெம தருமை மதவே
எனுதினமு மனதினிலை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே. ௫

(இ-ள்.) வேதாந்த சித்தாந்த வழிதெரிந்து - வேதாந்த சித்தாந்த வழிகளை யறிந்து, ஆசார விவரம் - ஒழுக்கவகை, விஞ்ஞான பூர்ண வித்யா விசேஷம் - மேலாகிய ஞான பூர்ண வித்யா விசேடம், சற்குணம் - நற்குணம், சத்யம்-உண்மை,

சம்பன்னம்-சம்பத்துடைமை, வீரவைராக்கியம் - வீரவைரா க்கியம், முக்கிய சாதாரணப்பிரியம் - முதன்மையாகிய சாதா ரணப்பிரியம், யோகமார்க்க ஆதிக்யம் - யோகமார்க்கச்சிறப்பு சமாதி நிஷ்டாநுபவர் ஆய் - சமாதி நிஷ்டை என்பவற்றை அநுபவமாக வுடையவராய், சட்சமய நிலைமையும் அறுசமய நிலைகளையும், பரமந்த்ர பாதந்த்ர தருமமும் - பரமந்த்ர பா தந்த்ர தருமங்களையும், பரசமயமும் - பரசமயங்களையும், நீதியின் உணர்ந்து - நீதியினாலறிந்து, தத்துவ மார்க்கர் ஆய்-தத்துவ நெறியை யுடையவராகி, பிரமநிலை கண்டு - பிரமப் பொருளின் நிலையைக்கண்டு, பாசம் இலர் ஆய் - பற்றில்லாத வராகி, நித்யானந்த சைதந்யராய் - நித்தியானந்த சைதன்ய ராகி, ஆசை அறுநெறி உள்ளோர் - ஆசையற்ற வழியுள்ளவ ராகி, ஆசை அறுநெறி உள்ளோர் - ஆசையற்ற வழியுள்ளவர் சற்குரவர் ஆம் - உத்தமசாரியராவர், ஆதாரம் ஆய் - ஆதார மாகி, உயிர்க்கு உயிர் ஆகி - உயிருக்கு உயிராகி, எவையும் ஆம் - மற்றெல்லாப் பொருளுமாகின்ற, அமல - அமலனே எம தருமை மதவேள் எ-று.

வேதாந்தம் - வைதிகமுடிவு (வேதமுடிவு) சித்தாந்தம் ஆகமமுடிவு (தருக்கமுடிவு) விஞ்ஞானம் - விசேட அறிவு; பூர்ணம் - நிறைவு, வித்யா விசேஷம் - கல்விச்சிறப்பு, வீர வைராக்யம் - சிறந்த வைராக்யம், வைராக்யம் - நிராசை, சா தாரணப்பிரியம் - எல்லா வுயிர்களின் மேலுமுள்ள பொது வான கிருபை, ஆதிக்யம் - மேன்மை, சட்சமயம் - ஆறுசம யங்கள், அவையாவன:—கபிலமதம், கணாதமதம், பதஞ்சலி மதம், அக்ஷபாதமதம், வியாசமதம், ஜைமினிமதம் இவையா

றும் வேதாந்த மதமெனப்படும். பௌத்தம், ஜைநம், வைரவம், காளாமுகம், உலோகாயதம், சூனியவாதம் இவையாறும் புறச்சமயமென்பர். வைதிகர், வைரவம், வாமம், காளாமுகம் மாவிரதம், பாசுபதம், சைவம், அன்றியும் புறச்சமயமாவன உலோகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம் இது சைவர் கொள்கை. வைஷ்ணவம் சைவம், சாக்தம், சௌரம், காணபதம், கௌமாரம் இவை வைதிக மதம் எனப்படும். பரமந்த்ரம் இதரமாகிய மந்த்ரங்கள், பரதந்த்ரம் - இதரமாகிய தந்திரங்கள், பரசமயம் அந்நியசமயங்கள், தத்துவம் - உண்மை, தத்துவமார்க்கம்-உண்மைவழி, சைதன்னியர் - அறிவுடையார், ஆதாரம் - இடம், அமலன் - பரிசுத்தன்.

நன்மாணாக்க ரியல்பு.

வைதாலு மோர்கொடுமை செய்தாலு மோசீறி
மாறா திகழ்ந்தாலு மோ
மனதுசற்றுகிலுங் கோணாது நாணாது
மாதா பிதா வெனக்குப்
பொய்யாம னீயென்று கனிவொடும் பணிவிடை
புரிந்துபொரு ளுட லாவியும்
புனிதவுன் றனதெனத் தத்தஞ்செய் திரவுபகல்
போற்றிமல ரடியில் வீழ்ந்து
மெய்யாக வேபரவி யுபதேச மதுபெற
விரும்புவோர் சற் சீடராம்

வினைவே ரறும்படி யவர்க்கருள்செய் திடுவதே
மிக்கதே சிகாது கடன்
ஐயா புரம்பொடி படச்செய்த செம்மலே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯

(இ-ள்.) வைதாலும் (தம்மை ஆசிரியர்) திட்டினாலும், ஓர் கொடுமை செய்தாலும் (ஒரு கொடிய தண்டனையைத் தமக்கு அவர்) செய்தாலும், சீறிமாறாது இகழ்ந்தாலும் (தம்மேல் அவ்வாசிரியர்) கோபித்து இடையறாமல் அவமதித்தாலும், மனது சற்று ஆகிலும் கோணாது - மனம் சிறிதாயினும் மாறுபடாமலும், நாணாது (ஆசிரியருக்குப் பணிவிடை செய்வதில் வெட்கப்படாமலு மிருந்து, நீ எனக்கு பொய்யாமல் மாதா பிதா என்று - நீயே எனக்குத் தவறாமல் தாயும் தந்தையுமென்று பணிமொழி கூறி, கனிவொடும் நெஞ்சுருக்கத்துடன், பணிவிடை புரிந்து (அவ்வாசிரியர்க்கு) குற்றேவல் செய்து, புனித - பரிசுத்தனே, பொருள் உடல் ஆவியும் பொருள் உடல் உயிர் என்பனவெல்லாம், உனது என - உன்னதேயென்று, தத்தம் செய்து - தத்தம்பண்ணி, இரவு பகல் போற்றி - இரவும் பகலும் துதித்து வழிபட்டு. மலர் அடியில் வீழ்ந்து (அவ்வாசிரியரது) தாமரை மலர்போன்ற சீர்பாதங்களில் வீழ்ந்து தண்டனிட்டு, மெய்பாகவே பாவி - உண்மையாகவே புகழ்ந்து, உபதேசம்பெற விரும்புவோர் (அவ்வா

சிரியரிடத்தில்) மந்திரோப தேசத்தைப் பெற்றுக்கொள்ள இச்சிப்பவர், சற்சீடர் ஆம் - நன்மாணக்கராவர். வினைவோ அறும்படி (அச்சீடரது) வினைகளின் வேரற்றுப்போகும்படி அவற்கு - அந்தச் சீடருக்கு, அருள் செய்திடுவதே - மந்திரோபதேசம் செய்தருள்வதே, மிக்க - மேலான, தேசிகரது கடன் (நல்ல ஆசிரியரது) கடனாகும், ஐயா - ஐயனே, புரம்- மூப்புரம், பொடிபடச்செய்த - பொடியாகச் செய்த, செம்மலே - பெரியோனே, அண்ணல் - பெருமையுள்ள, எமதருமை மதவேள் எ-று.

வைதாலும் செய்தாலும் இகழ்ந்தாலும் என்பவற்றில் உம்மைகள் எண்ணுப்பொருளன, செய்தலுமே இகழ்ந்தாலுமே, என்ற ஏகாரங்கள் அசைநிலை, இழிவு சிறப் பெனினுமையும், சற்றாகிலும் என்னும் உம்மை இழிவு சிறப்பு கனிவொடும் என்னும் உம்மை இசைநிறை பொருளுடனுலாவியும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயது, உன்றனது என்பதில் தன்சாரியை, பொருளுடலாவி உன்றனது என்றது பன்மையொருமைமயக்கம், தனித்தனிஉன்னுடையது என்க இரவுபகல் உம்மைத்தொகை, இரா என்பது குறிய தன்கீழாக்குறுகி உகரமேற்று இரவு என்றாயிற்று மலரடி - உவமைத்தொகை, மெய்யாகவே என்பதில் ஏகாரம் தேற்றம், உபதேசமது என்பதில் அதுபகுதிப் பொருள்விகுதி, சற்சீடராம் என்பதிலுள்ள ஆம்என்பதைத்தேற்றப் பொருளதாகவாவது அசையாகவாவதுகொள்க செய்யுமென்முற்றாகக் கொள்ளலாகாது அது

பலர்பாலுக்கு வாராததால் அருள்செய்திடுவதே என்பதில் ஏகாரம் பிரிநிலையோடு தேற்றம், ஈற்றடியிலுள்ள ஏகாரங்கள் விரியுருபுகள், மநஸ், புத்தலைச்சிவர், ஆர்ப, ஈஸ்வர, என்ற வடமொழிகள் விகாரப்பட்டன மாதா, பிதா, தத்தம், உப தேசம், தேசிகர், புரம், அநுதினம், சதுரகிரி, தேவன், என் பன வடசொற்கள் சற்று - இடைச்சொல், மாதா பிதா என் பன பெயர்ப்பயனிலையாய் நின்றன, ஆவால்எனவருவிப்பினும மையும், செம்மல், அண்ணல், என்பன ஆண்பாற் சிறப்புப் பெயர்கள், மதவேள் என்னும் மன்மதன்பெயர் இங்கு ஆகு பெயர் வகையால் ஒரு பிரபுவுக்கு வழங்கியது. அன்பிற்சிறத் தல்லால் மாதாவை முற்கூறினர் பொருளுடலாவி என்ற முறை ஒன்றினும் ஒன்றிமேற் சிறத்தலைச் குறித்தது செம்மை மே ன்மை அழகு என்பவற்றால் தாமரைமலர் அடிக்கு உவமையா யிற்று அடைகொடாமல் மலர் எனக்கூறினால் தாமரை மல ரையே குறிக்கும் மெய்யாகவே பாவுதலாவது உள்ளும்புற மும் ஒத்துப்படிதல் தீவினைபோலவே நல்வினையும் பிறப்புக் குக் காரணமாதலால் வினைவேறறப்படி எனப்போதுப்படக் கூறினர் வினைவேர் என்றது அவாவை "அவாவென்ப லெல் லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பினும்வித்து," என்பது திருக்குறள், "ஆர்வவேர்' என்பது சிந்தாமணிதேசி கர் - சிறந்த ஆசிரியர்,

திரிபுரமெரித்த கதை:—தாரகாசுரனது புத்திரர்களா கிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும்மூவரும்

பெருந்தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று, மயன் என்பவனால் சுவர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் மூன்றிடங்களிலும் முறையே பொன், வெள்ளி, இரும்பு என்பவற்றால் அரண்வகுத்து இயற்றப்பட்டு ஆகாசமார்க்கத்தில் சஞ்சரிக்குந் தன்மையுள்ள மூன்று பட்டணங்களை யடைந்து, விதிமுறை வழுவாமற் சிவபூசை செய்துகொண்டு, அந்தச் சிவபக்தி மஹிமையால் எவராலும் அழிக்கவொண்ணாதவராய் அப்படிப்பட்ட வேறுசில அசுரர்களோடு அந்த நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களில் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கிவருகையில், அந்தத் துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், திருமால் மாயையினால் ஜிநாவதாரமும் புத்தாவதாரமுஞ்செய்து பற்பல தீயவழிகளைக் கற்பித்து உபதேசித்து மயக்கி அந்த அசுரர்களைச் சிவத்துவேஷிகளாகச் செய்துவிட்டபிறகு, தேவர்கள் பிரார்த்தனையால் சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருமலையை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகாகவும் அக்கினியை முனையையுடைய அம்பாகவும், மற்றைத் தேவர்களைப் பிற போர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு, யுத்தசந்நத்தனாய்ச் சென்று போர்செய்யக் கருதிப் புன்சிரிப்புச் செய்தலும், அந்தப் புன்சிரிப்பினாலேயே அவ்வசுரர்கள் மடிந்து அவர்களுடைய பட்டணங்களும் பாழாயின என்பதாம்.

## பொருள் செயல் வகை.

புண்ணிய வசத்தினாற் செல்வமது வரவேண்டும்
 பொருளை ரட்சிக்க வேண்டும்
புத்தியுட னதுவொன்று நூறாக வேசெய்து
 போதவும் வளர்க்க வேண்டும்
உண்ணவேண் டும்பின்பு நல்லவஸ்த் ராபரண
 முடலிற் றரிக்க வேண்டு
முற்றபெரி யோர்கவிஞர் தமரா துலர்க்குதவி
 யோங்குபுகழ் தேட வேண்டும்
மண்ணில்வெகு தருமங்கள் செயவேண்டு முயர்மோக்ஷ
 வழிதேட வேண்டு மன்றி
வறிதிற் புதைத்துவைத் தீயாதபேர்களை
 மார்க்க மறியாக் குருடராம்
அண்ணலே கங்கா குலத்தலைவன் மோழைதரு
 மழகனெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே. ௭

(இ-ள்.) புண்ணியவசத்தினால் (தாம்முற்சனனத்திற்செய்த) புண்ணியவசத்தால், செல்வம் வரவேண்டும் - செல்வமுண்டாகவேண்டும், பொருளை - அந்தச்செல்வத்தை, ரக்ஷிக்கவேண்டும். - காப்பாற்றவேண்டும், புத்தியுடன்-அறிவுடனே அது - அந்தப்பொருள், ஒன்று நூறு ஆகசெய்து - ஒன்று நூறாகும்படி செய்து, போதவும் வளர்க்கவேண்டும் - (மிபா

பாராதிகளால்) மிகவும் விருத்தி செய்யவேண்டும், உண்ண வேண்டும்-உணவு முதலியவற்றைப் புசிக்கவேண்டும், பின்பு-அதன்பிறகு, நல்லவஸ்திரம் ஆபரணம் - நல்ல ஆடையாபரணங்களை, உடலில் தரிக்கவேண்டும் - உடம்பில் அணிந்துக்கொள்ள வேண்டும், உற்ற -(தம்மைவந்து) அடைந்த பெரியோர் - பெரியோர்கள், கவிஞர் - கவிவாணர் தமர்-உறவினர் ஆதுலர்க்கு - வறிஞர் என்னும் இவர்களுக்கு, உதவி - அவர் வேண்டுவன கொடுத்து ஓங்கு - உயர்ந்த, புகழ் - கீர்த்தியை தேட வேண்டும் - சப்பாதிக்கவேண்டும், மண்ணில் - இந்த நிலவுலகத்தில். வெகு தருமங்கள் செய்யவேண்டும், உயர் - உயர்ந்த, மோக்ஷ வழி தேடவேண்டும் - முத்திநெறியைத் தேடவேண்டும், அன்றி-(இவ்வாறு செய்தல்) அல்லாமல் வறிதின் - வீணாக, புதைத்துவைத்து - மண்ணிற் புதைத்துவைத்து, ஈயாதபேர்களே - கொடாதபேர்களே, மார்க்கம்அறியா குருடர் ஆம் - வழிதெரியாத குருடராவர், அண்ணலே - பெரியோனே, கங்காகுலத்தலைவன் - கங்காகுலத்தலைவனும் மோழைதரும் அழகன் - மோழைப்பூபதிபெற்ற அழகனும் ஆகிய எமது அருமைதவேள்-எ-று.

புண்ணியவசம்-புண்ணியப்பேறு (பேறு-பயன்)-செல்வமது என்பதில் அது பகுதிபொருள் விகுதிபோதவும் வளர்த்தல் - வியாபாரம் முதலியவை செய்து மிகுதியாக விருத்தி செய்தல் உண்ணவேண்டும் என்றது நன்று யநுபவிக்கவேண்டுமென்றபடி - உற்றபெரியோர் - ஞானத்தைப் பெற்ற பெரி

யோர் எனினுமாம் உதவுதல் - கொடுத்தல் மோக்ஷவழி - யோகஞானங்களாகிய முத்திநெறி, அதாவது சரியை கிரியை யோகஞானங்களாகிய நான்கு பதங்களையும் முறையாய் அநுஷ்டித்தல் வழிநின் - வினை, அதாவது தமக்கும் பிறர்க்கு முதவாமல் மண்ணிற் புதைத்துவைத்தல் ஈயாதபேர்கள் என்றது லோபிகளை மார்க்கம் - வழி, அது இங்கு நல்வழியைக்குறித்தது.

## தீவழிவிலக்கு.

வஞ்சகர் தமைக்கூடி மருவொணா தன்பிலார்
வாசலிற் செல்லொணாது
வாதெவ ரிடத்திலும் புரியொணா தறிவிலா
மடையர்முன் னிற்கொணாது
கொஞ்சமே னுந்தீது செய்யொணா தொருவர்மேற்
குற்றஞ்சொ லொண்ணாதயற்
கோதையர்க ளோடுபரி காசஞ்செ யொண்ணாது
கோளுரைகள் பேசொணாது
நஞ்சுதரு மரவொடு பழகொணா திருள்வழி
நடந்துதனி யேகொணாது
நதிபெருக் காகினதி னீஞ்சல்செய் யொண்ணாது
நல்வழி மறக்கொணாது
அஞ்சாம லரசர்முன் பேசொணா தினையெலா
மறியுமெம தருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) வஞ்சகர் தமைகூடி மருவொணாது - கபடஜனங்களைச்சேர்ந்து நட்புச்செய்யலாகாது, அன்பு இல்லார் - அன்பில்லாதவரது, வாசலில் செல்லொணாது - வாசலுக்குப்போகலாகாது, எவரிடத்திலும் வாதுசெய்யலாகாது, அறிவு இல்லா மடையர்முன் நிற்கொணாது - அறிவில்லாத மடையருக்கெதிரே நிற்கலாகாது, கொஞ்சமேனும் தீது செய்யொணாது - சிறிதாயினும் தீமைசெய்யலாகாது ஒருவர்மேல் குற்றம் சொல்லொண்ணாது - ஒருவர்மீது குற்றம் சொல்லலாகாது, அயல் கோதையர்களோடு - அந்நிய மாதர்களுடன் பரிகாசம் செய்யலாகாது கோள் உரைகள் பேசொணாது - கோட்சொற்களைச் சொல்லலாகாது நஞ்சுதரும் விஷத்தைத் தருகிற அரவோடும் பாம்புடனே பழகொணாது - பழகலாகாது, இருள்வழி - இருட்டுவழியில், தனி - தனிமையாகநடந்து ஏகொணாது-நடந்துபோகலாகாது, நதி-ஆறானது, பெருக்கு ஆபின் - பெருக்காயிருந்தால் அதில் - அந்நிலை, நீஞ்சல் செய்யொண்ணாது - நீந்தலாகாது நல்வழி மறக்கொணாது - நன்னெறியை மறக்கலாகாது அரசர்முன் - அரசருக்கெதிரில், அஞ்சாமல் பேசொணாது இவை எல்லாம் அறியும் இவைபாவுமறிகின்ற எமதருமைமதவேள்-எ-று.

கபடகுண முள்ளவர்களோடு கூடினால் தீமையுண்டாமாதலால் "வஞ்சகர் தமைக்கூடி மருவொணாது" என்றும் அன்பில்லாதவரது வாசலிற் சென்றால் அவமானமுண்டாமாதலால் 'அன்பிலார் வாசலிற்செல்லொணாது' என்றும் வெற்றி

தோல்விகள் ஒருவர் பங்கல்ல வாதலால், 'வாதெவரிடத்திலும் புரியொணாது' என்றும், அவிவேகிகளுக்கெதிரே நின்றால் தமக்கு அனர்த்தமுண்டாமாதலால் 'அறிவிலா மடையர்முன் னிற்கொணாது' என்றும், சிறிது தீமைசெய்யினும் அது பெருந் தீமைக்குக்காரண மாதலால், கொஞ்சமேனுந் தீதுசெய் யொணாது என்றும் ஒருவர் குற்றத்தை யெடுத்துச்சொல்லுவாராதலால் ஒருவர்மேற் குற்றஞ்சொல்லொண்ணாது என்றும் பிறர் மனைவியரோடு அசதியாடினால் உயிர்க்கிறுதி நேரிடுமாதலால் அயற்கோதையர்களோடு பரிகாசஞ்செய்யொண்ணாது என்றும் ஒருவர்மேற் கோட்சொன்னால் அவர் தம்மீது கோட்சொல் லுவாராதலால் கோளுரையில் பேசொணாது, என்றும், பாம் போடுபழகினால் அது எக்காலத்தும் விஷத்தையே தருமாத லால் நஞ்சுதரு மாவொடும் பழகொணாது என்றும், இருட்டு காலத்தில் தனியே சென்றால் அனேக ஆபத்துகள் நேரிடுமா தலால் 'இருள்வழிநடந்து தனியேகொணாது' என்றும் பெருக் காற்றில் நீந்தினால் அது இழுத்துக் கொண்டு சென்று கட லிற் சேர்க்குமாதலால் 'நதிபெருக்காகின தினீஞ்சல் செய்யொ ண்ணாது, என்றும் சன்மார்க்கத்தை மறந்தால் நரகப்ராதியு ண்டா மாதலால் நல்வழி மறக்கொணாது என்றும் அரசர்க் கெதிரே அச்சமில்லாமற் பேசினால் தண்டனைக்குள் சினையுண் டாமாதலால் அஞ்சாம லரசர்முன் பேசொணாது என்றும், கூறினர்.

## ஒன்றற்கொன் றழகுசெய்வன.

வாழ்மனை தனக்கழகு குலமங்கை குலமங்கை
வாழ்வினுக் கழகு சிறுவர்
வளர்சிறுவ ருக்கழகு கல்விகல் விக்கழகு
மாநிலந் துதிசெய் குணமாம்
சூழ்குண மதற்கழகு பேரறிவு பேரறிவு
தோன்றிடி லதற் கழகுதான்
மாதவ மேன்மையுப காரம்விர தம்பொறுமை
சொல்லரிய பெரியோர்களைத்
தாழ்தல்பணி விடைபுரிதல் சீலநேசங்கருணை
சாற்றுமிவை யாமென்பர் காண்
சௌரிமல ரோனமரர் முனிவர்முச் சுடரெலாஞ்
சரணமெமை ரட்சியெனவே
ஆழ்கட லுதித்துவரு விஷமுண்ட கண்டனே
யண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) வாழ்-(ஒருவன் இல்லறத்தோடு கூடி) வாழ்கின்ற மனை தனக்கு-வீட்டுக்கு, அழகு-அழகு, குலம்-(உயர்) குலத்திற்பிறந்த, மங்கை-மனைவியாவள், குலமங்கை வாழ்வினுக்கு அந்தக் குலமங்கையோடு கூடிவாழும் இல்வாழ்க்கைக்கு அழகு அழகு சிறுவர்-புதல்வராவர், வளர்சிறுவருக்கு- (அப்படி பிறந்து) வளர்கின்ற சிறுவருக்கு, அழகு-அழகு, மாநிலம் துதி

செய் குணம்ஆம்-பெரிய நிலவுலகத்தாரெல்லாராலும், நோக்
திரஞ் செய்யப்படுகிற நற்குணமாம் சூழ்குணமதற்கு-(அவ்
வாறு) நிறைந்த நற்குணத்துக்கு, அழகு-அழகு; பேர்அறிவு
(பலவற்றையும் அறிகின்ற சிவ ஞானமாம், பேர் அறிவு நோ
ன்றிடின்-(அப்படிப்பட்ட) சிறந்த ஞானமுண்டானால் அதற்கு
அந்த ஞானத்துக்கு; அழகு-அழகு தூயதவம்-பரிசுத்தமான
தவமும், மேன்மை பெருங்குணமும் உபகாரம்-(பிறர்க்கு உப
கரித்தலும், விரதம்-விரதங்களை அநுஷ்டித்தாலும் பொறு
மை -(பிறர்செய்தகுற்றத்தை) பொறுத்துக்கொள்ளுதலும்,
சொல் அரிய பெரியோர்களை தாழ்தல்-சொல்லுதற்கரிதாகிய
(சிறப்பினையுடைய) பெரியோர்களைவணங்குதலும் பணிவிடை
புரிதல்-அவர்களுக்கு) தொண்டுசெய்தலும், சீலம்-நல்லொழு
க்கம், நேசம்-நட்புக்குணமும் கருணை-அருளும் (என்று) சாற்
றும்-சொல்லப்பட்டவை இவை ஆம்-இவைகளாகும், என்பர்-
என்றுசொல்லுவார் (அறிவுடையோர்) சௌரி - திருமாலும்,
மலரோன்-பிரமனும், அமரர்-(இந்திரன்முதலிய) தேவர்களும்
முனிவர்-இருடிகளும், முச்சுடர்-முச்சுடர்களும் ஆகிய, எல்
லாம்-யாவரும் சரணம் அடைக்கலம், எம்மை ரக்ஷி-எங்களைக்
காப்பாற்றுவாயாக எனவே-என்று வேண்டுதலும், ஆழ்கடல்
உதித்துவரு ஆழ்ந்த பாற்கடலிற்றோன்றிவெளிப்பட்ட விடம்
உண்ட நஞ்சையுண்ட, கண்டனே - ஸ்ரீகண்டனே, அண்
ணல் பெருமை பொருந்திய, எமதருமை மதவேள்-எ-று.

உபகாரம், வரதம், சீலம், கருணை, சௌரி, அமரர், சர
ணம், விஷம், கண்டம், என்பன வடசொற்கள் பெரியோர்

என்றது அறிவு ஒழுக்கம் வயது என்பனவற்றால் முதிர்ந்தவர்களை நேசம்-நேயமென்பதன்போலி சௌரி-சூரன் என்னும் அரசனது குலத்திற்பிறந்தவன் சூரன்-ஸ்ரீகிருஷ்ணனது தந்தையாகிய வசுதேவனது தந்தை மலரோன் திருமாலின் உந்தித்தாமரை மலரிற் பிறந்தவன் அமரர்-மரணமில்லாதவர், இது மங்கலவழக்கு ஆழ்கடல் விடக்கொடுமையை விழுங்கிய வரலாறு-திருமாலின் கட்டளைப்படிதேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு திருப்பாற்கடல் கடையும்போது அதிலிருந்துண்டானதாகிய அதி பயங்கரமான ஆலகாலம் என்னும் பெரிய நஞ்சைக் கண்டவுடனே அதன் வேகத்தைப் பொறுக்கமாட்டாதவர்களாய் அஞ்சியோடிச் சரணமடைந்த தேவர்களுடைய வேண்டுகோளுக்குத் திருவுளமிரங்கிச் சிவபெருமான் அந்தநஞ்சை அமுதுசெய்து தன்கண்டத்தில் நிறுத்தி தேவர் முதலிய யாவரையும் காத்தருளினர் என்பதாம்.

ஒன்றில்லாமையாற் பயன்படாதவை.

கோவில்லா தவூர் நாசியில் லாமுகங்
கொழுநனில் லாதமடவார்
குணமதில் லாவித்தை மணமதில் லாதமலர்
குஞ்சர மிலாத சேனை
காவில்லா தபயிர் பாலரில்லா தமனை
கதிர்மதி யிலாத வானங்
கவிஞரில் லாதசபை சுதிலயை யிலாதபண்
காவல ரிலாத தேசம்

ஈவதில் லாததன நியமமில் லாதசெப
மிசைலவண மில்லாத வூ
ணிச்சையில் லாதபெண் போகநல மிவைதம்மி
னேதுபல னுண்டு கண்டாய்
ஆவியனை யாட்கிடந் தந்தவா கற்பதரு
வாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) கோவில் இல்லாத ஊர்-கோயிலில்லாத ஊரும் நாசி இல்லா முகம்-மூக்கில்லாதமுகமும், கொழுநன் இல்லாத மடவார்-கணவனில்லாத பெண்ணும், குணமது இல்லாதவித்தை-குணமில்லாத கல்வியும், மணமது இல்லாதமலர்-வாசனையில்லாத பூவும், குஞ்சரம் இல்லாத சேனை-யானையில்லாதசேனையும் காவல் இல்லாதபயிர் - காவலில்லாதபயிரும் பாலர் இல்லாதமனை - சிறுவரில்லாதவீடும், கதிர்மதி இல்லாதவானம்-சூரிய சந்திரர்களில்லாத ஆகாயமும்; கவிஞர் இல்லாதசபை-கவிவாணரில்லாதசபையும், சுதிலயை இல்லாதபண்-சுதிலயைகளில்லாதபண்ணும், காவலர் இல்லாததேசம் அரசரில்லாத தேசமும் ஈவது இல்லாதனம் - ஈகையில்லா தனமும் நியமம் இல்லாதசெபம் - நியமமில்லாத செபமும், இசைலவணம் இல் லாத ஊண் - சொல்லப்பட்ட உப்பில்லாத உணவும் இச்சை இல்லாதபெண்-போகநலம் விருப்பமில்லாத பெண்ணின் அநுபவ சுகமும் (ஆகிய) இவை தம்மின்-இவைகளால். ஏது பலன் உண்டு-யாதுபயனுளது, ஆவி அனையாட்கு-உயிரையொத்தவர்

களுக்கு, இடம் தந்தவர் - இடம் கொடுத்தவனே கற்பதரு ஆகும் கற்பகத்தருவை நிகர்த்தவனாகிய எமதருமைமதவேள்.

கோவில் கோயில் என மருவி வழங்குதலுமுண்டு கோவில்-தேவாலயம், கோ-தெய்வம், இல்-வீடு, மடவார்-இளம் பெண்-மடமை-இளமை-கல்விக்கு நற்குணம் பொருத்தமாதலால் குணமதில்லா வித்தையென்பதில் குணம் - நற்குணமெனப் பொருள்படும் மலர்-மலர்தலையுடையது இது முதனிலைத் தொழிலாகுபெயர் சேனை-படை யானை குதிரை, காலாள்,என்னும் நால்வகைப் படையினுள்ளும் யானைப்படை சிறந்ததாதலானும் அதில்லாத படை சிறவாதாதலானும் குஞ்சரமில்லாதசேனை என்றார் காவல் காத்தல் (பட்டிமாடு முதலியவற்றால் அழிவுபடாமற்காப்பாற்றும்) பயிர்-தானியாதிகளின்விளைசல் பாலர்-இளஞ்சிறுவர், கதிர்-கிரணம் இது சினை யாகுபெயராய்க் கிரணங்களை யுடைய சூரியனை யுணர்த்திற்று கதிர்மதி கதிரும்மதியும் என உம்மைத்தொகையர்க்கினு மமையும் கவிஞர்-வித்துவான்கள் பண்-இங்கு இராகத்துக்காயிற்று காவலர் காத்தற்றொழிவல்லார் (அரசர்) தேசம்-நாடு தனம்-பொருள், நியமம் - ஏற்பாடு செபம் - ஜெபித்தல் (உருபோடுதல்) இசைத்தல் அறுசுவையிற்சிறந்த தென்று புகழ்ந்து சொல்லுதல். போகநலம் - புணர்ச்சியின்பம். இவைதம்மின் என்பதில் தம் சாரியை. இன் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தது, ஏ - என்னும் வினை எதிர் மறையாய் இல்லையெனப் பொருள்பட்டது கண்டாய் - முன்னிலையசை யிடைச்சொல். ஆவியனையாள் என்றது உமாதேவியாரை உயிரில்லாத வுடம்பு

இயங்காதவாறுபோலச் சிவசத்தியாகிய உமாதேவி யில்லாத விடத்துச் சிவபெருமானும் இயங்கார் என்பது தோன்றி, 'ஆவியனையாட் கிடந்தந்தவா' என்றார். "சிவமேனும்பொருளு மாதிசத்தியோடு சேரினைத்தொழிலும் வல்லதாம், இவள் பிரிந்திடினியங்குதற்கு மரிதரிதெனுமறை யிரைக்குமால்" என்றார் பிறரும். இடம் - இடப்பாகம். உடம்பும் உயிரும் முறையே இடமும் இடத்து நிகழ்பொருளு மாதல்போல, சிவ பெருமானும் உமாதேவியாரும் முறையே இடமும் இடத்து நிகழ்பொருளு மாதலால் இம்முறையாலும் சத்திக்கு ஆதிக் கியந் தோன்றுதலறிக. கல்பகதரு என்னும் வடசொல் ஈறு சிதைந்து கற்பகதரு என வந்தது.

## ஒன்றற்கொன்று தகாதசேர்க்கை.

பூததயை யில்லாத லோபிய ரிடத்திலே
பொருளை யருளிச் செய்தனை
புண்ணியஞ் செய்கின்ற சற்சன ரிடத்திலே
பொல்லாத மிடி வைத்தனை
நீதியகன் மூடர்க் கருந்ததி யெனத்தக்க
நெறி மாதரைத் தந்தனை
நிதானமுள வுத்தமர்க் கிங்கித மிலாதகொடு
நீலியைச் சேர் வித்தனை
சாதியி லுயர்ந்தபே ரீனர்பின் னேசென்று
தாழ்ந்து பாவச் செய்தனை
தமிழருமை யறியாத புல்லர்மேற் கவிவாணர்
தாம்பாட வே செய்தனை

ஆதர விலாமலிப் படிசெய்த தென்சொலா
யமலனெம தருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கக

(இ-ள்.) பூசுதலை இல்லாத லோபியர் இடத்திலே - பூசு தலையில்லாத லோபிகளிடத்தில், பொருளை அருளிச்செய் தனை - பொருளை யருள்செய்தாய், புண்ணியம் செய்கின்ற சற் சனர் இடத்திலே - புண்ணியத்தைச்செய்கிற நன்மக்களிடத் தில், பொல்லாத மிடி வைத்தனை-பொல்லாத வறுமையை வைத் தாய், நீதி அகல் மூடர்க்கு - நீதியற்ற மூட ஜனங்களுக்கு, அருந்ததி எனத் தக்க - அருந்ததியென்று சொல்லத்தகுந்த, நெறி - நெறியையுடைய, மாதரை தந்தனை - பெண்களைக் கொடுத்தாய், நிதானம் உள்ள உத்தமர்க்கு - நிதானத்தை யுடைய உத்தம ஜனங்களுக்கு, இங்கிதம் இல்லாத கொடுமீவி களைச் சேர்த்தாய், சாதியில் உயர்ந்தபேர் - சாதியிற் சிறந்த பேர்கள், ஈனர்பின்னே சென்று-ஈனசாதியார் பின்னேபோய், தாழ்ந்து பரவச்செய்தனை - பணிந்து தோத்திரஞ் செய்யச் செய்தாய், தமிழ் அருமை அறியாத தமிழினது அருமை யைத் தெரிந்துக் கொள்ளாத, புல்லர்மேல் - அற்பர்மீது, கவி வாணர் பாடச்செய்தனை-கவிவாணர் பாடும்படி செய்தாய், ஆதர வு இல்லாமல் - கிருபையில்லாமல், இப்படி செய்தது - இவ் வாறு செய்தது, என்-என்னே, சொலாய் - சொல்லுவாயாக அமல-அமலனே, எமதருமை மதவேள் எ-று.

பூததயை-உயிர்கள்மே லருள். லோபியர்-உலுத்தர்-மிடி தரித்திரம். அருந்ததி - வடமீன், வசிட்டமுனிவர் மனைவி. இவள் கற்பிற் சிறந்தவளாதலால் இவளை உலகத்துப் பெண்களெல்லாரும் தமது பதிவ்ரதம் கெடாதிருக்கும்படி கிருபை செய்யவேண்டுமெனப் பிரார்த்தித்து வணங்குவது பிரத்தியக்ஷம். நெறி-கற்புநெறி. நிதானம் - காந்தகுணம். கொடுநீலி-கொடிய பாசாங்குக்காரி. ஈனம்-இழிவு. தமிழருமை-தமிழ்ப் பாடல்களினருமை. ஆதரவு - இரக்கம் எனினும் பொருந்தும்.

## குணக்கேடரியல்பு.

மாறாத கலைகற்று நிலைபெற்ற சபையிலே
வாயிலா தவனொரு பதர்
வாள்பிடித் தெதிரிவரி னோடிப் பதுங்கிடு
மனக்கோழை தானொரு பதர்
ஏறு வழக்குரைத் தனைவருஞ் சீசியென்
றிகழநிற் பானொரு பத
ரில்லாள் புறஞ்செலச் சம்மதித் தவளோ
டிணங்கி வாழ்பவ னொருபதர்
வேறொருவர் மெச்சாது தன்னையே தான்மெச்சி
வீண்பேசு வானொரு பதர்
வேசையர்க ளாசைகொண் டுள்ளளவு மனையாளை
விட்டுவிடு வானொரு பதர்
ஆறாத துயரையு மிடியையுந் தீர்த்தருள்செ
யமலவெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கஉ

(இ-ள்.) மாறாத கலைகற்றும்-மாறுபடாமைக்கேதுவாகிய நூல்களைக்கற்றும், நிலைபெற்ற சபையிலே - நிலைபெற்றசபையின் கண், வாய் இல்லாதவன் - வாய்பேசாதவன் ஒருபதர்-ஒருபதராவன் எதிரி-பகைவன் வாள் பிடித்துவரின்-வாளேந்தி வந்தால், (அதைக்கண்டு) ஓடி பதுங்கிவிடும் - ஓடிப்பதுங்குகின்ற, மனக்கோழை-மனக்கோழை, ஒருபதர்-ஒருபதராவன் எறு வழக்கு உரைத்து - எறு வழக்குப்பேசி, அனைவரும்-எல்லாரும், சீசி என்று இகழ நிற்பான் - சீசியென் றிகழும்படி நிற்பவன், ஒரு பதர் - ஒருபதராவன், இல்லாள் - மனையாள், புறம் செல்ல சம்மதித்து - வெளியே போகச் சம்மதித்து, அவளோடு - அவளுடனே, இணங்கி வாழ்பவன்-கூடி வாழ்பவன், ஒருபதர் - ஒரு பதராவன், வேறு ஒருவர் மெச்சாது-வேறொருவர் மெச்சாமல், தன்னையேதான் மெச்சி-தன்னைத் தானே மெச்சிக்கொண்டு, வீண்பேசுவான்-பயனற்ற சொற்களைச் சொல்லுவோன், ஒரு பதர்-ஒரு பதராவன், வேசையர்கள் ஆசைகொண்டு - வேசையர்மீது இச்சைகொண்டு உள்ளவும்-தானுள்ளளவும், மனையாள-மனைவியை விட்டுவிடுவான்-விட்டுவிடுவோன், ஒருபதர்-ஒருபதராவன், ஆறாததுயரையும்-தணியாத துன்பத்தையும், மிடியையும் - வறுமையையும், தீர்த்துஅருள்செய் - நீக்கியருள்செய்கிற, அமல-பரிசுத்தனே எம தருமை மதவேள் எ-று.

மாறாத கலை-குணம் வேறுபடாமைக் கேதுவாகிய நூல்கள், அவை தர்க்கம் வியாகரணம் முதலாயின, கற்றும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு நிலைபெற்ற சபை அறிவுடை

யோரால் நிறைந்த சபை, வாய் என்றது வாயிலுண்டாகும் சொல்லை, பதர்-பதர்க்கு நிகராய்ப் பயனற்றவனுனவன். பதர் நெல் முதலானவற்றில் உள்ளீடில்லாதிருப்பதாகிய உமிக்கூடு. பதுங்குதல் - மறைதல், கோழை - அச்சம், மனக்கோழை மனத்தில் அச்சமுள்ளவன். (மனோதர்மமில்லாதவன்) வழு வழக்கு நியாயசபைக்கு ஏற்காதவழக்கு - விவகாரம். புறஞ் செல்ல என்றது இங்குவியபிசரிக்க என்றபடி, வேறொருவர் அயலார். ஆண்-பயனில்சொல். ஆசை-மோகம்,

## செயத்தக்கவை.

வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டுங்கற்ற
வழியிலே நிற்க வேண்டும்
விளைகட றிரிந்துபொரு டேடவேண்டுந்தேடி
வளரறஞ் செய்ய வேண்டும்
சிலமுடைய யோர்களைச் சேரவேண் டும்பிரிதல்
செய்யா திருக்க வேண்டும்
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் டுங்கொண்டு
த்யாகங் கொடுக்க வேண்டும்
ஞாலமிசை பலதரும நாட்டவேண் டும்நாட்டி
நன்றாய் நடத்த வேண்டும்
நம்பனிணை யடிபூசை பண்ணவேண் டும்பண்ணி
னுலுமிகு பத்தி வேண்டும்
ஆலமர் கண்டனே பூதியணி முண்டனே
யனகவெம தருமை மதவே
எனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கரு

(இ-ள்.) வாலிபந்தன்னில் - பாலியத்தில், வித்தை கற்க வேண்டும் - கல்விகற்கவேண்டும், கற்ற வழியிலே நிற்கவேண் டும், கற்றதன் பயனாகிய நல்வழியிலே நிலைத்திருக்கவேண் டும், வளைகடல் திரிந்து- (உலகை) வளைத்திருக்கிற கடலின் மீதுலாவி, பொருள்தேடவேண்டும் - திரவியத்தைச் சம்பா திக்கவேண்டும், தேடி - சம்பாதித்து, வளர் அறம் செய்ய வேண்டும்-விருத்தியடைவதற்கேதுவாகிய தருமைத்தைச்செய் யவேண்டும், சீலமுடையவர்களைச் சேரவேண்டும்-நல்லொழுக் கமுள்ளவர்களைக் கூடவேண்டும், (கூடினபிறகு) பிரிதல் செய் யாது இருக்கவேண்டும் (அவர்களைவிட்டு) பிரியாதிருக்கவேண் டும் செந்தமிழ்ப்பாடல்கள் பலகொள்ளவேண்டும் செந்தமிழ்ப் பாடல்கள் பலவற்றையும் ஏற்கவேண்டும், கொண்டு - ஏற்று, த்யாகம் கொடுக்கவேண்டும்-பாடும்) புலவருக்கு) தியாகம்செய் யவேண்டும ஞாலமிசை - உலகின்மேல் பலதருமம் நாட்டவே ண்டும்-பலவகையாகிய தருமங்களை நிலைநிறுத்தவேண்டும், நா ட்டி-நிலைநிறுத்தி, நன்றாய்நடத்தவேண்டும்-(அவற்றை) செவ் வையாக நடத்திவரவேண்டும், நம்பன் - சிவபெருமானது, இணை அடி - இரண்டு சீர்பாதங்களையும், பூசைபண்ணவேண் டும்-பூசைசெய்யவேண்டும் பண்ணினாலும்-செய்தாலும், மிகு பக்திவேண்டும், ஆலம்அமர்கண்டனே - நஞ்சமர்ந்த கண்டத் தை யுடையவனே, பூதி அணிமுண்டனே-திருநீறணிந்தநெற் றியையுடையவனே அநக-பரிசுத்தனே, எமதருமை மதவேள்

பால்யம் என்னும் வடசொல் வாலிபம் எனத்திரிந்து வந் தது வித்யா என்னும் வடசொல்லின் இறுதி ஆகாரம் ஐயாகி

வித்தையென்றுயிற்று கற்றவழி என்றதனால் வழி நல்வினை குறித்தது வளையென்னுந் தொழிற்கேற்ற உலகு எனவுந் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது சடல்திரிந்து எனது கப்பலேறிக் கடலிலுள்ள திபாந்தரங்களுக்குப்போ என்ற படி வளரறம் செய்பவன் வளர்தற்கேதுவாகிய அறம் ... த்தின் சிறப்பு, "சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத ... காக்க மெவனோ வுயிர்க்கு" என்னுந் திருக்குறளால் ... விளங்கும் சேரவேண்டும் பிரிதல் செய்யாதிருக்க ... என விதித்தலால் சீலமுடையோர் என்றது நல்லொழுக்க முடையோரை செந்தமிழ்ப்பாடல் செந்தமிழாற் பா... நூல், பல என்றது அந்தாதி கலம்பகம் மாலை உலா ... முதலியவற்றை.

மேன்மே லுயர்ச்சி.

தன்மட்டி லிரவாது சீவனஞ் செய்பவன்
சாமர்த்திய முள புருடனாஞ்
சந்ததம் பதின்மரைப் காப்பாற்று வோன்மிக்
தாணிபுகழ் தரு தேவனும்
பொன்மட்டி லாமலிந் தொருநூறு பேரைப்
புரப்பவன் பொருவி லிந்த்ரன்
புவிமீதி லாயிரம் பேர்தமைக் காப்பாற்று
புண்ய வானே பிரமனாம்
நன்மைதரு பதினா யிரம்பேர் தமைக்காத்து
ரட்சிப்பவன் செங்கண்மா

ஞானமிவன் மேலதிக மாகுமெவகு பேர்க்குதவு
நரனே மகா தேவனும்
அன்மட்டு வார்குழலி பாகனே யேகனே
யண்ணலெம தருமதவே
னனுதினமு மனதினினை தருசதுர கிரிவளா
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்) தன்பட்டில் - தன்னளவில், இரவாது - யாசிக்காமல், சீனைப் செய்டவன் - சீவநம் செய்பவனே, சாமர்த்தியம் உள்ள - சமர்த்துள்ள புருடன் ஆம் - மனிதனாவான், சந்ததம் - எப்பொழுதும், பதின்பரைக் காப்பாற்றுவோன் - பத்துப்பேரைக் காப்பாற்றுகிறவன், மிக்கதாரணி புகழ்தரு - மேன்மையாகிய இவ்வுலகத்தார் புகழ்தற்குரிய, தேவன் ஆம் - தேவனாவான், பொன் - பொன்னை, பட்டு இல்லாமல் ஈந்து - அளவில்லாமற் கொடுத்து, ஒரு நூறுபேரை புரப்பவன் - ஒருநூறு பேரைக் காப்பாற்றுகிறவன், பொருவு இல் - ஒப்பற்ற; இந்திரன் - இந்திரனவான், புவிமீதில் - உலகினிடத்தில், ஆயிரம் பேர்களை காப்பாற்று - ஆயிரம்பேரைக் காப்பாற்றுகிற, புண்ணியவானே - புண்யவானே, பிரமன் ஆம்-பிரமனானவன், நன்மைதரு-நன்மையைச்செய்கிற, பதினாயிரம்பேர்தமை-பதினாயிரம் பேர்களை, காத்துரக்ஷிக்கிறவன்,செங்கண்மால் திருமாலாவன் நாளும்-நாள்தோறும், இவன்மேல்-இவனுக்குமேல், அதிகம் உதவி ஆக-மிகுதியாக. வெகுபேர்க்கு உதவும்-அநேகம் பேருக்கு உதவிசெய்கிற, நரனே - நரனே, மகாதேவன் ஆம்-மகாதேவனவன், அல் - இருட்டைப்போன்ற, மட்டுவார் குழலிபாக

னே - தேனொழுகாநின்ற கூந்தலை யுடையவளாகிய உமாதேவி பங்கனே, ஏகனே-ஒப்பற்றவனே, அண்ணல்-பெருமைபொருந் திய, எமதருமை மதவேள். எ-று.

சீவகஞ் செய்பவன் - உயிர் வாழ்பவன். இரவாது சீவகஞ் செய்பவன் என்றதனால் இரத்தற்றொழிலொழிய வேறெந்தத் தொழிலாயினுஞ்செய்து சீவிப்பவன் என்றாயிற்று இரத்தல் இழிதொழில் என்பதனை, "ஏற்பதிகழ்ச்சி" "கரவாது வந்தி யுங் கண்ணன் னார் கண்ணும், இரவாமைகோடியுறும்" "ஆவி ற்கு நீரென் றிரப்பினு நாவிற், கிரவினிளி வந்ததில்" என்ற மேலோர் திருவாக்குகளால் அறியலாம். புகழ்தரு என்பதற் குப் பகுதி புகழ்தா, புரத்தல் - காப்பாற்றுதல். பதினாயிரம் பேர்தமை என்பதில்தம்சாரியை. மகாதேவன்-சிவபெருமான் அல்குழலி, மட்டுவார்குழலி என்றியைத் துரைத்துக்கொள்க. புருடன், தேவன், இந்திரன், பிரமன், செங்கண்மால், மகா தேவன் என்னுஞ் சொற்கள் மேன்மேலுயர்ச்சியைத் தருதல் காண்க.

## செயற்கருஞ்செயல்.

நீர்மே னடக்கலா மெட்டியுந் தின்னலா
நெருப்பை நீர்போற் செய்யலாம்
நெடியபெரு வேங்கையைக் கட்டியே தழுவலா
நீளரவி னைப்பூண லாம்
பார்மீது மணலைச் சமைக்கலாஞ் சோறெனப்
பசியுடனே யுண்ணலாம்

பாணமொடு குண்டுவில கச்செய்ய லாமரப்
பாவை பேசப் பண்ணலாம்
ஏர்மேவு காடியுங் கடையுற்று வெண்ணெயு
மெடுக்கலாம் புத்தி சற்று
மில்லாத மூடர்த மனத்தைத் திருப்பவே
யெவருக்கு முடியாது காண்
ஆர்மேவு கொன்றைபுனை வேணியா சுரர்பரவு
மமலனே யருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

கரு

(இ-ள்.) நீர்மேல் நடக்கல் ஆம் - நீரின்மேல் நடத்தலும் கூடும், எட்டியும் தின்னல் ஆம்- (மிகவுங் கசக்கு மியல்புள்ள) எட்டிப் பழத்தையும் தின்னுதல் கூடும், நெருப்பை (சுடுமியல்புள்ள(நெருப்பையும் நீர்போல்செய்யல் ஆம் - நீர்போல (குளிர்ந்ததாகவும்) செய்தல் கூடும், நெடியபெருவேங்கையை - நீண்ட பெரிய நெடும்புலியை, கட்டியே தழுவல் ஆம் - (கைகளால்) கட்டி யணைத்தலுங் கூடும், நீள் அரவினை - நீண்ட பாம்பை, பூணல் ஆம்- (அதன் வேகத்தை யடக்கி) ஆபரணமாகத் தரித்துக் கொள்ளுதலுங்கூடும், பார்மீதுமணலை பூமியின்மேலுள்ள மணலை, சோறு என - சோறென்று சொல்லும்படி, சமைக்கல் ஆம் சமைத்தலுங் கூடும், (அப்படி சமைத்த சோற்றை) பக்ஷமுடனே உண்ணல் ஆம் - அன்புடனே புசித்தலுங்கூடும், பாணமொடு குண்டு-பாணத்தோடு குண்டையும் விலகச் செய்யல் ஆம் - விலகிப்போகும்படி செய்தலுங்கூடும், மரப்பாவை

மரத்தாற் செய்யப்பட்ட பதுமையை, பேசப்பண்ணல் ஆம் - பேசப் பண்ணுதலுங்கூடும், ஏர்மேவு காடியை-அழகு பொருந்திய காடிநீரை, கடையுற்று (தயிர் கடைதல்போல மத்தினால்) கடைந்து (அதிலிருந்து; வெண்ணெயும் எடுக்கல் ஆம் - வெண்ணெயும் எடுத்தலுங்கூடும் சற்றும் - சிறிதும், புத்தி இல்லாத மூடர்-அறிவில்லாத மூடருடைய, மனத்தைதிருப்ப-மனத்தை திருப்புவதற்கு, எவருக்கும் முடியாது யாவராலும் முடியாது, மேவு - விரும்பப்படுகிற, ஆர் -ஆத்திப் பூமாலையையும், கொன்றை - கொன்றைப்பூ மாலையையும், புனை - தரித்த, வேணிய - சடாபாரத்தை யுடையவனே, சுரர்பரவும் - தேவர்கள் துதித்தற்குரிய, அமலனே குற்றமற்றவனே, அருமை மதவேள்.

காண்-தேயறவிடைச்சொல்.

செய்தற்கரிய செயல்களெல்லாவற்றையும் செய்து முடிக்கலாம், மூடர்மனத்தை வசப்படுத்தலாகாதென்பது இச்செய்யுட் கருத்து——

"கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவாயையும்
கட்டலாமொரு சிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத் தாட்டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்து லோகத்தையும்
வேதித்து விற் றுண்ணலாம்
வேறொருவர் காணம லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாம்

சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும் புகுதலாம்
சலமே னடக்கலாம் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்தி பெறலாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயா நந்தமே.

என்று தாயுமானவர் பாடலில் சாதாரணமாய் மனத்தை யடக்குதல் கூடாதென்றிருக்க, மூடர் மனத்தை யடக்குதல் கூடாதென்பது சொல்லாமே யமையும்.

சலமே னடத்தலையும், கனன்மே லிருத்தலையும் முறையே ஜலஸ்தம்பனம் என்றும் அக்நிஸ்தம்பனம் என்றுங் கூறுவர் வடநூலார். எட்டி - எட்டிமரம், இது இதன் சினையாகிய பழத்தை யுணர்த்தலால் முதலாகுபெயர். ஆர் கொன்றை என்னு மரப்பெயர்கள் அவற்றின் சினைகளாகிய மலர்களை யுணர்த்தலால் முதலாகு பெயர்கள். இம்மலர்கள் இவற்றால் தொடுக்கப்பட்ட மாலையைக் குறித்தலால் கருவியாகுபெயர். சிவபெருமான் நாகங்களை அடக்கி ஆபரணமாகத் தரித்தனன். திருவள்ளுவர் மனைவியாகிய வாசுகியானவர் ஒருகால் மணலைத் தன்கற்பின் மகிமையால் அன்னமாகச் சமைத்துப் படைக்க அதனை அவர் உண்டதும் அறிந்துகொள்க. பஞ்சம், பாணம், வடசொற்கள். காடி, சாதத்தோடு புளித்தநீர், வெண்ணெய், உருக்காத நெய், மேவு என்ற விசேடணம் முன்னின்ற ஆர்

னைன்பதனோடும், பின்னின்ற கொன்றை என்பதனோடும் கூட்டப்பட்டது, ஆத்தியும் கொன்றையும் சிவபெருமானுக்கு மிகவும் பிரியமாதலால்; "ஆத்திசூடி" "கொன்றைவேந்தன் செல்வன்" என்னும் ஔவையார் திருவாக்காலும் இனிது விளங்கும். வேணீ என்னும் வடசொல் வேணியென ஈறு இகரமாயிற்று. பாற்கடல் கடையப்பட்ட காலத்தில் அதிலுண்டான மதுவுக்குச் சுராஎன்று பெயர், அதனை யுண்டதனால் தேவர்களுக்கு சுரர் என்னும் பெயர்வந்தது. வில்லில் தொடுக்கப்படுவது, பாணம் - (அம்பு) என்றும், துப்பாக்கியிருந்து வெளிப்படுவது குண்டு என்றும் சொல்லப்படும்.

## உத்தமராவோர்.

செய்நன்றி மறவாத பேர்களு மொருவர்செய்
தீமையை மறந்த பேருந்
திரவியந் தரவரினு மொருவர்மனை யாட்டிமேற்
சித்தம் வையாத பேரும்
கைகண் டெடுத்தபொருள் கொண்டுபோய்ப்பொருளாளர்
கையிற் கொடுத்த பேருங்
காசினியி லொருவர்செய் தருமங்கெடாதபடி
காத்தருள்செய் கின்ற பேரும்
பொய்யொன்று நிதிகோடி வரினும் வழக்கழிவு
புகலாத நிலைகொள் பேரும்
புவிமீது தலைபோகு மென்னினுங் கனவிலும்
பொய்மை யுரையாத பேரும்

ஐயவிவ் விவரெலாஞ் சற்புருட ரென்றுலகி
　　லகமகிழ்வ ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீசுர தேவனே. கரு

(இ-ள்.) செய்நன்றி (ஒருவர்தமக்குச்செய்த உபகாரத்தை, மறவாதபேர்களும், மறந்துவிடாமல் நினைக்கிறவர்களும், ஒருவர்செய் தீமையை - ஒருசெய்ததீங்கை, மறந்தபேரும் - (நினையாமல்) மறந்துவிட்ட பேர்களும், திரவியம் தரவரினும் - பொருள்கொடுக்க வந்தாலும், ஒருவர் மனையாட்டிமேல் - ஒருவரது மனையாள்மேல், சித்தம்வையாத பேரும் - மனம்வையாதபேர்களும், கைகண்டு எடுத்தபொருள் கைகண்டெடுத்தபொருளை, கொண்டுபோய்-கொண்டுசென்று, பொருளாளர் கையில் கொடுத்தபேரும் - பொருளுடையோர் கையிற் கொடுத்த பேர்களும், காசினியில் - உலகத்தில், ஒருவர்செய் - ஒருவர்செய்த, தருமம் - தருமமானது, கெடாதபடி - அழியாதபடி, காத்தருள்செய்கின்றபேரும் - காத்தருள் செய்கிறபேர்களும் பொய் ஒன்று பொய்யாகிய (நிலையற்ற), நிதிகோடிவரினும் - கோடித்திரவியம் வருவதாயிருந்தாலும், வழிக்கழிவு புகலாத அழிவழக்குப்பேசாத, நிலைகொள்பேரும் - நடுநிலையைக் கொண்டபேர்களும், புவிமீது உலகத்தில், தலைபோகும் என்னினும் - தலைபோகுமாயினும், கனவிலும் - சொர்ப்பனத்திலும், பொய்ம்மை உரையாதபேரும் - பொய்சொல்லாதவர்களும் ஆகிய ஐய இவ் இவர் எல்லாம் அழகையுடைய இவர்களெல்லாரும், சற்புருடர் என்று - உத்தமபுருஷர்களென்று, மனமகிழ்வார்கள், அருமை மதவேள். எ-று.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்நன்றி கொன்ற மகற்கு" எனத் தெய்வப்புலவர் வற்புறுத்திக் கூறுதலால், இவ்வாசிரியரும், உத்தம புருஷர்களுக்குள்ளே சிறந்தவர்கள் செய்நன்றி மறவாத பேர்களை யென்பதுதோன்ற, முதலில் அவர்களை யெடுத்துக்கூறினார், திரவியந்தரவரினும் என்ற வும்மை உயர்வு சிறப்பு சித்தம் என்றது இச்சையை பொருளாளர் - பொருளுக்குரியவர். செல்வம் நிலையற்றதாதலால் நிதி எனப்பட்டது. வரினும் என்றவும்மை உயர்வு சிறப்பு. வழக்கழிவு புகழாகையால், நிலை நடுவு நிலைக்காயிற்று. ஐ - அழகு.

இதுவுமது.

அடைக்கல மெனத்தேடி வருவோர் தமைக்காக்கு
மவனே மகா புருடன்
மஞ்சாம லெதுவரினு மெதுபோகி னுஞ்சித்த
மசைவிலன் மகா தீரனாம்
தொடுத்தொன்று சொன்னசொற் றப்பாது செய்கின்ற
தோன்றலே மக ராஜனாந்
தூறிக் கலைக்கின்ற பேர்வார்த்தை கேளாத
துரையே மகா மேருவாம்
அடுக்கின்ற பேர்க்குவரு மிடர்தீர்த் திரட்சி
மவனே மகா த்யாகியா செய்பு
மவரவர் தாரதர மறிந்துமரி
மவனே மகா வசிதன

அடர்க்கின்ற முத்தலைச் சூலனை வேலனை
யமலனை யருமை மதவே
எனுந்தினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுர தேவனே. கஎ

(இ-ள்) அடைக்கலம் என-அடைக்கலமென்று, தேடி வருவோர்தமை - தேடிவருகிறவர்களை, காக்குமவனே - காப்பவனே, மகாபுருடன் ஆம் - மஹாபுருஷனாவன், அஞ்சாமல் பயப்படாமல், எது வரினும்-எதுவந்தாலும், எதுபோகினும்-எது போனாலும், சித்தம் இசைவு இல்லான்-மனம் சலிக்காதவனே, மகா தீரன் ஆம்-மஹாதீரனாவன், ஒன்று தொடுத்து-ஒரு காரியத்தைப்பற்றி, சொன்னசொல் - சொன்னசொல்லை, தப்பாது செய்கின்ற - தவறாமற்செய்து நிறைவேற்றுகிற, தோன்றலே-பெரியோனே, மகராஜன் ஆம்-மஹாராஜனாவன் தூரி-நிந்தித்து, கலைக்கின்ற பேர் - கலைக்கிற பேர்களுடைய, வார்த்தை-சொல்லை, கேளாத- (செவிகொடுத்து) கேட்காத, துரையே - பிரபுவே, மகாமேரு ஆம் - மஹா மேரு ஆவன், அடுக்கின்ற பேர்க்கு வரும்- (தன்னைவந்து) அடுக்கின்ற பேர்களுக் குண்டாயிருக்கிற, இடர் தீர்த்து - துன்பத்தை நீக்கி, ரெட்சிக்கு மவனே - காப்பாற்றுகிறவனே, மகாத்யாகி ஆம்- மஹா[illegible]யாகி யாவன், அவரவர் தராதரம் அறிந்து - அவரவர் களுடை[illegible]ராதரங்களை யறிந்து, மரியாதை செயுமவனே- (அவரவர்களு[illegible]க்குத்தக்க) மரியாதை - செய்கிறவனே, மகா உசிதன் ஆம் - [illegible] கொல்லுகிற, முத்தலசிகனாவன், அடர்க்கின்ற-(பகைவரை) [illegible]னை-முத்தலைச்சூலத்தை யுடைய

வனே, லோலனே - திருவிளையாடலை யுடையவனே, அமலனே
களங்கரஹிதனே, அருமைமதவேள், எ-று,

வருவோர் தமை என்பதில் தம் சாரியை. காக்குமவனே
என்பதைக் காக்கும் அவனே என இரண்டுசொல்லாய் பிரித்து
காக்கின்ற அவனே எனப்பொருளுரைத்தலுமாம். இவ்வாறே
இரட்சிக்கு மவனே, செயுமவனே, என்பவற்றையும் பிரித்து
ரைத்துக் கொள்ளலாம்- அசைவு-சலநம், தீரன் - தைரியசாலி
சொல் - சொன்னபடி, தூறுதல்-நிந்தித்தல், கலக்கின்றபேர்
வார்த்தை கேட்டு மனமசையாமையால் அவனை மகாமேரு
என்றார். த்யாகி-கொடையாளன் தாரதரம் தகுதியும் தகுதி
யின்மையும். உசிதன் - சிரேஷ்டன், அடர்த்தல்-கொலலுதல்,
முத்தலைச்சூலம் - மூவிலைவேல், லோலன் - பஞ்ச கிர்த்தியங்
களாகிய விளையாட்டையுடையவன்.

## ஒன்றிலொன்றில்லாமை.

காமிக்கு முறையில்லை வேசைக்கு நாணில்லை
கயவர்க்கு மேன்மை யில்லை
கன்னமிடு கள்வருக் கிருளில்லை விபசார
கன்னியர்க் காணை யில்லை
தாமெனு மயக்கறுத் தோங்குபெரி யோர்க்குவரு
சாதிகுல மென்ப தில்லை
தாக்ஷிண்ய முடையபேர்க் கிகலில்லை யென்றுமொரு
சார்பிலார்க் கிடம தில்லை

பூமிக்கு ளீயாத லோபர்க்கு வளமான
புகழென்ப தென்று மில்லை
புலையர்க்கு நிசமில்லை கைப்பொரு ளிலாதவோர்
புருடருக் கொன்று மில்லை
யாமினி தனக்குநிகர் கந்தரத் திறைவனே
யன்புடைய வருமை மதவே
எனுதினமு மனதினிலே தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கஅ

(இ-ள்.) காமிக்கு முறைஇல்லை-காமியானவனுக்கு முறை யில்லை, வேசைக்கு நாண் இல்லை-வேசைக்கு வெட்கமில்லை, கய வர்க்குமேன்மையில்லை-கீழ்மக்களுக்குப் பெருமையில்லை. கன் னமிடு கள்வருக்கு இருள் இல்லை - கன்னமிடுகிற திருடருக்கு இருட்டில்லை, விபசார கன்னியர்க்கு ஆணை இல்லை-வியபிசாரஞ் செய்கிற பெண்களுக்கு ஆணையில்லை, தாம் என்னும் மயக்கு அறுத்து - தாமென்கிற மயக்கத்தை யொழித்து, ஓங்கு பெரி யோர்க்கு - உயர்ந்தபெரியோர்களுக்கு, வரு-(உலகத்தில் உண் டாகிய, சாதிகுலம் என்பது இல்லை-சாதிகுலம் என்பது இல்லை தாக்ஷிண்யம் உடைய பேர்க்கு - தாக்ஷிண்யத்தையுடைய பேர் களுக்கு, இகல் இல்லை-பகையில்லை, எங்கும் - எவ்விடத்தும், ஒருசார்பு இல்லார்க்கு-ஒரு ஆதாரமில்லாதவர்களுக்கு, இடம் தில்லை-இடமில்லை, பூமிக்குள்-உலகத்தில், ஈயாத லோபர்க்கு- கொடாதலோபிகளுக்கு, வளம் ஆன புகழ் என்பது - மிகுந்த புகழென்று சொல்லப்படுவது, என்றும் இல்லை - எக்காலத்து மில்லை, புலையர்க்கு - நீசருக்கு, நிசம் இல்லை - உண்மையில்லை,

கைப்பொருள் இல்லாத ஓர் புருடனுக்கு - கையிற் பொருளில்லாதவனாகிய ஒரு புருஷனுக்கு, ஒன்றும்மே யில்லை, யாமினி தனக்கு நிகர்-இராத்திரிக்குச் சமானமாகிய, கந்தரத்து-கண்டத்தையுடைய, இறைவனே- தலைவனே, அன்பு உடைய-(எம் போல்வாரிடத்து) அன்புள்ள, அருமை மதவேள், -எ-று.

காமி-அதிக காமமுள்ளவன், முறை - தாய் தங்கை தமக்கை யென்னுமுறை, கயவர் - கீழ்மக்கள், விபசார கன்னியர்-சோரஸ்த்ரீகள், ஆணை - சத்தியம், தாமெனு மயக்கு - அகங்காரம், பெரியோர் - ஞானியர், தாக்ஷிண்யம் - கண்ணோட்டம், இகல் - பகை, இது பண்பாகு பெயராய்ப் பகையை யுடையவனுக் காயிற்று. இடம் - அண்டுமிடம், யாமினி - இரவு, யாமினிதனக்கு என்பதில் தன் அ இரண்டுஞ் சாரியைகள் கந்தரம் - கண்டம், கம் - தலை, தரம் - தாங்குவது ஆதலால் கண்டத்துக்குக் கந்தரம் எனப்பெயர் வந்தது, இதுவட சொல் காமி முதலானவர்க்கு முறை முதலான ஒவ்வொரு குணமில்லை பொருளில்லாதவனுக்கு எல்லாக்குணங்களும்ஒரு ங்கே யில்லையென்பது இச்செய்யுளாற் கூறப்பட்டது.

## யாக்கை நிலையாமை முதலியவை.

காயமொரு புற்புதம் வாழ்வுமலை சூழ்தரும்
காட்டி லாற்றின் பெருக்காங்
கருணைதரு புதல்வர்கிளை மனைமனைவி யிவையெலாங்
கானல் காட்டும் ப்ரவாகம்

மேயபுஜ பலவலுமை யிளமையழ கிவையெலாம்
வெயின்மஞ்ச ளுயிர் தானுமே
வெட்டவெளி தனில்வைத்த தீபமென வேகருதி
வீண்பொழுது போக்காமலே
நேயமுட னேதெளிந் தன்பொடுன் பாதத்தி
னினைவுவைத் திருபோதிலும்
நீர்கொண்டு மலர்கொண்டு பரிவுகொண்டர்ச்சிக்க
நிமலனே யருள் புரிகுவாய்
ஆயுமறி வாளர்பணி பாதனே போதனே
யண்ணலெம தருமை மதனே
வானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுர தேவனே. ௧௯

(இ-ள்.) காயம்-உடம்பு, ஒரு புற்புதம் - ஒரு நீர்க்குமிழி போல நிலையில்லாமல் அழிவதாகும், வாழ்வு - செல்வம், மல் சூழ் தரும் காட்டில்-மலைகளைச் சூழ்ந்த காட்டில் ஓடுகிற ஆற்றின் பெருக்கு ஆம் - ஆற்றுநீர் பெருக்குப்போல நிலைமாறுவதாகும் கருணைதரு-அன்பு செய்யப்படுகிற, புதல்வர்-புத்திரர்களும், கிளை-உறவினரும், மனை-வீடும், மனைவி - மனையாளும் (ஆகிய), இவை எல்லாம்-இவையாவும், கானல்காட்டும் ப்ரவாகம்-கானலினிடத்தே தோன்றுகிற வெள்ளத்தோற்றம்போல நிலையில்லாதனவாகும், மேய இருபுயவலிமை - பொருந்திய இரண்டு தோள்வலியும், இளமை - இளமைப்பருவமும், அழகு-அழகும் ஆகிய, இவை எல்லாம் - இவையாவும், வெயில் மஞ்சள் - வெயிலின்முன் நிலைபெறுமலழிகின்ற மஞ்சளின் நிறம்

உயிர் தானுமே - (உடம்பில்வாழும்) உயிரி போன்றனவாகும், வெட்டவெளிதனில்வைத்த-பெருவெளியிட னது நிலைமையும், விரைவில் அழி த்தில் வைக்கப்பட்ட, தீபம்-விளக்குப்போல யுந் தன்மையதாகும், எனவே கருதி-என்றெண்ணியே, வீண் பொழுது போககாமல் - வீணாய்க் காலங்கழிக்காமல், நேச முடனே-அன்போடு, தெளிந்து-மனந்தெளிந்து, அன்போடு பக்தியுடனே, உன்பாதத்து-உன் திருவடியில், நினைவு வைத்து கருத்து வைத்து, இருபோதிலும்-காலைமாலை யென்னும்) இர ண்டு சந்தியா காலங்களிலும், நீர்கொண்டு-தீர்த்தத்தைக்கொ ண்டும், மலர்கொண்டு-மலர்களைக் கொண்டும், பரிவுகொண்டு-நிம அன்பைக் கொண்டும், அர்ச்சிக்க- (உன்னை) பூசிக்கும்படி, நீகருணை செய்வா யாக, அருள்புரிகுவாய்-நீகருணை செய்வா லனே-குற்றமற்றவனே, அறிவாளர் அறிஞர், பணி-வணங்கு கிற, ஆயும்-ஆராய்கிற, போதனை-ஞா னத்தற்கரிய, பாதனே-திருவடியையுடையவனே, எமதருமை ணசொரூபனே, அண்ணல்-பெருமை பொருந்திய, மதவேள். வ-று.

“நீரிற்குமிழி யிளமை நிறைசெல்வம், நீரிற்சுருட்டுந்தி ரைகள், நீரில், எழுத்தாகும் யாக்கை நமரங்காளென்னே வழு த்தாத தெய்பிரான்” என நீதிநெறிவிளக்கத்திலும் கூறப்ப பட்டிருத்தல் காண்க தோன்றி விரைவில் அழிவதற்கு நீர்க் குமிழியும் விரைவிற்சென்றொழிவதற்கு ஆற்றுநீர்ப் பெருக் கும், பிரமையால் உண்மையாய் உதவுவதுபோலத் தோன் றும் தோற்றத்துக்குக் கானல்வெள்ளமும் இருந்தது தெரியா மல் விரைவாய் அழிதற்கு வெயில்பட்ட மஞ்சளின்நிறமும்

எளிதில் அபாயமடைவதற்கு வெட்ட வெளியில் வைத்த விளக்கும் உவமையாயின. காயம், புத்புதம், ப்ரவாஹம், புஷ்பம், தீபம், பாதம், பேதம் என்பன வடசொற்கள் ஆறு-யாறு என்பதன்மரூஉ, பெருகுவது - பெருக்கு "தனிமரம் தோப்பாகாது தனிப்பிள்ளை பிள்ளையாகாது" எனப் பன்மையாற் கூறினர் கிளை-மரத்தைக்கிளை தழுவுதல்போல ஒருவரைத் தழுவி நிற்பது, இதுஉறவினர்க்கு உவமையாகுமெபார் மனைவி-வீட்டிலிருந்துக்கொண்டு குடும்ப காரியங்களைச்செய்பவள் கொண்டு மூன்றாம்வேற்றுமைச் சொல்லுருபு போதம்-அறிவு, முற்றறிவதலால் இறைவனைப்போதன் என்றார் முற்றறிவன் ஸர்வஜ்ஞன் என்னும் வடசொல்லின் மொழி பெயர்ப்பு போது என்பது மலர் எனப்பொருள்படுதலால், போதன்என்பதற்கு அன்பரது இதயகமலத்தில் வாழ்பவன் என்றுரைத்தலும் பொருந்தும் காட்டிலாறு-காட்டாறு, அர்ச்சிக்க என்றது இவ்விடத்துப் பூசிக்க என்னும் பொருளில் வந்தது ஆயும் என்பதற்கு தத்துவ சோதனை செய்கின்றனென்றும், இறைவனது கல்யாண குணங்களை ஆராய்ந்து மகிழ்கின்ற என்றும் "நானென்றுள்ளமார் ஞானங்களாரென்னையாரறிவார்" என்றபடியே தம்மையுந் தமக்காதாரத் தலைவரையும் மற்றும் ஆராய்கின்ற என்றும் உரைத்துக்கொள்கவீட்டுநூல்களாராய்கின்ற எனினுமமையும்.

## திருமங்கை யிருப்பிடம்.

நற்பதி முகத்திலே மன்னவ ரிடத்திலே
நாகரிகர் மா மனையிலே

நளினமலர் தன்னிலே கூவிளந் தருவிலே
நறைகொண்ட பைந் துளவிலே
கற்புடையர் வடிவிலே கடலிலே கொடியிலே
கல்யாண வாயி றனிலே
கடிநக ரிடத்திலே நற்செந்நெல் விளைவிலே
கதிர்பெறு விளக் கதனிலே
பொற்புடைய சங்கிலே மிக்கோர்கள் வாக்கிலே
பொய்யாத பேர் பாலிலே
பூந்தடந் தன்னிலே பாற்றுடத் திடையிலே
போதகத் தின் சிரசிலே
அற்பெருங் கோதைமலர் மங்கைவாழ்குவ ளெண்ப
யண்ணலெம தருமை மதவே
னானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. உ0

(இ-ள்.) நல்பரிமுகத்திலே - உத்தம அசுவத்தின் முகத்திலும், மன்னவர் இடத்திலே - அரசரிடத்திலும், நாகரிகர் மாமனையிலே - நாகரிகருடைய அழகிய வீட்டிலும், நளினமலர் தன்னிலே - தாமரை மலரிலும், கூவிளந்தருவிலே - வில்வமரத்திலும், நறைகொண்ட பைதுளவிலே - வாசனையைக்கொண்ட பசிய துளசியிலும், கற்புடையர் வடிவிலே - கற்புடைய மாதரது உருவத்திலும், கடலிலே - கடலிலும், கொடியிலே - துவசத்திலும், கல்யாண வாயில் தனிலே - கல்யாணவாசலிலும், கடிநகரிடத்திலே - காவலைக்கொண்ட நகரத்திலும், நல்செந்நெல் விளைவிலே - அழகிய செந்நெற் பயிரிலும்,

கதிர்பெறு விளக்குதனிலே - ஒளியுள்ள தீபத்திலும், பொற்பு உடைய சங்கிலே - அழகு உள்ள சங்கிலும், மிக்கோர்கள் வாக்கிலே - மேலோர் வாக்கிலும், பொய்யாதவர் பாலிலே - பொய்சொல்லாதவர்களிடத்திலும், பூ தடம் தன்னிலே - தாமரைமலர்த் தடாகத்திலும், பரிக்கூடத்திடையிலே - பரிக்கூடத்திடையிலும், போதகத்தின் அயலிலே - யானைக்கலையிலும், அல் - இருட்டைப்போன்ற, பெரு - நீண்ட, கோதை - கூந்தலையுடைய, மலர்மங்கை - திருமகள், வாழ்குவள் என்பர் - வாழ்ந்திருப்பாளென்பர் (மேலோர்) அண்ணல் - பெருமையுள்ள, எமதருமை மதவேள், எ-று.

நற்பரி - உறப லீலாவதி, அஸ்வஹ்ருதய முதலிய வட நூல்களிலும், திருவிளையாடல் முதலிய தமிழ் நூல்களிலும் கூறப்படுகிற நல்லிலக்கண மமைந்த உத்தமாசுவம் நல்பரி - அழகாகிய குதிரை யெனினுமாம், மன்னவர் - செங்கோலரசர், நாகரிகர் - ஆசாரமுள்ளவர், நளினம் - தாமரை, கூவிளம் - வில்வம், தரு - மரம், தாலம் - பனம், கற்புடையர் கற்புள்ளமாதர் கடி - காவல், விளக்கம் எனினுமமையும், பொற்புடைய சங்கு என்றது வலம்புரி யென்னும் உத்தம சங்கத்தை, மிக்கோர்கள் - கல்வியறிவொழுக்கங்களால் மேம்பட்டோர், பொய்யாதவர் - சத்தியவான்கள், (அரிச்சந்திரன் முதலியோர்) பாலிலே யென்பதில் பால் ஏழனுருபு. தடம் - தடாகம், போதகம் - யானை, மலர்மங்கை - தாமரைப்பூவில் வாழ்பவளாகிய சீதேவி.

## மூதேவி யிருப்பிடம்.

மிதமின்றி யன்னம் புசிப்போ ரிடத்திலு
மிகுபாஷை யோ ரிடத்தும்
மெய்யொன் றிலாமலே பொய்பேசி யேதிரியு
மிக்க பாதக ரிடத்தும்
கதியொன்று மிலர்போல மலினங் கொளும்பழைய
கந்தை யணிவோ ரிடத்தும்
கடினா யெனச்சீறி யெவரையுஞ் சேர்க்காத
கன்னிவாழ் மனை யகத்தும்
ததிசேர் கடத்திலுங் கர்த்தபத் திடையிலுஞ்
சார்ந்த வாட்டின் றிரளிலுஞ்
சாம்பிண *மூகத்தி லுமிவையெலாங் கவடெரி
தௌவைவா ழிட மென்பர்காண்
அதிரூப மலேமங்கை நேசனே யோழைதரு
மழகனெம தருமை மதவே
ளனுதினமு மனைநினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. உக

(இ-ள்.) மிதம் இன்றி - அளவில்லாமல், அன்னம்புசிப் போர் இடத்திலும் - சோற்றை யுண்போரிடத்திலும், மிகு பாஷையோர் இடத்தும் - அதிகமாய்ப் பேசுவோரிடத்திலும், மெய் ஒன்று இல்லாமலே - சிறிதும் உண்மை யில்லாமலே, பொய்பேசியே திரியும் - பொய் பேசிக்கொண்டே திரிகின்ற, மிக்கபாதகர் இடத்தும் - பெரியபாவிகளிடத்திலும், கதி ஒன் றும் இலர்போல - கதியொன்று மில்லாதவர்போல, மலி நம்

கொள்ளும்-அழுக்குப்படிந்த, பழையகந்தை - பழங்கந்தைத் துணியை, அணிவோர் இடத்தும் - தரிப்பவரிடத்திலும், கடிநாய் என சீறி - கடிநாய்போலக் கோபித்து, எவரையும் சேர்க்காத யாவரையும் சேர்க்கவொட்டாத, கன்னி-பெண்ணுணவள், வாழ் - வாழ்கின்ற, மனையகத்தும் - வீட்டிலும், ததி சேர்கடத்திலும் - தயிருள்ள குடத்திலும், கர்த்தபத்திடையிலும்-கழுதையினிடத்திலும், சார்ந்த ஆட்டின் திரளினும்-பொருந்திய ஆட்டு மந்தையிலும், சாம்பிணமுகத்திலும் - செத்தபிணத்தின் முகத்திலும், இவையெலாம் - இவையெல்லாவற்றிலும், கவலைபுரி துன்பத்தைச்செய்கிற, தௌவை - மூதேவியானவள் வாழ்குவள் என்பர் - வாழ்வாள் என்று சொல்லுவர் (மேலோர்) அதிரூபம் - மிக்க அழகுள்ள, மலைமங்கை பார்வதிதேவிக்கு நேசனே - அன்பனே, மோழைதரும் அழகன் - மோழையூபதிபெற்ற அழகனாகிய, எமதருமைமதவேள்

மிதம் - அளவு, (உண்ணவேண்டிய அளவு) பாஷை - பேச்சு, கதி-போக்கிடம், கடிநாய் - கடிக்கிறநாய் கன்னியென்பது இவ்விடத்தில் பொதுவாய் மாது என்னும் பொருளில் வந்தது மனையகத்தும் என்பதில் அகம் ஏழனுருபு. ததி-தயிர், கர்த்தபம்-கழுதை, கர்த்தபத்திடை என்பதில் இடை ஏழனுருபு. ரூபம் இவ்விடத்து அழகைக் குறித்தது. பார்வதியென்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பாகிய மலை மங்கை யென்பது மலையரையனதுமகள் என்றும் மலையானுக்குமகள் என்றும் பொருள்படும்.

குணகுண மிரண்டினும் பயன்படாமை.

குணமற்ற பேய்முருங் கைத்தழை தழைத்தென்ன
குட்டநோய் கொண்டுமென்ன
குரைக்கின்ற நாய்மடி சுரந்தென்ன சுரவாது
கொஞ்சமாய்ப் போகிலென்ன
மணமற்ற செம்முருக் கதுபூத் தலர்ந்தென்ன
மலராது போகிலென்ன
மதுரமில் லாவுவர்க் கடனீர் கறுத்தென்ன
மாவெண்மை யாகிலென்ன
உணவற்ற பேய்ச்சுரை படர்ந்தென்ன படரா
துலர்ந்துதான் போகிலென்ன
உதவாத பேர்க்கு வெகு வாழ்வுவந் தாலென்ன
வோங்குமிடி வரிலென்னகாண்
அணியுற்ற பைங்கொன்றை மாலிகா புரணனே
யாதியே யருமைமதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. உஉ

(இ-ள்.) குணம் அற்ற-குணமில்லாத, பேய்முருங்கைத் தழை-பேய்முருங்கையிலை, தழைத்து என்ன-செழித்தால் என்னலாபம், குட்டநோய்கொண்டும் என்ன-குட்டநோய்கொண்டால் என்னநஷ்டம், குரைக்கின்றநாய் மடிசுரந்து என்ன-குரைக்கின்ற நாயின்மடி பால்சுரந்தால் என்னலாபம் சுரவாது கொஞ்சமாய்ப்போகில் என்ன-சுரக்காமல்கொஞ்சமாய்போகில்

என்னநஷ்டம், மணம் அற்ற செம்முருக்கம்பூத்து அலர்ந்து என்ன - மணமில்லாத செம்முருக்கானது பூத்து அலர்ந்தால் என்னலாபம், மலராது போகில் என்ன-மலராமல் போனால் என்னநஷ்டம், மதுரம் இல்லா-இன்சுவையில்லாத உவர்க்கடல்நீர் - உப்புக்கடனீரானது, சுரந்து என்ன-சுரந்திருந்தால் என்னலாபம், மா வெண்மை ஆகில் என்ன - மிகுவெண்மையானால் என்னநஷ்டம், உணவு அற்ற பேய்ச்சுரை-உணவுக்குதவாத பேய்ச்சுரையானது, படர்ந்து என்ன - படர்ந்தால் என்ன லாபம், படராது உலர்ந்துதான் போகில் என்ன - படராமல் உலர்ந்துபோனால் என்னநஷ்டம், உதவாதவர்க்கு - ஈயாதலோபிகளுக்கு, வெகு வாழ்வுவந்தால் என்ன-வெகுசெல்வம் உண்டானால் என்னலாபம், ஒங்கும்மிடி வரில் என்ன-பெரிதாகிய தரித்திரம் உண்டானால் என்னநஷ்டம், அணி உற்ற அழகுபொருந்திய, பை-பசுமையாகிய, கொன்றைமாலிகா - கொன்றை மலர் மாலையாகிய, ஆபரணனே-ஆபரணத்தையுடையவனே, ஆதியே-முதல்வனே, அருமைமதவேள் எ-று.

குணம்-நன்மை குட்டநோய்-கொடிசெடி முதலியவற்றிற் குண்டாவதோர் - சொறிநோய், இது உண்டானால்கொடிசெடிகள் உலர்ந்தழியும் நாய்மடி-நாயின்முலை, சுரத்தல்-பாலுறுதல், செம்முருக்கு-ஓர்மரம் அலர்தல்-மலர்தல், உவர்க்கடல் உப்புகடலில், உதவுதல் - கொடுத்தல் இன்னாது உதவாதவர் என்னுமல் உதவாத என்வாளாகூறலால் ஒருபொருளுமுதவாத லோபியர் எனப் பொருளுரைக்கப்பட்டது, வாழ்வு-சுரு

யாகுபெயர், மாலிகாபரணன் - வடமொழிச்சந்தி, இது தீர்க்கசந்தி யெனப்படும், மாலிகா என்பது தமிழில் மாலிகையெனவரும்.

குறைவுற்றுங் குணங்கோடாமை.

தறிபட்ட சந்தனக் கட்டை பழுதாயினுந்
சார்மணம் பழு தாகுமோ
தக்கபால் சுவறிடக் காய்ச்சினு மதுகொண்டு
சார மதுரங் குறையுமோ
நிறைபட்ட கதிர்மணி யழுக்கடைந் தாலுமதி
னீள்குண மழுங்கி விடுமோ
நெருப்பிடை யுருக்கினு மடிக்கினுந் தங்கத்தி
னிறையு மாற்றுங் குறையுமே
கறைபட்ட பைம்புயன் மறைத்தாலும் வானுலாங்
கதிர்மதி கனம் போகுமோ
கற்றபெரி யோர்மகிமை யற்பாறி விலரேனுங்
காசினி தனிற் போகுமோ
அறிவுற்ற பேரைவிட் டகலாத மூர்த்தியே
யையனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவளர
றப்பளீ சுர தேவனே. உ௬

(இ-ள்.) தறிபட்ட வெட்டப்பட்ட, சந்தனக்கட்டை-சந்தனக்கட்டையானது, பழுது ஆயினும் - தான் தேய்ந்து போனாலும், சார்மணம் பழுது ஆகுமோ- (அதனிடத்தே) பொருந்

நிய, வாசனை குறைவுபடுமோ-(குறைவுபடாது,) தக்கபால் சிறந்தபாலே, சுவறிடகாய்ச்சினும் - வற்றும்படிகாய்ச்சினாலும் சார மதுரம் குறையுமோ-அதனால், அதன் சாரமாகிய இன் சுவை குறையுமோ (குறையாது,) நிறைபட்டகதிர்மணி-நிறை ந்த ஒளியையுடைய இரத்தினம், அழுக்கு அடைந்தாலும்-மலினமடைந்தாலும், அதின் நீள்குணம் அழுங்கி விடுமோ-அதின் உயர்ந்தகுணம் அழிந்திடுமோ-(அழிந்திடாது,) நெரு ப்பிடை உருக்கினும் - நெருப்பிலிட்டு உருக்கினாலும், அடிக் கினும்-(கருவிகளைக் கொண்டு) அடித்தாலும், தங்கத்தின்-உயர்ந்த பொன்னினது, நிறையும் மாற்றும் குறையுமோ-எடையும் மாற்றும் குறையுமோ (குறையாது, கறைபட்டமை புயல்மறைத்தாலும் - கருமை பொருந்திய குளிர்ந்த மேகமா னது மறைத்தாலும், வான்உலாம்-ஆகாயத்தில் சஞ்சரிக்கிற, கதிர்மதி-சூரியசந்திரர்களுடைய, கனம் - பெருமையானது, போகுமோ - மறையுமோ, (மறையாது,) (அப்படியே) கற்ற பெரியோர் மகிமை - கல்விகற்ற பெரியோரது பெருமையை அற்பர்-அற்பர் அறிகிலரேனும்-அற்பகுண முடையார் அறிய மாட்டாராயினும், (அவரது பெருமையானது) காசினிதனில் போகுமோ-உலகத்தில் அழிந்து விடுமோ, (அழிந்துவிடாது அறிவு உற்றபேரை - மெய்யுணர்வடைந்த ஞானியரை, விட்டு நீங்காத, மூர்த்தியே - திருவுருவத்தை யுடையவனே, ஐயனே இறைவனே, அருமைமதவேள் எ-று.

இச்செய்யுட்கருத்து-நறுத்தொகையில், "அடினுமாவின் பால் தன்சுவை குன்றாது, சுடினுஞ் செம்பொன் றன்னொளி

கெடாது, அரைக்கினுஞ் சந்தநந் தன்மணமருது'' எனவும் மூதுரையில், ''சந்தநமென் குறடு தான் றேய்ந்தகாலத் தும், கந்தங் குறைபடாது'' ; ''அட்டாலும் பால்சுவையிற் குன்றாது எனவும், நான் மணிக்கடிகையில், ''மாசுபடினு மணி தஞ்சீர் குன்றுவாம்'' எனவும் அமைக்கப்பட்டிருத்தல் காண்க சந்தநம், சாரம், மதுரம், மணி, கநம், அல்பர், மூர்த்தி, என் பன வடசொற்கள்; மாற்று-பொன்னின் தரம், கறை-கறுப்பு; பசுமை-இவ்விடத்துக் குளிர்ச்சியெனப் பொருள்பட்டது குளிர்ந்த நீரை பச்சைத் தண்ணீர் என வழங்குதலுங் காண்க கதிர்-ஒளி, இது பண் பாகுபெயராய்ச் சூரியனை யுணர் த்திற்று. மதி-சந்திரன், யாவராலு மதிக்கப்படுவது, அமிர் தத்தை யுடையது; என்பது பொருள் காசினி-காஸ்யபி என்னும் வடசொற்சிதைவு இதற்கு, பரசுராமனால் காசிபமுனி வனுக்குத் தாநஞ்செய்யப்பட்டது என்பதுபொருள் அறிவு-தத்துவஞானம்.

இதற்குதவிசெய்வ திதுவெனல்.

வானவர் பிதிர்க்கண்முக சுடர்மூவர் கோள்கட்கும்
வாழ்வுதரு முதவி புவனம்
வளமிக்க புவனந் தனக்குமேன் மேலுதவி
வாழ்வுபெற் றிடு மன்னராம்
தேனமர் நறுந்தொடையல் புனைமன்ன வர்க்குதவி
சேர்ந்தகுடி படை வர்க்கமாஞ்
சேர்குடி படைக்குதவு விளைபயிர் பயிர்க்குதவி
சீர்பெற வழங்கு மழையாம்

மேனியிர் மழைக்குதவி மடமாதர் கற்பொன்று
வேந்தர்தந் நீதி யொன்று
வேதிய ரொழுக்கமொன் றிம்மூன்று மேயென்று
மிக்கபெரி யோருரை செய்வார்
ஆனமர் நெடுங்கொடி யுயர்த்தவெம் மிறைவனே
யதிபனே யருமை மதவேள்
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீசுர தேவனே. ௨௬

(இ-ள்.) வானவர் - தேவர்கள், பிதிர்க்கள் - பிதிரர்கள், முச்சுடர் - முச்சுடர்கள், மூவர் மும்மூர்த்திகள், கோள்கட்கும்-கிரகங்கள் என்பவைகளுக்கும், வாழ்வுதரும் உதவி-வாழ்வைத்தருகிற உதவியாவது, புவநம்.இவ்வுலகமாம், வளமிக்க-வளமிருந்த, புவனந்தனக்கு - இவ்வுலகத்துக்கு, மேன் மேல்-மேலும் உதவியாவது, வாழ்வு பெற்றிடும் மன்னர் ஆம் - பெருஞ் செல்வத்தைப்பெற்ற அரசராம், தேன் அமர் - வண்டுகள் விரும்புகிற, நறுந்தொடையல் - மணமமைந்த மலர் மாலையை, புனை - தரித்த, மன்னவர்க்கு உதவி - அரசருக்கு உதவியாவது சேர்ந்த -(அவர்களை) சார்ந்த, குடிபடை வர்க்கம்ஆம் குடிபடைகளின் கூட்டமாகும், சேர்குடிபடைக்கு உதவி -சேர்ந்த குடிபடைகளுக்கு உதவியாவது, விளைபயிர் - விளையாநின்ற பயிர்களாகும் பயிர்க்கு உதவி அந்தப் பயிர்களுக்கு உதவியாவது. சீர்பெற வழங்கும் மழை ஆம்-(உலகம்) சிறப்புடையப் பெய்கிற மழையாகும் மேல்நிமிர் மழைக்கு உதவி-மேலிடத்தி னின்று மிகுதியாய்ப் பெய்கிற மழைக் குதவியாவது

மடமாதர் - மடமாதருடைய கற்பு ஒன்று - கற்பு ஒன்றும், வேந்தர்தம் நீதி ஒன்று - ராஜநீதி ஒன்றும், வேதியர் ஒழுக்கம் ஒன்று - அந்தணரது ஒழுக்கமொன்றும்ஆகிய, இம்மூன்றுமே யாமொன்று, மிக்க - மேலான, பெரியோர் உரைசெய்வார்-பெரியோர் சொல்லுவார், ஆன் அமர் - இடபவுரு எழுதப்பெற்ற, நெடுகொடி - நெடிய துவசத்தை உயர்த்திப்பிடித்த, எம் இறைவனே - எமது தலைவனே, அதிபனே-அதிபதியே, அருமை மதவேள். எ-று.

இதனைக்கண்டு மகிழ்வ திதுவேனல்.

தந்தைதாய் மலர்முகங் கண்டுநின் முலிப்ப
தவர்தந்த சந்ததிய தாஞ்
சந்த்ரோ தயங்கண்டு பூரிப்ப துயர்வாவி
தங்குபைங் குமுத மலராம்
புந்திமகிழ் வாயிரவி வருதல்கண் டகமகிழ்வ
பொங்கு தாமரை மலர்களாம்
போதவும் புயல்கண்டு கண்களித் தேநடம்
புரிவது மயூர வினமாம்
சிந்தைமகிழ் வாயுதவு தாதா வினைக்கண்டு
சீர்பெறுவ திரவலர் குழாஞ்
திகழ்நீதி மன்னரைக் கண்டுகளி கூர்வதிச்
செகமெலா மென்பர் கண்டாய்
அந்தியம் வானனைய செஞ்சடா டவியனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) தந்தையாய் - தந்தை தாயருடைய, மலர் முகங் கண்டு நின்று ஆலிப்பது தாமரை மலர்போலு முகத்தைக் கண்டு சந்தோஷிப்பது, அவர் தந்த சந்ததி ஆம் - அவர்பெற்ற பிள்ளைகளேயாம், சந்த்ரோதயம் கண்டு பூரிப்பது - சந்திரனு திப்பதைக் கண்டு சந்தோஷிப்பது. உயர்வாவி தங்கு - சிறந்த தடாகங்களில் உண்டாயிருக்கிற, பைங்குமுத மலர் ஆம் - பசுமையாகிய அல்லிமலராம், புந்திமகிழ்வாய் - மனமகிழ்ச்சியுண்டாகும்படி, இரவி வருதல் கண்டு - சூரியன் வருவதைக்கண்டு, அகமகிழ்வ-மனமகிழ்வன, பொங்கு - விளங்குகின்ற, தாமரை மலர்கள் ஆம்-தாமரை மலர்களாகும், போதவும்-மிகவும், புயல்கண்டு-மேகத்தைக்கண்டு, கண்களித்து-கண்களித்து, நடம் புரிவது-நடனம்செய்வது, மயூரம் இனம் ஆம்-மயிலின் கூட்டமாம், சிந்தைமகிழ்வாய் உதவு - மனமகிழ்ந்து கொடுக்கின்ற, தாதாவினைக் கண்டு - கொடையாளியைக் கண்டு, சீர்பெறுவது -மனமகிழ்வது, இரவலர் குழாம் - யாசகர் கூட்டமாம், திகழ் நீதி மன்னரைக் கண்டு - விளங்குகின்ற நீதியையுடைய அரசரைக்கண்டு, களிகூர்வது-சந்தோஷ மிகப்பெறுவது, இ-இந்த, செகம் எல்லாம் என்பர் - இந்த வுலகமுழுதுமாம் சொல்லுவர் (மேலோர்), அம்-அழகிய, அந்திவான் அனைய - அந்திவானத்தையொத்த, செஞ்சடாடவியனே - செவந்த சடைக்காட்டையுடையவனே, அமலனே-மலரஹிதனே, அருமைமதவேள்.

மலர்முகம் மலர்ந்தமுகம், எனினுமமையும். ஆலித்தல்-சந்தோஷித்தல். சந்ததி - மக்கள். குமுதம் - ஆம்பல். புயல்-மேகம். மயூரம்-மயில். இரவலர் - யாசகர், குழாம் - கூட்டம். அந்திவான்-செவ்வானம்.

அதுவது வாகாமை.

உள்ளன் பிலாதபேர் தித்திக்கவேபேசி
யுறவாடு முறவு முறவோ
வுபசரித் தன்புடன் பரிமா றிடாதசோ
றுண்டவர்க் கன்ன மாமோ
தள்ளா திருந்துகொண் டொருவர்போய்ப் பார்த்துவரு
தக்கபயிர் பயிராகு மோ
தளகர்த்த ரொருவனில் லாமன்முன் சென்றிடுந்
தானையுந் தானை யாமோ
விள்ளாத போகமில் லாதபெண் மேல்வரு
விருப்பமும் விரும்ப மாமோ
வெகுகடன் பட்டபேர் செய்கின்ற சீவனமு
மிக்கசீ வனமாகு மோ
அள்ளா திருங்கருணை யாளனே தேவர்தொழு
மாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. 26

(இ-ள்.) உள் அன்பு இல்லாதபேர் - மனத்தில் அன்பில்லாதபேர்கள், தித்திக்கபேசி-இனிக்கப்பேசி, உறவாடும் உறவும்-உறவாடுகிற உறவும், உறவோ-உறவாகுமோ, உபசரித்து-உபசாரம்செய்து, அன்புடன் - அன்போடு, பறிமாறிடாத சோறு-படைக்காத அன்னம், உண்டவர்க்கு - அதைப்புசித்தவர்க்கு, அன்னம் ஆமோ - அது சோறாகுமோ, தள்ளாது

இருந்துகொண்டு - தள்ளா திருந்துகொண்டு, ஒருவர் போய் பார்த்துவரு - ஒருவர்போய்ப் பார்த்துவருகிற, தக்க பயிர் - தகுதியாகியபயிர், பயிர் ஆகுமோ - பயிராகுமோ, தளகர்த்தன் ஒருவனில்லாமல், முன்சென்றிடும் தானையும் - முன்னே போகிறபடையும், தானை ஆமோ-படையாகுமோ, விள்ளாத-நீங்காத, போகம் இல்லாத-அநுபவமில்லாத, பெண்மேல் வரு விருப்பமும்-பெண்மீதுண்டாகிற மோகமும், விருப்பம் ஆமோ -மோகமாகுமோ, வெகுகடன்பட்டபேர்கள், செய்கின்ற சீவநமும், மிக்கசீவநம் ஆகுமோ - மேலான சீவநமாகுமோ, அள்ளாத - குறையாத, இருகருணை யாளனே - பெருங்கருணை யாளனே, தேவர்தொழும் ஆதியே-தேவர்கள் வணங்குகின்ற முதல்வனே, அருமைமதவேள். எ-று.

உறவாகுமோ என்னும் ஓகாரம் ஆகாது எனப்பொருள் தருவதால் எதிர்மறை. மற்றை யடிகளிலுள்ள ஓகாரங்களும் எதிர்மறை யோகாரங்களே. பரிமாறுதல்-படைத்தல் தள்ளா இருத்தல் - சோம்பலாயிருத்தல். தளகர்த்தன் - படைத்தலைவன் சீவநம்-உயிர்வாழ்க்கை.

### நற்குணங்களுக் கிடமாகாதவர்.

வெறிகொண்ட மர்க்கடம் பேய்கொண்டு கள்ளுண்டு
வெங்காஞ் சொறிப்புதறிலே
வீழ்ந்துதேள் கொட்டிடச் சன்மார்க்க மெள்ளளவு
மேவுமோ மேவாது போல்

குறைகின்ற புத்தியா யதிலற்ப சாதியாய்க்
கூடவே யிளமை யுண்டாய்க்
கொஞ்சமா மதிகார முங்கிடைத் தான்மிக்க
குவலயந் தனி லவர்க்கு
நிறைகின்ற பக்தியுஞ் சீலமும் மேன்மையு
நிதானமும் பெரியோர்கண் மே
ணேசமு மீகையு மிவையெலாங் கனவிலும்
நினைவிலும் வராது கண்டாய்
அறைகின்ற சுருதியின் பொருளான வள்ளலே
மறியுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. உஎ

(இ-ள்.) வெறிகொண்ட - பைத்தியம் பிடித்த. மர்க்கடம் (இயல்பாகவே மிகு சேஷ்டை யுள்ள ஒரு) குரங்கானது, பேய்கொண்டு - பேய்பிடிக்கப்பட்டு, கள் உண்டு-(அதன்மேல்) கள்ளையும் குடித்து, வெம்-கொடிதாகிய, காஞ்சொரிப்புதரிலே வீழ்ந்து - பூனைக்காஞ்சொரிப் புதரிலே விழுந்து, தேள்கொட்டிட (அந்தகாலத்தில்) தேளினால் கொட்டப்படவும் பெற்றால் சன்மார்க்கம் - (அக்குரங்கினிடத்தில்) சாந்த குணமானதுஎள் அளவும் மேவுமோ - எள்ளளவாயினும் பொருந்துமோ, (பொருந்தாது), மேவாமைபோல் - பொருந்தாததுபோல, குறைகின்ற அற்பர்க்கு - (நற்குணம்) குறைபட்ட அற்பருக்கு, மனைவி இழிசாதி ஆய்-மனையாளும் இழிகுலத்தவளாய் வாய்த்து, கூடவே இளமைஉண்டாய் - அதனுடனே யௌவநபர

வமு முள்ளதாய், கொஞ்சம் ஆம் அதிகாரமும் கிடைத்தால்- சிறிதாகிய அதிகாரமும் கிடைத்துவிட்டால், மிக்க குவலயந் தனில் - பெரிதாகிய பூமியில், அவர்க்கு-அவர்கட்கு, நிறைகின்ற புத்தியும்-நிறைந்த அறிவும், சீலமும் - நல்லொழுக்கமும் மேன்மையும், நிதானமும் - (காரியங்களில்) விரையா திருத்தலும்; பெரியோர்கள்மேல் நேசமும் - பெரியோர்களிடத்து அன்பும், ஈகையும் - தானகுணமும், இவையெல்லாம் - இவையாவும், கனவிலும் நினைவிலும் வராது - சொப்பனத்திலும் எண்ணத்திலும் உண்டாகமாட்டா, அறைகின்ற - சொல்லப்பட்ட, சுருதியின் பொருள் ஆன - வேதார்த்தமாகிய, வள்ளலே - உதார சீலனே, அண்ணலே-பெரியோனே, அருமை மதவேள். எ-று.

காஞ்சொரி - உடம்பிற் பட்டவுடனே மிகு தினவையுண்டாக்குவதாகிய ஓர்பூடு-(செடி) குவலயம்-பூமண்டலம் வராது - ஒருமை பன்மை மயக்கம். ஒருவன் இல்லறத்தை வழுவாது நடத்துதற்கு அவனது வாழ்க்கைத் துணையாகிய மனையாளுடைய உடன்பாடும் உதவியும் வேண்டப்படுதலாலும்குலத்துக் கேற்றபடி குணமும் பெருமை சிறுமைகளை யடைதலாலும் மனைவி இழிசாதியாய் வாய்த்தலையும் ஒரு குறையாககூறினர்.

இதனை லின்னமுறையனு மெனல்.

தன்னுன் முடிக்கவொண் ணுதகா ரியம்வந்து
தான்முடிப் போன் றமையனுந்
தன்றலைக் கிடர்வந்த போதுமீட் டுதவுவோன்
ருய்தந்தை யென்ன லாகும்

ஒன்னார் செயுங்கொடுமை யான்மெலிவு வந்தபோ
    துதவுவோ னிட்ட தெய்வம்
யுத்திபுத் திகள்சொல்லி மேல்வருங் காரிய
    முரைப்பவன் குருவென்னலாம்
எந்நாளும் வருநன்மை தீமைதன தென்னவே
    யெண்ணிவரு வோன் பந்துவா
மிருதய மறிந்துதன் சொற்படி நடக்குமவ
    னெவனெனினு மவனே சுதன்
அந்நார முப்பணியு மெந்நாளு மேபுனையு
    மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள     உஅ
    ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) தன்னால் முடிக்கவொண்ணாத காரியம் - தன்னாலே முடிக்கக்கூடாத காரியத்தை, தான்வந்து முடிப்போன் தான்வந்து செய்து முடிப்பவன், தமையன் ஆம் - தமையனென்று சொல்லப்படுவான், தன் தலைக்கு இடர்வந்தபோது - தன் தலைக்குத் துன்பம் வந்தபோது, மீட்டு உதவுவோன் - (அந்தத் துன்பத்திலிருந்து) மீளுவித்து உதவிசெய்பவன், தாய்தந்தை என்னல் ஆகும் - தாயும் தந்தையும் என்று சொல்லப்படுவான், ஒன்னார்செயும் கொடுமையால் - பகைவர் செய்யுங் கொடுமையால், மெலிவு வந்தபோது - மெலிவுண்டான காலத்தில், உதவுவோன் - உதவிசெய்பவன், இட்ட தெய்வம் - இஷ்ட தெய்வமென்று சொல்லப்படுவான், யுத்திபுத்திகள் சொல்லி - யுக்தி புத்திகள் சொல்லி, மேல்வரும் காரியம் உரைப்பவன் -

இனிமேல் வருங்காரியத்தைச் சொல்வோன், குரு என்னல் ஆம் - குருவென்று சொல்லப்படுவான், எந்நாளும் - எக்காலத்தும், வரும்-உண்டாகிற, நன்மை தீமை-நன்மை தீமைகளை, தனது என்னவே எண்ணி வருவோன் - தனதென்றே நினைந்து வருகிறவன், பந்து ஆம்-உறவினன் என்று சொல்லப்படுவான் இருதயம் அறிந்து - கருத்தறிந்து, தன் சொற்படி நடக்குமவன் - தன் சொற்படியே நடப்பவன், எவன் உனினும்-யாவனாகிலும், அவனே சுதன் - அவனே புதல்வனென்று சொல்லப்படுவான், அம்-அழகாகிய, நாரமும்-கங்கையும், பணியும்-பாம்பையும், எந்நாளும் புனையும் - எக்காலத்தும் தரித்திருக்கிற, அண்ணலே - பெரியோனே, அருமை மதவேள், எ-று.

ஒன்னார் - சேராதவர். (பகைவர்) மெலிவு-தாழ்வு. நாரம்-நீர், அது கங்கைக்காயிற்று, பணி - பணத்தை யுடையது, பணம்-படம்.

## அவரவரிடத்து நடக்கும்முறை,

மாதா பிதாவினுக் குள்ளன் புடன்கனிவு
மாறாத நல் லொழுக்கம்
மருவுகுரு வானவர்க் கினியவுப சாரமுள
வார்த்தை வழிபா டடக்கம்
காதார் கருங்கண்மனை யாடனக் கோசயன
காலத்தி னய பாஷணங்
கற்றபெரி யோர்முதியர் வருமாது லர்க்கெலாங்
கருணைசே ரருள் விதானம்

நீதிபெறு மன்னவை ரிடத்ததிக பயவினய
நெறியுடைய பேர்க் கிங்கிதம்
நேயமுள தமர்தமக் ககமகிழ் வுடன்பரிவு
நேரல ரிடத்தில் வயிரம்
ஆதிமனு நூல்சொலும் வழக்கமிது வாகுமெம
தையனேயருமை மதவே
ளனுதினமு மன தினினை கருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) மாதா பிதாவினுக்கு - தாய் தந்தையற்கு (நட க்குமுறை), உள் அன்புடன் - உள்ளன்போடு, கனிவு - இரக் கமும், மாறுத நல் ஒழுக்கம் - மாறுபடாத நல்லொழுக்கமு மேயாம், மருவு குரு ஆனவர்க்கு - பொருந்திய ஆசாரிய ரா னவர்க்கு (நடக்குமுறை), இனி - இனிதாகிய, உபசாரம்உள்ள வார்த்தை - உபசாரமுள்ள சொல்லும், வழிபாடு - வழிபடுத லும், அடக்கம் அடங்கியிருத்தலுமாம், காது ஆர் கருங்கண்- காதளவுஞ்சென்று மீள்கின்ற கரிய கண்களையுடைய, மனை யாள் தனக்கோ - மனைவிக்கு (நடக்கு முறையோ வென்றால்) சயனகாலத்தில் - படுக்கைகாலத்தில், நயபாஷணம் - இதவசன மாம் கற்றபெரியோர் - கற்றபெரியோருக்கும் முதியர் - மூத் தோருக்கும், வரும் ஆதுலர்க்கு, நாடிவருகிற யாசகர்க்கும். எல்லாம் - இவர்களெல்லாருக்கும், (நடக்குமுறை), கருணை கசர் அருள் விதானம் - கருணையும் பொருந்திய அருளும் பொ ருட்கொடையுமாம், நீதிபெறு மன்னவரிடத்து-நீதியையுடைய அரசரிடத்து (நடக்குமுறை), அதிக பயவினயம் - மிக்க பயமு

விநயமுமாம், நெறி உடைய பேர்க்கு - நன்னெறியையுடைய பேர்களுக்கு, இங்கிதம் - இதஞ் செய்தலாம் நேயம் உள்ள தமர் தமக்கு - அன்புள்ள உறவினருக்கு, (நடக்குமுறை) அக மகிழ்வுடன் பரிவு - மனமகிழ்வோடு அன்புமாம், நேரவரிடத்து (நடக்குமுறை), வயிரம் - மனத்தில் வைரங்கொண்டிருத்தலாம். மனுநூல் சொல்லும் வழக்கம் இது ஆகும் - மனுநூலிற் சொல்லப்படுகிற முறை இது ஆகும், எமது ஐயனே - எமது இறைவனே, அருமை மதவேள் எ-று.

மாறுத - இடையறாத எனினுமாம் ஒழுக்கம் - ஆசாரம். வழிபாடு - வணங்குதல் அருள் - இரக்கம் விதாநம் - செல்வம், அது செல்வங் கொடுத்தலாயிற்று விநயம் - மரியாதை வயிரம் ஆறுக்கோபம்.

## குணத்தைவிட்டுக் குற்றத்தைக் கவர்தல்.

துட்டவிகடக்கவியை யாருமே மெச்சுவார்
சொல்லுநற் கவியை மெச்சார்
துர்ச்சனர்க் ககமகிழ்ந் துபசரிப் பார்வருந்
தூயரைத் தள்ளி விடுவார்
இட்டமுள தெய்வந் தனைக்கரு திடார்கறுப்
பென்னிலோ போய்ப் பணிகுவா
ரீன்றதாய் தந்தையைச் சற்றுமதி யார்வேசை
யென்னிலோ காலில் வீழ்வார்
நட்டபங் களுக் குள்ளான பந்துவை
னன்றாக வே பேசிடார்

நாளுமப் பாரியாய் வந்தபுத் துறவுக்கு
நன்மை பலவே செய்குவார்
அட்டதிசை சூழ்புவியி லோங்குகலி மகிமைகா
ணத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯0

(இ-ள்.) துட்ட விகடக்கவியை - துஷ்ட விகடக்கவியை, சொல்லும் பாருமேமெச்சுவார் - எல்லாருமே மெச்சுவார்கள், நற்கவியை மெச்சார் - சொல்லப்பட்ட நற்கவியை மெச்சமாட்டார்கள், துர்ச்சநரை - துஷ்ட ஜநங்களை, அகம் மகிழ்ந்து உபசரிப்பார் - மனமகிழ்ந் துபசரிப்பார்கள், வருந்தூயரை தள்ளிவிடுவார் - வருகிற பரிசுத்தரைத் தள்ளிவிடுவார்கள், இட்டம் உள்ள தெய்வந்தனை கருதிடார் - இஷ்டதேவதையை நினைக்கமாட்டார்கள், கருப்பு என்னிலோ - கறுப்புத் தெய்வமென்றாலோ, போய்பணிகுவார் - சென்று வணங்குவார்கள், ஈன்ற தாய்தந்தையை - பெற்ற தாய்தந்தையரை, சற்றும் மதியார் - சிறிதும் மதிக்கமாட்டார்கள், வேசை என்னிலோ - வேசை என்றாலோ, காலில் வீழ்வார் - (அவள்)காலில்வீழ்ந்து வணங்குவார்கள், நட்டலாபங்களுக்கு உள் ஆனபந்துவரின் - நஷ்டலாபங்களுக்குட்பட்ட உறவினன் வந்தால், நன்றாகவேபேசிடார் - நன்றாய்ப் பேசவேமாட்டார்கள், நாளும் - எந்நாளும், ஒப்பாரி கொண்டுவந்த, புது உறவுக்கு - புதியவுறவினனுக்கு, நன்மை பலவே செய்குவார் - பல நன்மைகளையும செய்வார்கள், அட்ட திசை சூழ் புவியில் - அஷ்டதிக்குகளால் சூழப்பெற்ற பூமியில்,

ஓங்கு-உயர்ந்துவருகிற, கலிமகிமை - கலியுகத்தின் பெருமை (இதுவாகும்), அந்தனே-இறைவனே, அருமைமதவேள்.

விகடக்கவி - பகடிப்பாட்டு, பகடிப்பாட்டுப் பாடுவோன், கவியென்றது இங்குப்பாட்டையும் பாடுங்கவிஞனையும் உணர்த்தும். கறுப்பு - கறுப்புத் தேவதைகள், அவை காட்டேரி முதலியன.

## குணங்காண்குறி.

கற்றோர்க ளென்பதைச் சீலமுடனேசொலுங்
　　கனவாக்கி னாற் காணலாங்
கற்புளா ரென்பதைப் பார்க்கின்ற பார்வையொடு
　　கானடையி னுங் காணலாம்
அற்றோர்க ளென்பதனை யொன்றிலும் வாரா
　　வடக்கத்தி னா லறியலா
மறமுளோ ரென்பதைப் பூதயை யென்னுமி
　　யதுகண்டு தானறியலாம்
வித்தோங்கு பயிரைக் கிளைத்துவரு முளையினால்
　　விளையுமென் றே யறியலாம்
வீரமுடை யோரென்ப தோங்கிவரு தைரிய
　　விசேடத்தி னா லறியலாம்
அத்தா குணத்தினாற் குலநலந் தெரியலா
　　மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுர தேவனே. ௬௬

(இ-ள்.) கற்ருேர்கள் என்பதை-கற்றவர்களென்பதை. சில முடனேசொல்லும்-ஒழுக்கத்தோடு சொல்லுகிற, கனம்வாக்கி ஞல் காணலாம்-மேலானவாக்கிஞல் கண்டுகொள்ளலாம், கற்பு உள்ளார் என்பதை-கற்புள்ளவரென்பதை, பார்க்கின்றபார்வை யொடு - பார்க்கிற பார்வையுடன், கால்நடையிஞும் காணல்சம்- கால்நடையாலும்கண்டுகொள்ளலாம், அற்ருேர்கள் என்பதனை- அற்றவர்களென்பதை, ஒன்றிஞும் வாரா - ஒரு காரியத்திஞும் முற்பட்டு வாராத, அடக்கத்திஞல் அறியலாம் - அடக்கத்தால் அறிந்து கொள்ளலாம், அறம் உள்ளோர் என்பதை - தரும முள்ளவர்களென்பதை, பூததயை என்னும் - (அவர்களிடத் துள்ள) பூததயை யென்கிற, நிலைகண்டு அறியலாம் - நிலையைப் பார்த்து அறிந்து கொள்ளலாம், வித்து ஓங்கு பயிரை-வித்தி ஞல் விளைகின்ற பயிரை, கிளைத்துவரு துடியிஞல்-கிளைத்துப் புறப்படுகிற துடியிஞலே விளையும் என்று அறியாலம்—வீரம் உடையோர் என்பது வீரமுள்ளவரென்பதை, ஓங்கிவரு உயர் வகுப்பு விசேடத்திஞல் அறியலாம் - தைரிய ந்து வருகிற, தைரிய விசேடத்திஞல் அறியலாம் - தைரிய விசேஷத்தால் அறிந்து கொள்ளலாம், அத்தா - இறைவனே, அண்ணலே-பெரியோனே, குணத்திஞல் - நற்குணத்தால், குலநலம தெரியலாம் - குலத்ினது நன்மையைத் தெரிந்து கொள்ளலாம், அருமை மதவேள்.

கற்புளார்-கற்புள்ள மாதர். அற்ருேர்கள்-அகங்காரகுண மற்றவர்கள், பற்றற்றவர்கள். பூததயை-உயிர்களின் மேலுண் டாகிய கிருபை. கிளைத்து வருதல். துடி - வலிமை. தைரிய விசேடம்-அதிக தைரியம், குணம் - நற்குணம் எனப்பட்டது குலநலம் என மேல்வருதலால்.

## கூடிற் பயன்படல்.

செத்தைபல கூடியொரு கயிறாயி னதுகொண்டு
திண்கரியை யுங் கட்டலாம்
திகழ்ந்தபல துளிகூடி யாறாயின் வாவியொடு
திரளேரி நிறை விக்கலாம்
ஒத்தநுண் பஞ்சுபல சேர்ந்துநூ லாயிடி
லுடுத்திடுங் கலை யாக்கலா
மோங்கிவரு கோலுடன் ஓலையுங் கூடினா
லுயர்கவிகை யாக் கொள்ளலாம்
மற்றுமுயர் தண்டுலத் தோடுதவி டுமிகூடின்
மல்குமுளை விளை விக்கலாம்
மனமொத்த நேயமொடு கூடியொரு வர்க்கொருவர்
வாழின்வெகு வெற்றி பெறலாம்
அற்றகனி யைப்பொருந் தரிபிரமர் தேடரிய
வமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௬௨

(இ-ள்.) செத்தை பலகூடி - பல திரணங்கள் சேர்ந்து, ஒருகயிறு ஆயின்-ஒரு கயிறானால், அதுகொண்டு-அந்தக்கயிற்றைக்கொண்டு, திண்கரியையும் கட்டலாம்-வலிய யானையையும் கட்டலாம், திகழ்ந்த பலதுளி கூடி - விளங்குகிற பலதுளிகள் சேர்ந்து, யாறு ஆயின் - ஆறானால், (அந்த ஆற்றைக்கொண்டு) வாவியொடு-தடாகங்களோடு, திரளேரி-திரண்ட பல ஏரிகளை

ும் நிறைவிக்கலாம் - நிரம்பப்பண்ணலாம், ஒத்த நண்பருக்கு
ல சேர்ந்து - ஒன்றற்கொன்றொத்த நட்பமான பஞ்சு பல
சேர்ந்து, நூல் ஆயிடின் நூலானல், உடுத்திடும் - உடுத்துக்
கொள்ளுதற்குரிய, கலை ஆக்கலாம்-ஆடைசெய்துக் கொள்ள
லாம் ஓங்கிவரு கோலுடன் சீலையும் கூடினுல் - உயர்ந்து வருகி
ன்ற கோலுடனே துணியும்சேர்ந்தால், உயர் கவிகை ஆக்கொ
ள்ளலாம்-உயர்ந்த குடையாகபிடித்துக் கொள்ளலாம், மற்றும்
மேலும், உயர் தண்டுலக்கோடு உயர்ந்த அரிசியுடனே, தவிடு
உமி கூடின் - தவிடும் உமியும்சேர்ந்திருந்தால், மல்குமுளை
விளைவிக்கலாம் - மிக்க முளைகளை விளையச்செய்யலாம், ஒருவர்
க்கு ஒருவர் - ஒருவரோடொருவர், மனம் ஒத்த நேயமோடு
மனமொத்த அன்புடன், கூடி வாழின் - சேர்ந்து வாழ்ந்தால்
வெகு வெற்றி பெறலாம் - மிகு வெற்றியை யடையலாம்,
அற்ற கனியை பொருத்து - அற்ற கனியைப் பழையபடியே
பொருத்திவைத்த, அரி - திருமாலும், பிரமர்-பிரமதேவரும்
தேடு அரிய - தேடுதற்கரிய, அமலனே - மலரகிதனே,
அருமை மதவேள் எ-று.

கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு கரி - கரத்தையுடை
மது, தும்பிக்கையை யுடையது, (யானை) துளி - மழைத்துளி;
கவிகை-குடை, இதுமூடுவது என்னும் பொருளுள்ளது வெகு
வெற்றி, - பலவெற்றியெனினுமமையும் திருமாலவதாரமாகிய
ஸ்ரீகிருஷ்னர் அற்ற கனியைப் பொருத்தின வரலாற்றை பார
தத்திற் காணலாம் அரிபிரமர் தேடரிய என்றது சோணசைல
வரலாற்றைக் குறித்தது.

## அதத்தற்கு வெற்றியிடம்.

கலைவலா ருக்கதிக சயமதுர வாக்கிலே
காமுகர்க் கதிக சயமோ
கைப்பொருளி லேவரு மருத்துவர்க் கோசயங்
கைவிசே டந் தன்னிலே
கலமுடைய வேசையர்க் கழகிலே யரசர்க்கு
நாளும் பணைத் தாக்கிலே
நற்றவர்க் கதிகசய முலகுபுகழ் பொறுமையிலே
ஞான வேதியர் தமக்கோ
குலமகிமை தன்னிலே வைசியர்க் கோசயங்
கூறிய துலாக் கோலிலே
குற்றமில் லாதவே ளாளருக் கோசயங்
குறையாத கொழு முனையிலே
அலைவில்குதி ரைக்குநடை வேகத்தி லதிகசய
மாமென்ப ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கக

(இ-ள்.) கலைவல்லாருக்கு - நூலாராய்ச்சியில் வல்லவர்களுக்கு அதிக சயம் - மிகுவெற்றி (எதனிடத் துண்டாகுமெனின்), மதுரவாக்கிலே - மதுர வசனத்திலேயாம், காமுகற்கு காமிகளுக்கு, அதிகசயமோ - மிகுவெற்றி (எதனிடத் துண்டாகுமெனின்) கைப்பொருளிலே - கைப்பொருளிலேயாம், வருமருத்துவர்க்கோ சயம் - வருகிற வைத்தியருக்கு வெற்றி

யோ, கைவிசேடந்தன்னிலே - ஹஸ்த விசேஷத்திலேயாம், நலம் உடைய வேசையர்க்கு - நன்மையை உடைய வேசைய ருக்கு, அழகிலே - அழகிலேயாம் அரசர்க்கு - வேந்தர்க்கு நாளும்-எந்நாளும், ரணசூரத்திலே-ரணசூரத்திலே யாம், நல்தவர்க்கு - நன்மையாகிய தவத்தோருக்கு அதிசயம் - மிகுவெற்றி, உலகுபுகழ் பொறையிலே - உலகத்தாரால் புகழப்படுகிற பொறுமையிலேயாம், ஞானவேதியர் தமக்கோ - ஞானத்தையுடைய அந்தணருக்கோ, குலம் மகிமைதன்னிலே -குலப்பெருமையிலேயாம், வைசியர்க்கோ - வணிகருக்கோ, சயம்-வெற்றி, சூரியதுலாக் கோலிலே-சூரியதராசுக்கோலிலே யாம், குற்றம் இல்லாத வேளாளருக்கோ-குற்றமற்ற வேளாள ருக்கோ, சயம்-வெற்றி, குறையாத கொழு முனையிலே-மழுங் காத கொழுமுனையிலேயாம், அலைவு இல் குதிரைக்கு - சலன மில்லாத குதிரைக்கு, நடைவேகத்திலே மிகுவெற்றியுண்டா குமென்று சொல்லுவர் (மேலோர்), அருமைமதிவேள்.

கலைவல்லார்-வித்வான்கள். மதுரவாக்கு - இனியசொல். கைவிசேடம்-கைவாசி, நலம் - போகசுகம். துலாக்கோல்-தராசுத்தண்டு. வேகம்-மிகுவிரைவு.

## ஒன்றனில்லாமையாற் பாழபடல்.

தாம்பூல தாரண மிலாததே வருபூர்ண
சந்த்ரனிகர் முக சூனியஞ்
சற்சன ரிலாததே வெகுசனஞ் சேர்ந்துவாழ்
தரும்பெரிய நகர் சூனியம்

மேம்பா டிலாதமன் னவர்கள்வந் தாள்வதே
மிக்க தேசச் சூனியம்
மிக்கநற் புத்திர னிலாததே நலமான
வீறுசேர் க்ருக சூனியம்
சோம்பாத தலைவரில் லாததே வளமுடன்
சொல்லுயர் சபா சூனியம்
தொல்லுலகி லெவர்க்கு மாதிரிய மில்லதே
சுத்த சூனிய மென்பர்காண்
ஆம்பல்வத னத்தனைக் குசனையின் றருள்செய்த
வத்தனே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கஅ

(இ-ள்.) தாய்மூலதாரணம் இல்லாததே - தாய்மூலதாரண மில்லாதிருப்பதே, வரு - கலைநிறைந்த, பூர்ணசந்திரன் நிகர் - பூர்ணசந்திரனை நிகர்த்த, முகசூனியம் - முகசூனியமாம், சற்சனர் இல்லாததே - சற்சனங்கள் இல்லாதிருப்பதே, வெகுசனம் சேர்ந்துவாழ்தரும் - வெகுஜனங்கள்கூடி வாழ்கின்ற, பெரியநகர் சூனியம் - பெரியநகரசூனியமாம், மேம்பாடு இல்லாத - மேன்மையில்லாத, மன்னவர்கள்வந்து ஆள்வதே - அரசர்வந்து ஆள்வதே, மிக்கதேசசூனியம் - மேலானதேசசூனியமாம், மிக்க நற்புத்திரன் இல்லாததே - மேன்மையாகிய நற்புதல்வன் இல்லாததே, நலமான வீறுசேர - நன்மையாகிய பெருமையடைந்த, க்ருகசூனியம் - க்ருஹசூனியமாம், சோம்பாத தலைவர் இல்லாததே - சோம்பியிராத தலைவரையுடைய தல்லாததே, வளமு

டன்சொல் உயர்சபாசூனியமாம், தொல்உலகில்-பழமையாகிய இவ்வுலகத்தில், அனைவர்க்கும்-எல்லாருக்கும், மாநிதியம் இல் லதே-பெரிய திரவியமில்லாததே, சுத்தசூனியம் என்பர்-சுத் தசூனியமென்று சொல்லுவர் (பெரியோர்), ஆம்பல் வதனத் தனை-யானைமுகத்தை யுடையவனாகிய விநாயகனையும், குகனை-முருகக்கடவுளையும், ஈன்றருள்செய்த அத்தனை - பெற்றருளின இறைவனை, அருமைமதவேள். எ-று.

தாம்பூல தாரணம்-தாம்பூலம் தரித்தல். முக சூனியம்-முகத்துக்குப் பாழாந்தன்மை. சூனியம் - பாழ், மேம்பாடில்லாத மன்னவர்கள்-கொடுங்கோலையுடைய அரசர்கள். க்ருகம்-வீடு. தலைவர் - சபாத்தியக்ஷர். சபா-சபை. நிதியம் என்பதில் அம்சாரியை. சுத்த சூனியம்-முழுப்பாழ். ஆம்பல்-யானை. ஆம்பல் வதனத்தனைக் குகனை உம்மைத் தொகை.

## மூடர் தாரதம்மியம்.

பெண்புத்தி கேட்கின்ற மூடருந் தந்தைதாய்
பிழைபுறஞ் சொலு மூடரும்
பெரியோர்கள் சபையிலே முகடேறி வந்தத்
பிதற்றிடும் பெரு மூடரும்
பண்புற்ற சுற்றஞ் சிரிக்கவே யிழிவான
பழிதொழில்செய் திடு மூடரும்
பற்றற்ற பேர்க்குமுன் பிணைநின்று பின்புபோய்ப்
பரிதவித் திடு மூடரும்

கண்கெட்ட மாடென்ன வோடியிர வலர்மீது
காய்ந்து வீழ்ந்திடு மூடருங்
கற்றறி விலாதமுழு மூடருக் கிவரெலாங்
காண்மூட ரரைமூடர் காண்
அண்கற்ற நாவலர்க் காகவே தாதுமோ
மையனே யருமை மதவே
எனுதினமு மனதினிளை தருசதுர கிரிவா
ரறப்பளீ சுர தேவனே. ௩௫

(இ-ள்.) பெண்புத்தி கேட்கின்ற மூடரும் - (தாம் அறிவு டையோராய் நடவாமல்) மனையாள் பேச்சைக்கேட்டு அப்ப டியே நடக்கிற மூடர்களும், தந்தை தாய் பிழை-தந்தைதாயர் களுடைய குற்றங்களை, புறம் சொல்லும் மூடரும் - வெளியே சொல்லுகிற மூடர்களும், பெரியோர்கள் சபையிலே-மேலோர் கள் கூடியிருக்கிற சபையில், முகடு ஏறி-முன்னே வந்துநின்று வந்தது பிதற்றிடும்-வாயில்வந்ததைத் தாறுமாருய்ப் பிதற்று கிற, பெருமூடரும் - முழுமூடர்களும், பண்பு உற்ற சுற்றம் சிரிக்க - நற்குணம் பொருந்திய தமது சுற்றத்தார் நகைக்கும் படி, இழிவுஆன - இழிவாகிய, பழிதொழில் செய்திடும் மூட ரும் - பழிதொழில்களைச்செய்கிற மூடர்களும். பற்று அற்ற பேர்க்கு - (தம்மிடத்தில்) மெய்யன்பில்லாதவர்கள் பொருட்டு, முன்பிணை நின்று— முன்புபோய் பரிதவித்திடும் மூடரும்- (அவர்களால் தமக்குத் துன்பம் நேரிட்ட) பிறகுபோய் பச் சாத்தாபப்படுகிற மூடர்களும், கண்கெட்டமாடு என்ன ஓடி-

கண்கெட்ட மாடுபோல ஓடி, இரவலர்மீது-யாசகர்மேல், காய்ந்து வீழ்ந்திடும் மூடரும் - கோபித்து விழுகிற மூடர்களும் ஆகிய, இவர் எல்லாம்-இவர்களெல்லாரும், கற்று அறிவு இல்லாத முழு மூடருக்கு - கற்றும் அறிவில்லாத முழுமூடர்களுக்கு, கால்மூடர் அரைமூடர்-கால்மூடர் அரைமூடருமாக எண்ணப்படுவார்கள், அங்கற்ற - (உன்னைச் சரணமாக) சார்தலைக் கற்ற. நாவலர்க்காக - சுந்தரமூர்த்தி நாயனார்பொருட்டு, அன்று போம்-தூதுசென்ற, ஐயனே-இறைவனே, அருமை தவேள்.

புறஞ்சொல்லுதல் - வெளியிட்டுப் பலரறியச் சொல்லுதல், முகடேறுதல் - எதிரேறுதல். பண்பு - எல்லாரியல்புகளையும் அறிந்து அவர்களுக்கேற்ப ஒத்துநடக்குங்குணம். சுற்றம் சுற்றிநிற்பது, சுபாசுபகாலங்களில் வந்து சூழ்ந்திருப்பது ஆதலால் சுற்றம் காரணப்பெயர். 'சுற்றத்திற்கழகு சூழவிருத்தல்' என்றார் ஔவையாரும். பரிதபித்தல் என்பது பரிதவித்தல் என வழங்கிவருகின்றது. பரிதாபம் வடசொல்- அறிவின்மையை வற்புறுத்தற்கு கல்வியறிவில்லாதபெரியமூடர் என்றுரைப்பினுமமையும். அங்முதனிலைத் தொழிற்பெயர், சார்தல் என்பது பொருள். பற்று-ஆதரவு எனினுமமையும். நாவலர்க்காகவே என்பதில் ஏகாரம், கடவுளரெல்லார்க்கும் மேலாகிய தமது பெருந்தன்மையைத் தம்மைக்குறித்து கவிபாடிய ஒரு அடியவரிடத்துக்கொண்ட பெருங்கருணையால் இருந்தது தெரியாதபடி விட்டு அடியவர்க்கெளியவனாய்த் தூதுசெல்லுதலாகிய சிறுதொழிலை மேற்கொண்டமையை விளக்கவந்தது.

நாவலர்க்காகத் தூதுபோனகதை:—சுந்தரமூர்த்திநாயனார் தலயாத்திரை சென்றபோது திருவொற்றியூரிலே சங்கிலியாரை விவாகஞ் செய்துகொண்ட செய்தியைக் கேள்விப்பட்டிருந்த துக்கமுங் கோபமுங்கொண்டிருந்த அவரது முதல் மனைவியாகிய பரவையார் பிறகு நாயனார் திருவாரூருக்கு வந்தபோது தம்மிடம் வருதற் குடன்படாமல், வந்தால் உயிர்விடுவேனென்று சொல்ல, அதனையறிந்த சுந்தரமூர்த்தி நாயனார் பரமசிவனைத் தியானித்து பரவையாருடைய ஊடலை தீர்க்கும் பொருட்டுத் தூதுசென்றருள வேண்டும் என்றுபிரார்த்திக்க சிவபெருமான் சிவார்ச்சனை செய்கிற ஒரு ஆதிசைவரது உருவங்கொண்டு அர்த்தராத்திரியில் இரண்டுதரந் தூது சென்று சமாதானஞ்செய்து, அவள் கொண்டிருந்த கோவத்தைத் தணித்து நாயனாரை அவளிடத்திற் போகும்படி செய்வித்தருளினர் என்பதாம்.

## இதற்கிது வேண்டுமெனல்.

தனக்குவெகு புத்தியுண் டாகிலும் வேறொருவர்
தம்புத்தி கேட்க வேண்டுந்
தானதிக சூரனே யாகிலுங் கூடவே
தளசேகரங்கள் வேண்டும்
கனக்கின்ற வித்துவா னாகிலுந் தன்னினுங்
கற்றோரை நத்த வேண்டுங்
காசினியை யொருகுடையி லாண்டாலும் வாசலிற்
கருத்துள்ள மந்திரி வேண்டும்

தொனிக்கின்ற சங்கீத சாமர்த்திய னாகிலுஞ்
சுதிகூட்ட வொருவன் வேண்டும்
சுடர்விளக் காயினு நன்றாய் விளங்கிடத்
தூண்டுகோ லொன்று வேண்டும்
அனற்கண்ணனேபடிக சங்கநிகர் வண்ணனே
ஐயனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள உ௯
ரறப்பளீசுர தேவனே.

(இ-ள்.) தனக்கு வெகு புத்தி உண்டாயினும் - (ஒருவன்) தனக்குமிக்க அறிவுண்டாயிருந்தாலும், வேறு ஒருவர்தம் புத்திகேட்கவேண்டும் - வேறொரு தகுதியுள்ளவர் சொல்லும் அறிவையுங்கேட்கவேண்டும். தான் அதிக சூரனே ஆயினும் - தான்மிகு வீரனேயானாலும், தளசேகரங்கள் கூடவே வேண்டும் - சேனைகளைத் தன்னுடன் சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும், கனக்கின்ற வித்துவான் ஆயினும் - (எவ்விடத்தும் பெருமையடைகிற வித்துவானானாலும், தன்னினும் கற்றோரை தன்னினும் மிகுதியாய்ப் படித்தவர்களை) நத்தல்வேண்டும். விரும்பிச்சேரவேண்டும், காசினியை - பூமிமுழுதும், ஒருகுடையில் ஆண்டாலும் - ஒருகுடைநிழலில்வைத்து ஆண்டாலும், வாசலில் - தன்வாசலில், கருத்து உள்ள மந்திரி வேண்டும் - ஆலோசனையுள்ள மந்திரியை யுடைத்தா யிருக்கவேண்டும், தொனிக்கின்ற சங்கீத சாமர்த்தியன் ஆயினும் - இனிமையாகப் பாடுகிற சங்கீதத்தில் சமர்த்தனானாலும், சுதிகூட்ட ஒருவன் வேண்டும் - உடனிருந்து சுதிகூட்டித்தர ஒருவனிருக்கவேண்டும், சுடர்

விளக்கு ஆயினும்-ஒளியுள்ள தீபமேயானாலும், நன்றாய்விளங் கிட-நன்றாக ஒளிசெய்வித்தற்கு, தூண்டுகோல் ஒன்றுவேண் டும் - தூண்டிவிடுங்கோல் ஒன்றிருக்கவேண்டும், அனல் கண் ணனே-நெற்றியில் நெருப்புக்கண்ணை யுடையவனே, படிகசங் கம் நிகர்வண்ணனே-படிகத்தையும் சங்கையும்போன்ற வெண் ணிறமுடையவனே, ஐயனே-இறைவனே, அருமைமதவேள்.

"கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாஞ் சிறப்பு" ஆதலால், 'கனக்கின்ற வித்துவான்' என்றார். வித்வான் அறிவுடையவன், வித் அறிதல். நீதிவழுவாத அரசாட்சியைக் குடையென்றல் மரபு. ஒருகுடையில் ஆளுதலை, 'ஏக சக்ராதிபத்யம்' என்ப வர் வடநூலார். வாசல் என்றது சபையை. மந்த்ரம் - ஆலோ சனை யாதலால் அதனை யுடையவனை மந்திரி யென்பவர் வடநூ லார். படிகசங்கம் - படிகத்தொகுதியெனினு மமையும். சுதி- சுருதி. சுதிகூட்டல் என்பது - முதல் நாதமாகிய ஷட்ஜமத் தோடு பஞ்சமம் என்னும் ஸ்வரத்தை மநோரஞ்சக மாகும்படி சுத்தமாகப் பொருந்துதல், யோகிகளுக்கு ஞானோபதேசஞ் செய்யும் சிவபெருமானது மூர்த்தி தெளி பளிங்குநிற மாத லால் படிகசங்க நிகர்வண்ணனே, என்றார்.

## வறுமையின் கொடுமை.

மேலான சாதியி லுதித்தாலு மதிலென்ன
வெகுவித்தை கற்று மென்ன
மிக்கவதி ரூபமொடு சற்குண மிருந்தென்ன
மிகுமானி யாகி லென்ன

பாலான மொழியுடைய னுயென்ன வாசார
பரனு யிருந்து மென்ன
பார்மீது வீரமொடு ஞானவா னுயென்ன
பாக்கிய மிலாத போது
வாலாய மாய்ப்பெற்ற தாயுஞ் சலித்திடுவள்
வந்த சுற்றமு மிகழுமே
மரியாதை யில்லாம லனைவரு மேசுவார்
மனைவியுந் தூறு சொல்வாள்
ஆலால முண்டகனி வாயனே நேயனே
யனகனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கக

(இ-ள்.) மேலான சாதியில் உதித்தாலும் - மேன்மை யாகிய சாதியிற் பிறந்தாலும், அதில் என்ன - அதனால் என்னபயன், மிக்க அதிரூபமொடு - மிகுந்த அதிசௌந்தரியத் துடன். சற்குணம் இருந்து என்ன - நற்குண மிருந்தும் அதனால் என்னபயன், பிருமானி ஆகில் என்ன - மிக்க மானமுடையவனானாலும் அதனால் என்ன பயன், பால் ஆன மொழி உடையனாய் என்ன - பால்போன்ற இன்சொல்லை யுடையவனா னாலும் அதனால் என்னபயன், ஆசாரபரனாய் இருந்தும் என்ன - நல்ல ஒழுக்கமுடையவனா யிருந்தாலும் அதனால் என்னபயன், பார்மீது - பூமியின்மேல், வீரமொடு - வீரத்துடன், ஞான வான் ஆய் என்ன - ஞானத்தை யுடையவனானாலும் அவ னால் என்ன பயன், பாக்கியம் இல்லாதபோது - செல்வமில்

லாத காலத்தில், வாலாயமாய் - தாராளமாய், பெற்றதாயும் சலித்திடுவள் - பெற்றதாயும் சலித்துக்கொள்வாள், வந்த சுற்றமும் இகழும் - வந்த உறவும் இகழ்ந்திடும், மரியாதையில்லாமல் அனைவரும் பேசுவார் - மரியாதை யில்லாமல் எல்லாரும் பேசுவார்கள், மனைவியும் தூறுசொல்வாள் - மனையாளும் பழிசொல்வாள், ஆலாலம் உண்ட - ஆலகால விஷத்தையுண்ட கனிவாயனே - கனிவாயையுடையவனே, நேயனே -(எல்லாவுயிர்களின்மேலும்) அருளுடையவனே, அநகனே - பரிசுத்தனே, அருமை மதவேள்.

உதித்தாலும் என்பது முதலியவற்றிலுள்ள உம்மைகள் உயர்வு சிறப்பு ஆசாரபரன் - நல்லொழுக்கத்திற் சிறந்தவன் எளிவுமமையும், பரன் - சிறந்தவன் வாலாயம் - மிகுதியுமாம் சலித்திடுதல் - வெறுத்திடல்.

## ஈனத்துவம்.

இரப்பவன் புவிமீதி லீனனவ னுக்கில்லை
யென்னுமவ னவனி லீன
னீகின்ற பேர்தமை யீயாம லேகலைத்
திடுமூட னவனி லீனன்
உரைக்கின்ற பேச்சிலே பலனுண் டெனக்காட்டி
யுதவிடா னவனி லீனன்
னுதவவே வாக்குறைத் தில்லையென் றேசொலு
முலுத்தனே வவனி லீனன்

பரக்கின்ற யாசகர்க் காசைவார்த் தைகள்சொலிப்
பலகா லலைந்து திரியப்
பண்ணியே யில்லையென் றிடுகொடிய பாவியே
பாரிலெல் லோர்க்கு மீனன்
அரக்கிதழ்க் குமுதவா யுமைநேச னேயெளிய
ரமுதனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள ௯௮
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) புவிமீதில்-பூமியின்மேல், இரப்பவன்யாசிப்பவன்
ஈகன்-இழிந்தவன், அவனுக்கு-அந்தவனுக்கு, இல்லையென்னு
மவன்-இல்லையென்பவன், அவனில் ஈகன்-அவனிலும் இழிந்த
வன், ஈகின்றபேர் தமை - கொடுப்பவர்களை, ஈயாமல்-கொடுக்க
வொட்டாமல், கலைத்திடும் மூடன் - கலைக்கின்ற மூடன், அவ
னில் ஈகன்-அவனினும் இழிந்தவன், உரைக்கின்ற பேச்சிலே
சொல்லுகின்ற சொல்லிலே, பலன் உண்டு என காட்டி-பயனு
ண்டென்று காண்பித்து, உதவிடான்-கொடாதவன், அவனில்
ஈனன் - அவனிலும் இழிந்தவன், உதவ வாக்கு உரைத்து-
கொடுக்கும்படி வாக்குக்கொடுத்து, இல்லை என்று சொல்லும்
உலுத்தனே - இல்லையென்று சொல்லுகிற லோபியோ, அவ
னில் ஈகன் - அவனிலும் இழிந்தவன், பரக்கின்ற யாசகர்க்கு-
மிகுதியாகிய யாசகர்களுக்கு, ஆசை வார்த்தைகள் சொல்லி-
ஆசை மொழிகளைச் சொல்லி, பலகால்-பலதரம், அலைந்துதிரி
யப்பண்ணி - அலைந்து திரியச்செய்து, (முடிவில்) இல்லையென்
றிடு கொடியபாவியே - இல்லையென்று சொல்லுகிற கொடும்பா

விழைய, பாரில்-பூமியிலுள்ள, எல்லோர்க்கும் - (ஈகர்) எல்லாரினும், ஈகன் - இழிந்தவன், அரக்கு இதழ்-செவந்த இதழ்களையுடைய, குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, வாய் - வாயினையுடைய, உமை நேசனே - உமாதேவிக்குப் பிரியனே, எளியர் அமுதனே - எளியவர்க்கு அமுதம் போல்பவனே, அருமை மதவேள். ஏ-று.

இரப்பவன் முதலிய ஈகர் யாவரினும், யாசகரைப் பல கால் அலையச் செய்து முடிவில் இல்லையென்று சொல்லுகிற ஈகன் மிக்க ஈகன் என்பது இச்செய்யுட் கருத்து, அரக்கு-செவப்பு-இதழ்-தளம்.

## மறைப்பனவும் வெளிப்படுத்துவனவும்.

சென்மித்த வருடமு முண்டான வத்தமுந்
தீதில் கிரகச் சாரமுந்
தின்றுவரு மௌடதமு மேலான தேசிகன்
செப்பிய மகா மந்த்ரமும்
புன்மையவ மானமுந் தானமும் பைம்பொனணி
புனையு மடவார் கலவியும்
புகழ்மேவு மானமு மிவையொன்ப தந்தமது
புந்திக்குளே வைப்பதே
தன்மமென் றுரைசெய்வ ரொன்றார் கருத்தையுந்
தன்பிணியை யும் பசியையுந்
தான்செய்த பாவமு மிவையெலாம் வேறொருவர்
தஞ்செவியில் வைப்ப தியல்பாம்

அன்மருவு கண்டனே மென்றுலகு மின்றவுமை
யன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை கருசதுர கிரிவள
ரறப்பளி சுரதேவனே. ௬௪

(இ-ள்.) சொன்மித்த வருடமும்-பிறந்த வருஷத்தையும் உண்டான அத்தமும் - உண்டாயிருக்கிற பொருளையும், நிலை இல்கிரகச்சாரமும் - நிலைமையில்லாத கிரகசாரத்தையும், (கன் மையாகிய கிரகசாரத்தையும்) நின்று வரும் ஔடதமும்-உட் கொண்டு வருகிற மருந்தையும், மேலான தேசிகர் செப்பிய மகாமந்த்ரமும், புன்மை அவமானமும்-(தமக்கு நேரிட்ட) இழிவான அவமானத்தையும், தானமும் - (தாஞ்செய்த) தானத்தை யும், கைப்பொன் அணிபுனையும் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்த, மடவார் கலவியும் - மாதரோடு (தாம்செய்த) புணர்ச்சி யின்பத்தையும், புகழ்மேவும் மானமும் கீர்த்தி பொருந்திய பெருமையையும் இவை ஒன்பதும்-இவை யொன்பதையும், தமது புத்திக்குள் வைப்பதே - தமது மன த்தில் வைப்பதே, தன்மம் என்று - தர்மமென்று, உரைசெய் வர் - (பெரியோர்) சொல்லுவர், ஒன்னார் கருத்தையும் - பகை வரது அபிப்பிராயத்தையும், தன் பிணியையும் - தனதுநோ யையும், பசியையும் - பசியினையும், தான் செய்த பாவமும் - தான் செய்த பாவத்தையும், இவை எல்லாம் - இவையாவும் வேறு ஒருவர் தம் செவியில் வைப்பது - வேறொருவர்க்குக் கேட்கும் படி செய்வது, இயல்பு ஆம் - (தரும நூலின்) துணி பாம், அல்மருவு கண்டனே - இருட்டுப் பொருந்திய கண்டத்

விதியை, பாரில்-பூமியிலுள்ள, எல்லோர்க்கும் - (ஈநர்) எல்லாரினும், ஈநன்.- இழிந்தவன், அரக்கு இதழ்-செவந்த இதழ்களையுடைய, குமுதம் - செவ்வல்லி மலர்போன்ற, வாய் - வாயினையுடைய, உமை நேசனே - உமாதேவிக்குப் பிரியனே, எளியர் அமுதனே - எளியவர்க்கு அமுதம் போல்பவனே, அருமை மதவேள். எ-று.

இரப்பவன் முதலிய ஈநர் யாவரினும், யாசகரைப் பலகால் அலையச் செய்து முடிவில் இல்லையென்று சொல்லுகிற ஈநன் மிக்க ஈநன் என்பது இச்செய்யுட் கருத்து, அரக்கு-செவப்பு-இதழ்-தளம்.

## மறைப்பனவும் வெளிப்படுத்துவனவும்.

சென்மித்த வருடமு முண்டான வத்தமுந்
  தீதில் கிரகச் சாரமுந்
தின்றுவரு மௌடதமு மேலான தேசிகன்
  செப்பிய மகா மந்த்ரமும்
புன்மையவ மானமுந் தானமும் பைம்பொனணி
  புனையு மடவார் கலவியும்
புகழ்மேவு மானமு மிவையொன்ப துந்தமது
  புந்திக்குளே வைப்பதே
தன்மமென் றுரைசெய்வ ரொன்னார் கருத்தையுந்
  தன்பிணியையும் பசியையுந்
தான்செய்த பாவமு மிவையெலாம் வேறொருவர்
  தஞ்செவியில் வைப்ப தியல்பாம்

அன்மருவு கண்டனே மூன்றுலகு மீன்றவுமை
யன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினிலே கருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௩௧

(இ-ள்.) சொன்மித்த வருடமும்-பிறந்த வருஷத்தையும் உண்டான அத்தமும் - உண்டாயிருக்கிற பொருளையும், தீது இல்கிரகச்சாரமும் - தீமையில்லாத கிரகசாரத்தையும், (நன்மையாகிய கிரகசாரத்தையும்) தின்று வரும் ஔடதமும்-உட்கொண்டு வருகிற மருந்தையும், மேலான தேசிகள் செப்பிய மகாமந்த்ரமும், புன்மை அவமானமும்-(தமக்கு நேரிட்ட) இழிவான அவமானத்தையும், தானமும் - (தாக்செய்த) தானத்தையும், கைப்பொன் அணியுனையும் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்த, மடவார் கலவியும் - மாதரோடு (தாம்செய்த) புணர்ச்சி யின்பத்தையும், புகழ் மேவும் மானமும் கீர்த்தி பொருந்திய பெருமையையும் இவை ஒன்பதும்-இவை யொன்பதையும், தமது புத்திக்குள் வைப்பதே - தமது மனத்தில் வைப்பதே, தன்மம் என்று - தர்மமென்று, உரைசெய்வர் - (பெரியோர்) சொல்லுவர், ஒன்னார் கருத்தையும் - பகைவரது அபிப்பிராயத்தையும், தன் பிணியையும் - தனது நோயையும், பசியையும் - பசியினையும், தான் செய்த பாவமும் - தான் செய்த பாவத்தையும், இவை எல்லாம் - இவையாவும் வேறு ஒருவர் தம் செவியில் வைப்பது - வேறொருவர்க்குக் கேட்கும் படி செய்வது, இயல்பு ஆம் - (தரும நூலின்) துணிபாம், அல்மருவு கண்டனே - இருட்டைப் பொருந்திய கண்டத்

தை யுடையவனே, மூன்றுலகும் - மூவுலகத்தையும், என்ற பெற்ற, உமை அன்பனே - உமாதேவிக்கு நேசனே, அருமை மதவேள். எ-று.

அத்தம் - பொருள் த்தில் கிரகச்சாரம் - நன்மையாகிய க்ரஹசஞ்சாரம்; உரைசெய்வர் என்னும் வினைக்கு எழுவாயாகிய பெரியோர் என்பது வருவிக்கப்பட்டது பாற்கடலிற்பிறந்த நஞ்சை யுண்டு கறுத்த கழுத்தை யுடையதலால் சிவபெருமானை 'அன்மருவு கண்டனே' என்றார் மூன்றுலகு - சுவர்க்க மத்ய பாதாள லோகங்கள்.

## தேவர்கள் காலவளவை

சதுரயுக மோரிரண் டாயிரம் பிறப்படிற்
சதுமுகற் கொருதினமதாஞ்
சாற்றுமித் தினமொன்றி லேயிந்த்ர பட்டங்க
டாமு மீரேழ் சென்றிடும்
மதிமலியு மித்தொகையு னயனுமு னூறுபோய்
மாண்டபோ தொரு கற்பமாம்
மாறிவரு கற்பமொரு கோடிசென் றொடிய
மாறனக் கோர் தினமதாம்
ஆதிபரவு மித்தொகையி லொருகோடி கெடியமா
லொன்றியே போய் மறைந்தா
லுமைகேயார் பாகனே நீகங்கைத் தவிர்முடி
துளங்கிடுங் காலமென்பார்

அதிகமுள பலதேவர் தேவனே தேவர்கட்
கரசனே யருமை மதவேள்
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) சதுரயுகம் ஓரிரண்டாயிரம் பிற்படின் - ஒருஇரண்டாயிரம் சதுர்யுகங்கள்கழிந்தால், சதுமுகற்கு-நான்குமுகங்களையுடைய பிரமதேவனுக்கு, ஒரு தினமது ஆம்-ஒருநாளாகும் சாற்றும்-சொல்லப்பட்ட, இத்தினம் ஒன்றிலே-இந்தஒரு நாளிலே, இந்ரபட்டங்கள் தாமும்-இந்திரபட்டங்களும் ஈரேழ் சென்றிடு-பதினான்கு கழிந்துவிடும், மதிமலியுமித்தொகையின் கருதுதற்குரிய இந்தத் தொகையின்படி, அயன் ஆயுள்-பிரமனது ஆயுளானது, நூறுபோய் மாண்டபோது-நூறுசென்று (அவனும்) இறந்தபொழுது, ஒருகற்பம் ஆம்-ஒருகற்பகாலமாகும், மாறிவரும் கற்பம் - மாறிமாறிவருகிற கற்பங்கள், ஒரு கோடிசென்றால்-ஒரு கோடிகழியுமானால், நெடியமால்தனக்கு-நெடுமாலுக்கு ஓர் தினமது ஆம் - ஒருநாளாகும், துதிசெயும் இத்தொகையில்-துதிக்கப்பட்ட இத்தொகையில், ஒரு கோடி நெடியமால் - ஒருகோடி நெடுமால்கள், தோன்றி - பிறந்து, போய்மறைந்தால் - சென்று மறைந்தார்களானால், தோகை-உமாதேவியை, ஓர்பாகனே - ஒருபாகத்தி லுடையவனே, நீ நகைத்து-நீசிரித்து, அணிமுடி - அழகிய தலையை-துளக்கிடும் காலம் என்பார் அசைக்கிறகாலமென்று சொல்லுவர் (அறிஞர்) அதிகம் உள்ள-மிகுதியாயுள்ள, பலதேவர் தேவனே - பலதேவர்களுக்கும் தேவனே, தேவர்கட்கு அரசனே - தேவர்களுக்கு வேந்தனே, அருமைமதவேள்.

(அதனது) முகத்திலேயாம், மறையவர்க்கு - வேதியர்க்கு, உயர்புநிதம் - உயர்ந்த பரிசுத்தம், மலர் அடியிலே - தாமரை மலர்போலுந் திருவடியிலேயாம், ஒளிகொள் கண்ணடிக்கு - ஒளியையுடைய கண்ணடிக்கு, புநிதம்-பரிசுத்தம், மாசு இல்-குற்றமில்லாத, முன்புறமதனிலே - முற்பக்கத்திலே யாம், மேம்படும்-மேன்மைபொருந்திய, பசுவினுக்கு-பசுவுக்கு, (புநிதம்-பரிசுத்தம்), பின்புறத்திலே-பின்பக்கத்திலேயாம், மிக்க மட மாதருக்கோ-மேன்மையாகிய இளமைபொருந்திய மங்கையர்க்கோவென்றால் மேனியெல்லாம்-உடம்புமுழுதும் புநிதமாகும்-பரிசுத்தமாகும், ஆசௌசமொடுமேவு வனிதையர் தமக்கும்-அசுத்தத்தோடிருக்கிற மாதருக்கும், தாம்பிரமதற்கும்-செம்புக்கும், மிகு-மேலான, வெள்ளி வெண்கலம் இரும்பு பொன் ஈயம் என்பவைகளுக்கும், தரும்புநிதம் - பரிசுத்தத்தைத் தருவன யாவையெனின், வருபெருக்கொடு - வருகிற நீர்ப்பெருக்குடனே. புளி சுண்ணம் சாம்பல் சாரும் மண் தாது சாணம் இவை புநிதம் ஆம் என்பர் - வருகின்ற நீர்ப்பெருக்கு புளி சுண்ணாம்பு சாம்பல் மண் காவிக்கல் சாணம் ஆகிய இவைகள் பரிசுத்தஞ் செய்வனவாம் என்று சொல்லுவர்(அறிஞர்), மாமேரு வில்லியே - மகமேரு மலையை வில்லாகவுடையவனே, அநகனே - பரிசுத்தனே, அருமை மதவேள். எ-று.

ஆசௌசம்-பூப்புக்காலம், ஆசௌசத்தோடிருக்கும் பெண்களுக்கு நீர்ப்பெருக்கும்- தாம்பிரத்துக்குப் புளியும், வெள்ளிக்குச் சுண்ணாம்பும், வெண்கலத்துக்குச் சாம்பலும், இரும்புக்கு மண்ணும், தங்கத்துக்குக் காவிக்கல்லும், ஈயத்துக்குச்

சாணமும் சுத்திசெய்யும் பொருள்களாம் என்பது இச்செய்யு ளிற் கூறப்பட்டது.

## அடங்காதவற்றை யடக்குமுபாயம்.

கொடியபொலி யெருதையிரு மூக்கிலுங் கயிறென்று
கோத்துவச விர்த்தி கொள்வார்
குவலயந் தனின்மதக் களிறதனை யங்குசங்
கொண்டுவச விர்த்தி கொள்வார்
படியில்விட வரவைமந் திரதந் திரத்திஞற்
பற்றிவச விர்த்தி கொள்வார்
பாய்பரியை நெடியகடி வாளமது கொடுநடை
பழக்கிவச விர்த்தி கொள்வார்
விடமுடைய துட்டரைச் சோர்பந்து கைக்கொண்டு
வீசிவச விர்த்தி கொள்வார்
மிக்கபெரி யோர்களுங் கோபத்தை யறிவால்
விலக்கிவச விர்த்தி கொள்வார்
அடியவர் துதிக்கவரு செந்தா மரைப்பதத்
தையனே யருமை மதவே
ளனுதினமு மனதினிணை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. சஉ

(இ-ள்.) கொடிய பொலியெருதை - கொடிதாகிய பொலி யெருதை, கயிறு ஒன்று - ஒருகயிற்றை, இருமூக்கிலும் கோத்து - இரண்டு மூக்கிலும் கோர்த்து, வசவிர்த்தி கொள்வார் - வசவிர்த்திக்குக் கொண்டுவருவார்கள், குவலயம் தனில் - பூம

ண்டலத்தில், மதக்களிறதனை - மதயானையை, அங்குசங்கொ
ண்டு - அங்குசத்தினால், வசவிர்த்தி கொள்வார் - வசவிர்த்தி
க்குக் கொண்டுவருவார், படியில்-பூமியில், விடம் அரவை-விஷ
த்தையுடைய பாம்பை, மந்திர தந்திரத்தினால்-மந்திர தந்திர
ங்களாலே பற்றி-பிடித்து வசவிர்த்தி கொள்வார்-வசவிர்த்திக்
குக் கொண்டுவருவார்கள், பாய்பரியை-பாய்கின்ற குதிரையை
நெடிய கடிவாளமதுகொடு - நீண்ட கடிவாளத்தினால், நடை
பழக்கி-நடைபழகச்செய்து, வசவிர்த்தி கொள்வார்-வசவிர்த்
திக்குக் கொண்டுவருவார்கள், விடம் உடைய துட்டரை - விஷ
முள்ள துஷ்டரை, சோர்பந்து கைக்கொண்டு - கொறடாவைக்
கைக்கொண்டு, வீசி-அடித்து, வசவிர்த்தி கொள்வார்-வசவிர்த்
திக்குக் கொண்டுவருவார்கள், மிக்க பெரியோர்களும்-மேலான
பெரியோர்களும் கோவத்தை-கோபத்தை, அறிவால்விலக்கி-
அறிவினால் விலக்கி, வசவிர்த்தி கொள்வார் - வசவிர்த்திக்குக்
கொண்டுவருவார்கள், அடியவர் துதிக்க அடியார் துதித்தலும்
வரு-(அவர்க்கு எதிரே) எழுந்தருளுகிற, செந்தாமரை - செந்
தாமரை மலர்போன்ற பதத்து-திருவடியையுடைய, ஐயனே-
கடவுளே, அருமை மதவேள், எ-று.

வசவிர்த்தி கொள்ளுதல் - வசப்படுத்துதல். அங்குசம்-தோட்டி. வீசுதல்-அடித்தல். செந்தாமரை - முதலாகுபெயர்.

## ஒளியினுயர்வு.

செழுமணிக் கொளியதன் மட்டிலே யதினுமொளி
செய்யகச் சோத மெனவே

செப்பிடுங் கிருமிக்கு மிக்கவொளி யதனினுந்
தீபத்தி னொளி யதிகமாம்
பழுதிலாத் தீவர்த்தி தீபத்தி னதிகமாம்
பகல்வர்த்தி யதி லதிகமாம்
பாரமத் தாப்பினொளி யதிலதிக மதிலுமோ
பனிமதிக் கொளி யதிகமாம்
விழைவுதரு பரிதிக்கு மனுநீதி மன்னர்க்கும்
வீரவித ரணிக ருக்கும்
மிக்கவொளி திசைதொறும் போய்விளங் கிடுமென்ன
விரகுளோ ருரை செய்குவார்
அழல்விழிகொ டெரிசெய்து மதனவே டனைவென்ற
வண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. சஅ

(இ-ள்.) செழுமணிக்கு ஒளி-செழுமையாகிய இரத்திநத்துக்கு ஒளியிருப்பது, அதன்மட்டிலே - அதினளவிலேயே, அதினும்-அதைப் பார்க்கிலும், செய்ய-செவ்விய, சச்சோதம் என செப்பிடும் கிருமிக்கு-கச்சோதமென்று சொல்லப்படுகிற கிருமிக்கு, மிச்சம் ஒளி-மேலான ஒளியுண்டு, அதனினும்-அதைப்பார்க்கிலும், தீபத்தின் ஒளி அதிகம் ஆம்-தீபத்தின் ஒளி அதிகமாகும் தீபத்தின்-தீபத்தினொளியைப் பார்க்கிலும், பழுதுஇல்லாதீவர்த்தி அதிகம் ஆம்-குற்றமில்லாத தீவர்த்தியின் ஒளி அதிகமாகும், அதின் - அதைப்பார்க்கிலும், பகல்வர்த்தி அதிகம் ஆம்-பகல்வர்த்தியின் ஒளி அதிகமாகும்,

அதின்-அதைப்பார்க்கிலும், பாரம் மத்தாப்பின் ஒளி அதிகம் பெரிய மத்தாப்பின் ஒளி அதிகமாகும், அதினும் - அதைப் பார்க்கிலும், பனிமதிக்கு ஒளி அதிகம் ஆம் - குளிர்ச்சியையு டைய சந்திரனுக்கு ஒளி அதிகமாகும், விழைவுதரு பரிதிக் கும்-விருப்பத்தைத் தருகிற சூரியனுக்கும், மநுநீதி மன்னர்க் கும்-மநுநீதியுள்ள அரசருக்கும் வீரம் விதரணிகருக்கும் வீரத்தையுடைய விதரணிகருக்கும் - உள்ளே, மிக்க ஒளி மேலான ஒளியானது, திசைதொறும்போய் விளங்கிடும் என்ன - எல்லாத் திசைகளிலும் சென்று விளங்குமென்று, சொல் விரகு உள்ளோர் - அறிவுடையோர், உரைசெய்குவார்-சொல வார்கள், அழல்விழிகொடு - நெருப்புக் கண்ணினால், மத நவேளதனை-மன்மதனை, எரிசெய்துவென்ற - எரித்துவென்ற, அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள்.

கச்சோதம்-மின்மினிப்பூச்சி. இதனைகத்யோகம் என்பர் வடநூலார். கிருமி-புழு.

குணங்குற்றமாதல்.

வான்மதியை நோக்கிடிற் சோரர்கா முகருக்கு
மாறுத வல் விடமதாம்
மகிழ்நன் றனைக்கர்ணி விதமிலா விபசரிய
மாதருக் கோ விடமதாம்
மேன்மைதரு நற்சுவை பதார்த்தமுஞ் சுரரோக
மிக்கபேர்க் கதிக விடமாம்
வித்தியா திபர்தமைக் கண்டபோ ததிலோப
வீணர்க் கெலாம் விடமதாம்

ஈனமிகு புன்கவிவ லோர்க்கதிக சபைகாணி
லேலாத கொடிய விடமா
மேற்றமில் லாதபடு பாவிகட் கறமென்னி
லெக்நாளு மதிக விடமாம்
ஆனதவ யோகியர்க ளிதயதா மரையுறையு
மண்ணலே யருமை மதலே
வனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. சஉ

(இ-ள்.) வான்மதியை நோக்கிடின்-ஆகாயத்திலுள்ள சந்திரனைப்பார்த்தால், சோரர் காமுகருக்கு திருடருக்கும். காமுகருக்கும், மாருதவல்விடமது ஆம்-நீங்காத வலியவிஷமாகும், மகிழ்நன் தனைகாணில்-கணவனைக்கண்டால், இதம் இல்லாவிப சரியமாதருக்கு-நன்மையில்லாதவிபசார மங்கையர்க்கு, விடமது ஆம்-விஷமாகும், மேன்மைதரும் நல்சுவைபதார்த்தமும்-மேன்மையைக் கொடுக்கிற நற்சுவையுள்ள பதார்த்தங்களும், சுரரோகம் மிக்கபேர்க்கு - சுரவியாதி மிகுந்த பேர்களுக்கு, அதிகவிடம் ஆம் - அதிக விஷமாகும், வித்தியாதிபர் தமை கண்டபோது வித்தையிற் சிறந்தவர்களைக் கண்டகாலத்தில், அதிலோப வீணர்க்கு எல்லாம் - அதிகலோப குணமுள்ள வீணர்களுக்கெல்லாம், விடமது ஆம் - விஷமாம், ஈனம்மிகு-இழிவிற் சிறந்த புன்கவிவல்லோர்க்கு - அற்பமாகிய கவிவாணருக்கு, அதிக சபைகாணில் - மேலான சபையைக்கண்டால், ஏலாத கொடியவிடம் ஆம்-ஏற்கவொண்ணாத கொடிய விஷமாகும், ஏற்றம் இல்லாத படுபாவிகட்கு - உயர்வில்லாத படுபவி

களுக்கு, அறம் என்னில் தருமமென்றால் எந்நாளும் அதிக விடம் ஆம்-எக்காலத்தும் அதிகவிஷமாகும், ஆனதவயோகியர்கள் உண்டான தவத்தையுடைய யோகியர்களுடைய, இதய தாமரை உறையும்-இருதயமாகிய தாமரைமலரில் வாழ்கின்ற, அண்ணலே-பெரியோனே, அருமை மதவேள்.

வான்மதி என்பதன் வால்மதியெனப்பிரித்து வெண்மையாகிய சந்திரன் எனினும் பொருந்தும். விததியாதிபர் - வித்வான்கள்.

## உயர்வன்றித்தாழ்வும் சிறக்குமிடம்.

வெகுமான மாகிலு மவமான மாகிலும்
மேன்மையோர் செய்யி லழகாம்
விரகமே யாகிலுஞ் சரசமே யாகிலும்
விழைமங்கை செய்யி லழகாம்

தருதாழ்வு வாழ்வுவெகு தருமங்க ளைச்செய்து
சாரிலோ பேரழக தாஞ்
சீரத்தி லோருன மானமெது வாகிலுஞ்
சமர்செய்து வரி லழகதாம்

நகமேவு மதகரியி லேறினுந் தவறினு
நாளுமது வோரழக தாம்
நாய்மீதி லேறினும் வீழினுங் கண்டபேர்
நகைசெய்தழ கன்றென்பர்காண்

அகமாயு நற்றவர்க் கருள்புரியு மையனே
யாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) வெகுமானம் ஆகிலும் அகமானம் ஆகிலும் - வெகுமானத்தையாயினும் அவமானத்தை யாயினும், மேன்மையோர் செய்யில் - மேன்மையுடையோர் செய்தால், அழகு ஆம் - அழகாகும், விரகமே ஆகிலும் சரசமே ஆகிலும்-விரகமேயாயினும் சரசமே யாயினும், விழைமங்கை செய்யின்-விருப்பமுள்ளபெண் செய்தால், அழகு ஆம் - அழகாகும், வெகுதருமங்களைச் செய்து - அநேக தருமங்களைச்செய்து, தகு தாழ்வு வாழ்வு சாரில் - தகுதியாகிய தாழ்வு வாழ்வுகள் உண்டானால், பேரழகதாம் - பேரழகாகும், சரீரத்தில் - உடம்பில், ஓர் ஊனம் மானம் எது ஆகிலும் - ஒரு ஊனமானங்கள் எதுவாயினும், சமர்செய்து வரின் - போர்செய்து உண்டானால், அழகதாம் - அழகாகும், நகம் மேவு மதகரியில்-மலை போன்ற மதயானைமேல், ஏறினும் தவறிலும்-ஏறினாலும் தவறிவிழுந்தாலும், அது-அது, நாளும் - எந்நாளும், ஓர் அழகதாம் - ஒப்பற்ற அழகாகும், நாய்மீதில் ஏறினும் வீழினும் நாயின்மேல் ஏறினாலும் தவறிவிழுந்தாலும், கண்டபேர்-பார்த்தபேர்கள், நகைசெய்து - சிரித்து, அழகு அன்று என்பர்-அழகல்லவென்று சொல்வார்கள், அசும்மாயும் - அகங்காரங் கெட்ட, நல் தவர்க்கு - நல்ல தவமுடையோர்க்கு, அருள்புரியும் ஐயனே - அருள்செய்கிற இறைவனே, ஆதியே - முதல்வனே, அருமைமதவேள் எ-று.

விழைதல்-விரும்புதல், தாழ்வுவாழ்வு-வறுமை செல்வம். ஊனமானம்-காயம். (வெட்டுக்காயம் குத்துக்காயம்) நகம்-மலை மேவு-உவமவுருபு. அசுமாயும் என்பதை அகம் ஆயும் எனப் பிரித்து,மனத்தால் தியானிக்கிற என பொருள் கூறினுமமையும்.

நல்வினை செய்தோர்.

சரணெனக் காத்தவன் மெய்யினால் வென்றவன்
றான மிளையா துதவினோன்
றந்தைசொன் மறாதவன் முன்னவற் கானவன்
றாய்ப்பழி துடைத்த நெடியோன்
வருபிதிர்க் குதவினோன் றெய்வமே துணையென்று
மைந்தன் மனைவியை வதைத்தோன்
மாறான தந்தையைத் தமையனைப் பிழைகண்டு
மாய்த்துலகின் மகிமை பெற்றோன்
கருதரிய சிபியரிச் சந்திரன் மாபலி
கணிச்சியோன் சுமித்திரை சுதன்
கருடன் பகீரத னுடன்சிறுத் தொண்டனொடு
கானவன் பிரகலாதன்
அரியவல் விபீஷண னெனுமகா புருடரா
மத்தனை யருமை மதவேவ
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. சச

(இ-ள்.) சரண் என காத்தனை - அடைக்கலமென்ற மா த்திரத்தில் காத்தவனும், மெய்யினால் வென்றவன் - சத்திய த்தால் வென்றவனும், இளையாது தானம் உதவினோன் - இளை க்காமல் தானங் கொடுத்தவனும், தந்தைசொல் மாறாதவன் - தந்தையின் சொல்லை மறுக்காதவனும், முன்னவற் கானவன் தமையனுக் கானவனும், தாம்பழிதுடைத்த நெடியோன் - தாய் பழியை நீக்கின பெரியோனும், வருபிதுர்க்கு உதவினோன் -

வருகின்ற பிதிரர்களுக்கு உதவினவனும், செப்பமே ஆணை யென்று நம்பி, மைந்தன் மனைவியை வதைத்தோன் - புதல்வனையும் மனையாளையும் வதைத்தவனும், மாறு ஆன தந்தைதமையனை பிழைகண்டு மாய்த்து உலகில் மகிமை பெற்றோன் மாறுபட்ட தந்தையும் தமையனையும் அவர்களுடைய குற்றத்தைக் கண்டு அவர்களைக்கொன்று உலகில் பெருமை யடைந்தவனும் (ஆகிய இவர்கள் யாவெனின்), (முறையே), கருது அரிய சிபி - (நினைத்தற்கரிய சிபிச்சக்ரவர்த்தி, அரிச்சந்திரன் - அரிச்சந்திரன், மாபலி - மஹாபலி, கனிச்சியோன் - பரசுராமன், சுமித்திரை சுதன் - இலக்குமணன், கருடன் - கருடன் புள்ளரசனுடனே, சிறுத்தொண்டனொடு - சிறுத்தொண்டனொடு கானவன் - வேடன், பிரகலாதன், அரியவல் விபீஷணன் - அரிதாகிய வலியவிபீஷணன், என்னும் - என்று சொல்லப்படுகிற, மகா புருடர் ஆம - மஹாபுருஷராவர், அத்தனை - இறைவனே, அருமைதவேள். எ-று.

## தீவினை செய்தோர்.

வாயிகழ்வு பேசிமிகு வாழ்விழந் தோன்சிவனை
வைதுதன் றலை போயினோன்
மற்றொருவர் தாரத்தி லிச்சைவைத் தூடலாலே
மாறாத வடுவாயினோன்
தாயத்தி னோர்க்குள்ள பங்கைக் கொடாமலே
சம்பத் திழந்து மாய்ந்தோன்
தக்கபெரி யோர்தமை வணங்கா மதத்தினாற்
றந்தி வடிவா யலைந்தோன்

மாயனைச் சபையதனி னிந்தனைசெய் தொளிகொணவ
மணிமுடி துணிந்து மாய்ந்தோன்
வருநகுட னொடுதக்க னயிராவ தன்குருடன்
மகன்வழுதி சிசு பாலனும்
ஆயுமறி வாளரொடு தேவர்பணி தாளனே
யவனிபுக ழுருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. சஉ

(இ-ள்.) வாய் இகழ்வுபேசி மிகுவாழ்வு இழந்தோன்-வாயினால் நிந்தை சொல்லி மிகுந்த வாழ்வை யிழந்தவனும், சிவனைவைகுதன் தலைபோயினோன் - சிவனைத்திட்டித் தன்சிரசையிழந்தவனும், மற்றொருவர் தாரத்தில் இச்சைவைத்து உடல் எல்லாம் மாறுதவடு ஆயினோன் வேறொருவர் மனைவியைமேல் விருப்பம் வைத்து உடம்பெல்லாம் வடுப்பெற்றவனும், தாயத்தினோர்க்கு உள்ள பங்கைகொடாமலே சம்பத்து இழந்து மாய்ந்தோன் தாயத்தார்க்குரித்தாயுள்ள பாகத்தைக் கொடாமல் தன் செல்வத்தையிழந்து தானும் மடியப்பெற்றவனும் தக்க பெரியோர்தமை வணங்கா மதத்தினால் யானையுருப்பெற்று அலைந்தவனும், மாயனை சபைதனில் நிந்தனை செய்து ஒளிகொள் நதமணிமுடி துணிந்து மாய்ந்தோன்-மாயவனைச் சபையில் நிந்தித்து ஒளியைக்கொண்ட நவரத்ந கிரீடத்தையிழந்து மடிந்தவனும் (ஆகிய இவர்கள் யாரெனின் முறையே), வருநகுடனொடு-வருகின்ற நகுடனுடனே, தக்கன்-தக்ஷன், அயிராவதன்-அந்திரன், குருடன்மகன்-துரியோத

னன், வழுதி-பாண்டியன், சிசுபாலன் ஆம்-சிசுபாலன் என்ப வர்களாவர். ஆயும் அறிவாளரொடு-ஆராய்கின்ற அறிவினரா கிய ஞானியருமனே, தேவர்பணி தாளனே-தேவரும் வணங் குகின்ற திருவடியை யுடையவனே, அவனிபுகழ்-உலகத்தா ரால் புகழப்படுகிற, அருமைமதவேள். எ-று.

நன்னகர்.

வாவிபல கூபமுட னாறருகு சேர்வதாய்
மலைகாத வழியி லுளதாய்
வாழைகமு கொடுதெங்கு பயிராவ தாய்ச்செந்நெல்
வயல்கள் வாய்க்கால்க ளுளதாய்
காவிகம லங்குவளை சேரேரி யுள்ளதாய்க்
கனவர்த்த கர்கண் மறைவலோர்
காணருய பலகுடிக ணிறைவுள்ள தாய்நல்ல
காவல னிருக்கை யுளதாய்த்
தேவாா லயமாடல் பாடலணி மாளிகை
சிறக்கவுள தாய்ச் சற்சனர்
சேருமிட மாகுமோ ரூர்கிடைத் ததிலதிக
திவனமு மே கிடைத்தால்
ஆவலொ டிருந்திடுவ ீதசொர்க்க வாசமென்
றறையலா மருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. (சஅ)

(இ-ள்.) வாவிபல கூபமுடன்-பலவாவி கூபங்களுடனே ஆறு அருகு சேர்வதாய்-நதியும் அருகே பொருந்தியிருப்பதாய்

மலைகாதவழியில் உளது ஆய்-மலைகாததூரத்திலுள்ள தாகி; வாழை கமுகொடு தெங்கு பயிர் ஆவதாய் - வாழை கமுகுக ளோடு தெங்கும் பயிராவதாகி, செந்நெல்வயல்கள் வாய்க்கால் கள் உளதாய் - செந்நெல் வயல்களும் வாய்க்கால்களும் உள்ள தாகி, காவிகமலம் குவளைசேர் ஏரி உள்ளதாய் - செவ்வல்லி தாமரை கருங்குவளை என்பவைகள் பொருந்திய ஏரியையுடை யதாகி, கனவர்த்தகர்கள் - பெரிய வியாபாரிகளும், மறைவ லோர்வேதியரும், காண் அரிய-காணுதற்கு அரியதாகிய, பல குடிகள் - பலவகைக்குடிகளும், நிறைவுள்ளதாய் - நிறைவுள்ள தாகி, நல்லகாவலன் இருக்கை உளது ஆய் - நல்ல அரசன் இருப்பிடமுள்ளதாகி, தேவர் ஆலயம்-தேவாலயங்கள், ஆடல் பாடல் - ஆடல் பாடல்கள். அணிமாளிகைகள், சிறக்க உள்ள தாய்-மிகவுள்ளதாகி, சற்சுநர்சேரும் இடம் ஆகும் - சற்சநர் கள்சேர்கின்ற இடமாகிற, ஓர் ஊர்கிடைக்கது - ஒரு ஊர்வாய்த் து, அதில் அவ்வூரிலே, அதிக சீவநமும் கிடைத்தால்-அதி கமான சீவனங்களும் கிடைத்தால், (அவ்விடத்தில்) ஆவ லொடு-விருப்பத்தோடு. இருந்திடுவதே - இருந்து விடுவதே; சொர்க்கவாசம் என்று அறைபவாம் - சொர்க்கலோக வாச மென்று சொல்லாம், அருமைமதமைவள்.

## தீங்கர்.

ஈனசாதிகள் குடி யிருப்பதாய் முள்வேலி
யில்லில்லி லுக்குமுளதா
யிணைமுலை திறந்துதங் தலைவிரித் திடுமாத
ரெங்கு நடமாட்ட முளதாய்க்

கானமொரு பக்கமாய் மலையோர மாய்முறைக்
காய்ச்ச றப்பா தவிடமாய்க்
கள்ளர்பய மாய்நெடிய கயிறிட் டிறைக்கின்ற
கற்பகணி நீருண்ப தாய்
மானமில் லாக்கொடிய துர்ச்சனர் தமக்கேற்ற
மணியமொன் றுண்டன தாய்
மாநிலத் தோர்யல மிருந்ததனில் வெகுவாழ்வு
மாழ்வதினு மருநரகிலே
ஆனநெடு நாள்கிடந் தமிழ்தலே சுகமாகு
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) ஈனசாதிகள்குடியிருப்பதாய்-ஈனசாதிகள் குடியிருப்பதாகி, முள்வேலி-முள்வேலியானது, இல்-இல்லினுக்கும், உளதாய் - வீட்டுவீட்டுக்கும் உள்ளதாகி, இணைமுலை திறந்து, இரண்டு முலைகளையும் திறந்துகொண்டு, தம்தலை விரித்திடும் மாதர்-தமது தலையை விரித்திடுகிற மாதர்கள், எங்கும்-எவ்விடத்தும், நடமாட்டம் உளதாய்-நடமாட்டமுள்ளதாகி, கானம் ஒருபக்கமாய் - காடொருபக்கமாகி, மலை ஓரமாய் - மலையோரமாகி, முறைக்காய்ச்சல் தப்பாத இடமாய் - முறைக்காய்ச்சல் தவறாத இடமாகி, கள்ளர் பயமாய் - திருடர் பயமுள்ளதாய், நெடியகயிறு இட்டு இறைக்கின்ற - நெடுங்கயிறுகட்டி யிறைத்தற்குரிய, கல்கேணிநீர் உண்பதாய்-கற்கிணற்று நீரைக்குடிப்பதாகி, மானம் இல்லா - மானமற்ற, கொடிய-கொடுமையுள்ள

துற்சனர் தமக்கு ஏற்ற - துற்சனர் களுக்குத் தகுதியாகிய மணியம் ஒன்று உண்டானதால் - மணிய மொன்றுள்ளதாகி மாநிலத்து - பெரிய நிலவுலகத்தில், ஓர்தவம் இருந்து - ஒரு இடமிருந்து, அதனில் - அந்த இடத்தில், வெகுவாழ்வு வாழ் வதிலும் - வெகுவாழ்வு வாழ்வதைப்பார்க்கிலும், அருநரகி லே - சகித்தற்கரிய நரகத்திலே, ஆனநெடுநாள் கிடந்து அமி ழ்தலே சுகம் ஆகும் - உண்டாகிய நெடுநாள் கிடந்து அமிழ் வதே இன்பமாகும், அமலனை - பரிசுத்தனே; அருமைமதி வேள். எ-று.

முழுக்குநாள்.

வருமாதி வாரந் தலைக்கெண்ணெ யாகாது
வடிவமிகு மழகு போகும்
வளர்திங்க ளுக்கதிக பொருள்சேரு மங்கார
வாரந் தனக் கிடர்வரும்
திருமேவு புதனுக்கு மிகுபுத்தி வந்திடுஞ்
செம்பொனுக் குய ரறிவுபோம்
தேடிய பொருட்சேத மாம்வெள்ளி சனிபெண்ணெய்ச்
செல்வமுண் டாயு ளுண்டாம்
பரிகார மூளதாதி வாரந் தனக்கலரி
பௌமனுக் கான செழுமண்
பச்சறுகு பொன்னவற் றாமெருத் துவொளிப்
பாக்கவற் காகு மெனவே
அரிதா வறிந்தபே ரெண்ணெய்சேர்த் தேமுழுக்
காடுவா ரருமை மதவே

ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ருய

(இ-ள்.) வரும் ஆதிவாரம் - தொடர்ந்து வருகிறஆதிவாரத்தில், தலைக்கு எண்ணெய் ஆகாது - தலைக்கு எண்ணெயிட்டுக்கொள்ளுதல் ஆகாது, (ஏனெனின்) வடிவம்மிகும் அழகு போகும் - வடிவிலுள்ள மிகுந்த அழகழியும் (ஆதலால்) வளர் திங்களுக்கு - வளர்கின்ற சோமவாரத்தில் எண்ணெயிட்டுக் கொண்டால், அதிகபொருள்சேரும் - அதிகமான திரவியம் சேரும், அங்காரவாரம் தனக்கு - மங்களவாரத்தில் எண்ணெயிட்டுக்கொண்டால், இடர்வரும் - துன்பமுண்டாகும், திருமேவு புதனுக்கு - அழகுபொருந்திய புதவாரத்தில் எண்ணெயிட்டுக்கொண்டால், மிகுபுத்தி வந்திடும் - மிகுந்த புத்திவரும், செம்பொனுக்கு - எண்ணெயிட்டுக்கொண்டால், உயர் அறிவுபோம் - உயர்ந்த அறிவு நீங்கும், வெள்ளி - சுக்ரவாரத்தில் எண்ணெயிட்டுக்கொண்டால், தேடிய பொருட்சேதம் ஆம் - சம்பாதித்த பொருளுக்கு நஷ்டமுண்டாகும், சனி - சனிவாரத்தில், எண்ணெய் - எண்ணெயிட்டுக்கொண்டால் செல்வம் உண்டு - செல்வமுண்டாகும், ஆயுள் உண்டாம் - ஆயுளும் உண்டாகும்,

(மேற்கண்ட இந்த வாரங்களுள் ஆகாதென்று விலக்கப்பட்ட நாட்களுக்கு) பரிகாரம் உளது - பரிகாரமுண்டு, (என்னெனின்) ஆதிவாரம் தனக்கு-ஆதிவாரத்துக்கு அலரி-அலரியும் பௌமனுக்கு-மங்களவாரத்துக்கு ஆனசெழுமண்-உண்டா

...ிய செழு மண்ணும், பொன்னவற்கு-குருவாரத்துக்கு; பச்ச
றுகு - பச்சை அறுகம் புல்லும் ஆம்- ஆகும், ஒளிபார்க்கவற்கு
ஒளியையுடைய சுக்ரவாரத்துக்கு, எருத்துள் - எருத்துள்,
ஆகும் என - ஆகுமென்று, அரிதா - அருமையாக, அறிந்த
பேர் - அறிந்தபேர்கள், (விதித்த நாட்களில்) எண்ணெய்
தேய்த்து முழுக்காடுவார் - எண்ணெய் யிட்டுக்கொண்டு தலை
முழுகுவார்கள், அருமைமதவேள். எ-று.

மருத்துவன்.

தாதுப் பரீக்ஷைவரு காலதேச சத்திராதி
சரீர லக்ஷண மறிந்து
தன்வந்தரி கும்பமுனி தேரர்கொங் கணர்சித்தர்
தமது வாகட மறிந்து
பேதப் பெருங்குளிகை சத்திவகை மாத்திரைப்
பிரயோக மோடு பஸ்மம்
பிழையாது மண்டூர செந்தூர லட்சணம்
பேர்பெறுங் குண வாகடம்
சோதித்து மூலிகா விதங்கண் டுங்கண்டு
தூய தைலம் லேகியஞ்
சொல்பக்கு வங்கண்டு வருரோக நிண்ணயந்
தோற்றியே யமிர்த காமாய்
ஆதிப் பெருங்கேள்வி யுடையனு யுர்வேத
னுகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே,

(இ-ள்.) தாதுபரீக்ஷை-தாதுபரீக்ஷை, வரு-வருகிற, காலதேசத்தொடு - காலதேசங்களோடு. சரீரலக்ஷணம் அறிந்து-சரீரலக்ஷணமும் தெரிந்துக்கொண்டு, தந்வந்தரி கும்பமுனி தேரர் கொங்கணர் சித்தர் தமது வாகடம் அறிந்து-தந்வந்திரி அகஸ்தியர் தேரையர் கொங்கணர் மற்றைய சித்தர்கள் ஆகிய இவர்களால் சொல்லப்பட்ட வாகடங்களை ஆராய்ந்தறிந்துகொண்டு. பேதகம்-(ஒன்றற்கொன்று) வேறுபாடுடைய. பெருகுளிகை சுத்திவகை - பெரிய குளிகை சுத்திவகையும், மாத்திரை பிரயோகமோடு - மாத்திரைப் பிரயோகத்துடனே, பஸ்பம்-பஸ்மமும், பிழையாது-தவருமல், மண்டூரசெந்தூர லட்சணம் மண்டூர செந்தூர லட்சணமும், பேர்பெறும் குணவாகடம்-பேர்பெற்ற குணவாகடமும், சோதித்து - சோதனைபண்ணி, மூலிகாவித நிகண்டும் கண்டு - மூலிகை வகைகளைச் சொல்லுகிறநிகண்டையும் பார்த்து, தூயதைலம் லேகியம் சொல்பக்குவம் கண்டு -பரிசுத்தமானதைலம் லேகியம் இவற்றிற்கு நூல்களாற் சொல்லப்படுகிற பக்குவத்தையும் அறிந்து, வரு-உண்டாகிற, ரோகநிர்ணயம் தோற்றி-ரோகத்தின் நிச்சயம் இதுவென்று கண்டுகொண்டு, அமிர்தக்கையனுய், ஆதிப்பெருங்கேள்வி உடையவன்-முதன்மையாகிய பெரிய கேள்வியையுடையவன், ஆயுர்வேதன் ஆகும்-ஆயுர்வேதமுடையவனுவன், எமதருமைமதவேள். எ-று.

தாதுபரீக்ஷை-நாடிசோதனை, வாகடம் - வைத்தியநூல். பிரயோகம் - செலுத்தல். அமிர்தகான்-ஹஸ்தவிசேஷமுள்ளவன், கைவாசியுள்ளவன்.

உண்மை யுணர்குறி.

சோதிடம் பொய்யாது மெய்யென்ப தறிவரிய
சூழ் கிரகணஞ் சாட்சியாஞ்
சொற்பெரிய வாகடம் நிசமென்கை பேதிதரு
தூய மாத்திரை சாட்சியாம்
ஆதியிற் செய்ததவ முண்டில்லை யென்பதற்
காளடிமை யேசாட்சி யா
மரிதேவ தேவனென் பதையறிய முதனூ
லரிச்சுவடி யேசாட்சி யாம்
நாதனேமாதேவ னென்பதற் கோருத்ர
நமக சமகஞ் சாட்சியாம்
நாயேனை ரட்சிப்ப துன்பார மரியய
னுமர்ச் சனைசெய் சரணத்
தாதிநா யகமிக்க வேதநா யகனென
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯உ

(இ-ள்.) சோதிடம் - சோதிடநூல், பொய்யாது-பொய்க்காது, மெய் என்பது - உண்மையென்பதற்கு, அறிவு அரிய-அறிவதற் கருமையாகிய, சூழ்-வளைந்த, கிரகணம் - கிரகணங்களே, சாக்ஷி ஆம் - சாக்ஷியாகும், சொல்பெரிய வாகடம் - புகழாற் சிறந்த வைத்தியநூல், நிசம் என்கை-உண்மையென்பதற்கு, பேதிதரு - பேதியை யுண்டாக்குகிற, தூயமாத்திரை -

பரிசுத்தமான பாத்திரையே, சாக்ஷி ஆம் - சாக்ஷியாகும் ஆதி யில் - முற்காலத்தில், செய்ததவம் உண்டு இல்லை என்பதற்கு செய்ததவம் உண்டு இல்லையென்றறிவதற்கு, ஆள் அடிமையே சாக்ஷி ஆம் - ஆளடிமைகளது உண்மை இன்மைகளை சாக்ஷியா கும், அரி - திருமால், தேவதேவன் என்பதை அறிய - தேவ ர்களுக்குத் தேவன் என்பதை யறிவதற்கு, முதனூல் - முதல் நூலாகிய, அரிச்சுவடியே சாக்ஷி ஆம் - அரிச்சுவடியே சாக்ஷியாகும், மாதேவன் - சிவபெருமான், நாதன் என்பதற்கு தலைவன் என்பதற்கு, ருத்ரநமகசமகம் சாக்ஷி ஆம் - ருத்ரநம கசமகமே சாக்ஷியாகும், நாயேனை ரக்ஷிப்பது உன்பாரம் - நாயி னேனைக் காப்பாற்றுவது உன்கடமையாகும், அரி அயன் - திரு மாலும் பிரமனும், நாளும் - நாள்தோறும், அர்ச்சனைசெய் - அர்ச்சிக்கிற, சரணத்து - திருவடியையுடைய, ஆதிநாயக - ஆதி நாயகனே, மிக்க - மேலான, வேதநாயகன் ஆன - வேத நாயகனாகிய, அண்ணலே - பெரியோனே, அருமைமத வேள். எ-று.

கிரகணம் - சூரியசந்திர கிரகணங்கள். சூரிய சந்திரர் கள் ராகுகேது என்னும் பாம்புகளால் விழுங்கப்படுதல் பற்றி 'சூழ்கிரகணம்' என்றார், பேதி - விரேசகம். முதலில் ஓதப் படுதலால் அரிச்சுவடி முதனூல் எனப்பட்டது ருத்ரநமகச மகம் - ருத்ர மூர்த்தியைகுறித்து வேதத்திற் சொல்லப்படுவ வதாகிய ஒரு மந்திர விசேடம் அரிபயன் - உம்மைத்தொகை வேதநாயகன் - வேதமுதல்வன்.

## பிரவிக்குண மாறுமை.

கலங்காத சித்தமுஞ் செல்வமும் ஞானமுங்
கல்வியுங் கருணை விளைவுங்
கருதரிய வடிவமும் போகமுந் த்யாகமுங்
கனரூப முள்ள மங்கையும்
அலங்காத வீரமும் பொறுமையுந் தந்திரமு
மாண்மையு மமுத மொழியு
மானவிச் செயலெலாஞ் சனனவா சனைபிற
லாகிவரு மன்றி நிலமேல்
நலஞ்சேரு தொருவரைப் பார்த்தது பெறக்கருதி
னண்ணுமோ ரஸ்தாளி தன்
னற்சுவை தனக்குரை வேம்புதவ மேசெடித்து
நாள்செயினும் வாராது காண்
அலங்கார மாகமலர் கொன்றைமா லிகைசூடி
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே, ௫௨

(இ-ள்.) கலங்காதசித்தமும்-கலங்காதமனமும், செல்வ-
பொருளும், ஞானமும் - ஞானமும், கல்வியும் - வித்தையும்,
கருணை விளைவும்-அருளுண்டாதலும், கருது அரியவடிவமும்-
நினைத்தற் கரிதாகிய உருவமும், போகமும் - போக சுகமும்,
த்யாகமும் - கொடையும், கனரூபம் உள்ள மங்கையும் - பேர
ழகுள்ள மனைவியும், அலங்காத வீரமும்-சலிக்காத வீரத்தன்

மையும், பொறுமையும் - பொறுமையும், தந்திரமும் — உபாயமும், ஆண்மையும் - ஆண் தன்மையும், அமுத மொழியும் - அமிர்த வாக்கும், ஆன - ஆகிய இச்செயல் எல்லாம் - செய்கைகளெல்லாம், சநநவாசனையினால்-பிறவிவாசனையினால்- ஆகிவரும் அன்றி - உண்டாய் வருவதேயன்றி, நிலமேல் பூமியின் மேல், நலம்சேரும்ஒருவரை பார்த்து - (மேற்சொல்லப்பட்ட) நன்மைகள் அமையப்பெற்ற ஒருவரைப்பார்த்து, அவைபெறக் கருதின் - அவற்றைப் பெற நினைத்தால் நண்ணுமோ-(அவை) உண்டாகுமோ, ரஸ்தாளி வாழைப் பழத்தினது நல்ல சுவையானது, தனக்குவர - தனக்குண்டாகும்படி, வேம்பு - வேப்பம்பழமானது, நெடுநாள் தவம்செய்யினும் - நெடுங்காலம் தவம் செய்தாலும், வாராது உண்டாக மாட்டாது, அலங்காரமாக - அழகாக, மலர் - மலர்ந்த, கொன்றை மாலிகை சூடும் - கொன்றை மலர்மாலையைத் தரித்த, அண்ணலே - பெரியோனே, அருமை மதவேள். எ-று.

ஞானம் - பேரறிவு வடிவம்-அழகுமாம். போகம்-பெண்போகம் ரூபம் இவ்விடத்து உருவையும் அழகையும் உணர்த்திற்று அமுத மொழி - செவிக்கினிய செஞ்சொல் ரஸ்தாளி - வாழையிற் சிறந்த சாதிவாழை, நல்சுவை - இன்சுவை, ரஸ்தாளி, வேம்பு, கொன்றை என்பன முதலாகுபெயர்கள் காண் முன்னிலையசை யிடைச்சொல்.

ஊழ்வலி.

கடலளவுரைத் திடுவ ரரிபிரம ருருவமுங்
காணும் படிக் குரைசெய்வார்

காசினியி னளவு பிர மாணமது சொல்லுவார்
காயத்தி னிலைமை யறிவார்
விடலரிய சிவநிலை காட்டுவார் மூச்சையும்
விடாமற் றடுத் தடக்கி
மேன்மேலும் யோகசா தனைவிளைப் பாரெட்டி
விண்மீதி னுந் தாவுவார்
தொடலரிய பிரமநிலை காட்டுவா ரெண்வகைத்
தொகையான சித்தி யறிவார்
சூழ்வினை வரும்பொழுது சிக்கியுழல் வாரது
துடைக்கவொரு நான் முகற்மும்
அடைவல வெனத்தெரிந் தளவில்பல நூல்சொல்லு
மண்ணாலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ருஉ

(இ-ள்.) கடல் அளவு உரைத்திடுவர்-கடலினளவைக் கவ னித்து இவ்வளவென்று சொல்லுவார்கள், அரிபிரமர் உருவமும் - அரிபிரமர்களுடைய உருவத்தையும், காணும்படிக்கு உரை செய்வார் - காணும்படியாகச் சொல்லுவார்கள், காசினியின் - நிலவுலகத்தின், அளவு பிரமாணம் சொல்லுவார்-அளவு பிரமாணங்களையும் சொல்லுவார்கள், காயத்தின் நிலைமை அறி வார்-உடம்பினது நிலைமையையும் அறிவார்கள், விடல் அரிய சிவநிலை காட்டுவார்-நீங்குவதரிய உயிர் நிலையையும் காட்டுவார் கள், மூச்சையும் விடாமல் தடுத்து அடக்கி - மூச்சையும்விடா மல் தடைசெய்தடக்கி, மேன்மேலும், மேலுமேலும் யோக

சாதனை விளைப்பார்-யோகாப்பியாசம் செய்வார்கள், விண்மீதினும் - ஆகாயத்தின்மேலும், எட்டி தாவுவார் - எட்டிக் குதிப்பார்கள், தொடல் அரிய-பற்றுதற்கரிய, பிரமநிலை காட்டுவார்-பிரமநிலைமையும் காட்டுவார்கள், எண்வகைத் தொகையான சித்தி அறிவார் - அஷ்டமா சித்திகளையும் அறிவார்கள், சூழ் வினைவரும்பொழுது - வளைந்து கொள்வதற்குரிய வினைவருங் காலத்தில், சிக்கி உழலுவார்-அதில் அகப்பட்டு அலைவார்கள், அது துடைக்க-அந்த வினையை வெல்ல, ஒரு நான்முகற்கும்-ஒரு நான்கு முகங்களையுடையவனாகிய பிரமனுக்கும், அடைவு அல்ல என தெரிந்து-வசமல்லவென்று தேர்ந்து, அளவு இல் அளவில்லாத, பலநூல் சொல்லும் - அநேக நூல்கள் சொல்லாநின்றன, அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள்.

காயத்தினிலைமையறிதலாவது இந்தவுடம்பு இத்தனை நாள் நிற்கும் என்று யோகாப்பியாசம் நாடித்தாநம் முதலியவற்றாலறிதல். மூச்சு-சுவாசம், எண்வகைத் தொகையான சித்தியாவன-அணிமா, மகிமா, கரிமா வகிமா பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், விசித்வம் என்பன. இவற்றின் விரிவெல்லாம் யோகநூல்களிற் காண்க

## ஒப்புயா வில்லாமை.

வேதியர்க் கதிகமாஞ் சாதியுங் கனகமக
மேருவுக் கதிக மலையும்
வெண்டிரை கொழித்துவரு கங்கா நதிக்கதிக
மேதினியி லோடு நதியும்

சோதிதரு மாதவற் கதிகமாங் காந்தியுஞ்
சூழ்கனற் கதிக சுசியுந்
தூயதாய் தந்தைக்கு மேலான தெய்வமுஞ்
சுருதிக் குயர்ந்த கலையும்
ஆதிவட மொழிதனக் கதிகமா மொழியுநற்
றன்ன தானந் தனிலுமோ
ரதிசதா னமுமில்லை யென்றுபல நூலெலா
மாராய்ந்த பேருரை செய்வார்
ஆதவன் பிரமன்விண் ணவர்முனிவர் பரவவரு
மண்ணலே யருமைமகவே
வனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. ௫௫

(இ-ள்.) வேதியர்க்கு-அந்தணரைப்பார்க்கினும், அதிகம் ஆம்சாதியும் - சிறந்ததாகியசாதியும், கனகம் - பொன்மயமாகிய, மகமேருவுக்கு - மகமேரு மலையைப் பார்க்கிலும், அதிக மலையும்-சிறந்தமலையும், வெள்திரைகொழித்துவரு-வெண்மையாகிய அலைகளைவீசிக்கொண்டு வருகிற, கங்காநதிக்கு-கங்கையாற்றைப் பார்க்கிலும், அதிகம் - சிறந்ததாய், மேதினியில் ஓடும்நதியும்-பூமியின்மேல் ஓடுகிறயாறும் - சோதிதரும் ஆதவற்கு-ஒளியைத்தருகிற சூரியனைப்பார்க்கிலும், அதிகம் ஆம் காந்தியும்-சிறந்ததாகிய ஒளியும், சூழ்கனற்கு-வளைந்துகொள்ளுதற்குரிய அக்கினியைப் பார்க்கிலும், அதிக சுசியும்-சிறந்த சுத்தியும், தூயதாய்தந்தைக்கு - பரிசுத்தமாகிய தாய்தந்தையரைப்பார்க்கிலும், மேலானதெய்வமும் - சிறந்ததெய்வமும்,

சுருதிக்கு-வேதத்தைப்பார்க்கிலும், உயர்ந்தகலையும் - சிறந்த நூலும், ஆகிவடமொழிதனக்கு-(எல்லாப்பாஷைகட்கும்)மூத லாகிய வடமொழியைப்பார்க்கிலும், அதிகம் ஆம் மொழியும்- நுகர்-உண்ணப்படுகிற, அன்னதானம் தன்னிலும் - அந்ததா னத்தைப்பார்க்கிலும், அதிகதானமும்-சிறந்ததானமும், இல்லை யென்று-இல்லையென்று, பலநூல் எல்லாம் ஆராய்ந்தபேர்-பல வாகிய நூல்கள்முழுதும் ஆராய்ந்தபேர்கள், உரைசெல்வார்- சொல்லுவார்கள், ஆதவன் - சூரியன், பிரமன் - பிரமதேவன், விண்ணவர்-தேவர்கள், முனிவர்-முனிவர்கள், (ஆகிய எல்லா ரும்) பரவவரும் அண்ணலே-வழிபடும்படி எழுந்தருளி யிருக் கிற பெரியோனே, அருமைமதவேள். எ-று.

வேதியர்-வேதத்தில்வல்லவர். ஆதவம்-வெயில், அதனை யுடையவனாதலால் சூரியனை ஆதவன் என்றார். சுருதி-கேட்கப் படுவது, வேதம் எழுதிப்படிக்காமல் கேட்டறியப் படுதலால் சுருதியெனப்பட்டது.

### வீண்செயல்.

வேட்டகஞ் சேர்வோரும் வீணரே வீணுரை
விரும்புவோ ரவரின் வீணர்
விருந்துகண் டில்லா டனக்கஞ்சி யோடிமறை
விரகிலோ ரவரின் வீணர்
நாட்டந் தருங்கல்வி யில்லோரும் வீணரே
நாடியவர் மேற்கவி சொல்வார்
நானிலந் தனில்வீண ரவரினும் வீணரே
நரைச் சுமக்கு மெளியோர்

தேட்டறிவி லாதபெரு வீணரே யவரினுஞ்
சேரொரு வரத்து மின்றிச்
செலவுசெய் வோரதிக வீணராம் வீணனைத்
திரியுமெளி யேனை யாட்கொண்
டாட்டஞ் செயும்பதாம் புயமுடியின் மேல்வைத்த
வமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே. ௩=

(இ-ள்.) வேட்டகம் சேர்வோரும் வீணரே-கலியாணஞ் செய்துகொண்ட வீட்டில் சேர்ந்து வாழ்வோரும் வீணரேயாவர், வீண் உரை விரும்புவோர்-பயனற்ற சொற்களைச்சொல்ல விரும்புகிறவர்கள், அவரின்வீணர்-அவரைப்பார்க்கிலும் வீணரேயாவர், விருந்துகண்டு - விருந்தினரைக் கண்டு, இல்லாள் தனக்கு அஞ்சி - மனையாளுக்குபயந்து, ஒடிமறை - ஓடிமறைகின்ற, விரகு இலோர்-அறிவில்லாதவர், அவரின்வீணர்-அவரைப்பார்க்கிலும் வீணரேயாவர், நாட்டம்தரும் கல்வி இல்லோரும் வீணரே- (யாவரும்) நாடுதற்குரிய வித்தையில்லாதவரும் வீணரேயாவர், நாடி-விரும்பி, அவர்மேல் கவிசொல்வார்- அவர்மீது கவிபாடுவோர், நானிலந்தனில்வீணர்-இவ்வுலகத்தில்வீணரேயாவர், நரரைசுமக்கும் எளியோர்-மனிதரைச் சுமக்கின்ற எளியவர், தேட்டறிவிலாத பெருவீணரே - தேடுதற்குரிய அறிவில்லாத பெரிய வீணரேயாவர், அவரினும்- அவரைப்பார்க்கிலும், ஒரு வரத்தும் இன்றி - உண்டான ஒரு வருமானமுமில்லாமல், செலவுசெய்வோர்-செலவுசெய்வோர்;

குளிர்புன னிறைந்துவரு மாற்றோர மதினின்று
கோடுயர்ந் தோங்கு தருவும்
ஆப்பத்தில் லாததே ரிவையெலா மென்றுகு
மையனே யருமை மதவே
எனு தினமு மனதினினை எருசதூர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே ௫௭

(இ-ள்.) மூப்பு ஒருவர் இல்லாத-முதுமைப் பருவமுள்ள ஒருவரில்ல, குமரி குடிவாழ்க்கையும் - இளம் பெண்ணின் குடி வாழ்வும், மூது அரண் இல்லாத நகரும் - பழமையாகிய அரணில்லாத நகரமும், மொழியும் - சொல்லப்பட்ட, வெகு நாயகம்சேர் இடமும் - அநேகரது அதிகாரம் சேர்ந்த இடமும் வரும்-வருகின்ற, எதுகை மோனை இல்லாத கவியும் - எதுகை மோனைகளில்லாத பாட்டும், காப்பு அமைவு இல்லாதது ஓர்நந்தவநமும்-காவலமைந்திராத ஒரு நந்தவநமும், நல்லகரை இல்லாநிறை ஏரியும் - நல்லகரையில்லாத (நீர்) நிறைந்த ஏரியும்-கசடு அற கற்காத வித்தையும்-கசடு நீங்கக் கல்லாத கல்வியும் உபதேசகாரணன் இல்லாத தெளிவும் - உபதேசத்துக்குக் காரணனாகிய குருவில்லாத மனத்தெளியும், கோப்பு உள்ளவிநோத முடையயோர் - உல்லாசமுள்ள அகசியக்காரர், அருகு புகழாத - அருகேயிருந்து புகழாத, கோதையர் செய்கூத்தாட்டமும்-பெண்கள் செய்யுங் கூத்தாட்டும், குளிர்புனல் நிறைந்துவரும்-குளிர்ந்த நீர் நிறைந்துவருகிற, ஆற்றோர மதினின்று-ஆற்றோரத்திலிருந்து, கோடு உயர்ந்து ஓங்குதருவும் - கிளைகளுயர்ந்தோங்குகிற மரமும், ஆப்பு இல்லாததேர்-ஆப்பு இல்

னாதவேதர்-ஆப்பில்லாத தேரும் (ஆகிய) இவைஎல்லாம்-இவை யாவும், ஒன்று ஆகும்-ஒரு இனமேயாகும் ஐயனே-இறைவனே அருமைமதவேள். எ-று.

குமரி-சிறுபெண். அரண்-காவல். அது மதிலரண் நீரரண் காட்டரண், மலையரண்என நான்குவகைப்படும். நந்தவனம்-பூந்தோட்டம். கசடு-குற்றம். வித்தையில் குற்றமாவது ஐயமும் திரிபும். ஐயம்-சந்தேகம். திரிபு-ஒன்றையொன்றாக அறிதல். கோப்புள விநோதமுடையோரருகு புகழாத என்ற அடைமொழியால், கோதையர் கழைக்கூத்தியர் என்றறிக. ஆப்பு-இருசுள்ளாணி. ஆப்பது என்பதில் அதுபகுதிப்பொருள்விகுதி ஒன்றாகும் என்றது சமமாகும் என்றபடி, அதாவது பயனற்றனவாகும் என்க

## இவையேபோதுமெனல்.

பொய்யாத வாய்மையுஞ் சீலமுஞ் சார்ந்துளோர்
பூவலஞ் செயவேண்டு மோ
பொல்லாத கொலைகள விலாதநன் னெறியுளோர்
புகழறஞ் செயவேண்டு மோ
நையாத காமத்தை லோபத்தை விட்டபேர்
நல்லறஞ் செயவேண்டு மோ
நன்மனே சுத்தியுண் டானபேர் மேலுமொரு
நதி படிந்திட வேண்டுமோ
மெய்யாசி னடியரைப் பரவுவோ ருன்பதம்
விரும்பி வழிபட வேண்டுமோ

வேதியர் தமைப்பூசை பண்ணுவோர் வானவரை
வேண்டி யர்ச்சனை செய்வரோ
ஐயா றுடன்கடலை சோணா சலந்தில்லை
யதிபனே யருமை மகவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ஞி அ

(இ-ள்) பொய்யாத வாய்மையும் - பொய்க்காத சொல்லை
யும். சீலமும் நல்லொழுக்கத்தையும், சார்ந்துளோர் - அடைந்
திருப்பவர்கள், பூவலம் செயவேண்டுமோ - பூப்பிரதக்ஷிணம்
செய்ய வேண்டுமோ, பொல்லாத கொலை களவு இல்லாத-பொ
ல்லாத கொலைத் தொழிலும் திருட்டுத்தொழிலும் இல்லாத,
நல்நெறிஉளோர் - நல்வழியுள்ளவர்கள் புகழ் அறம் செயவே
ண்டுமோ - புகழப்பட்ட தருமம்செய்யவேண்டுமோ, நையாத
காமத்தையும் லோபத்தையும் விட்டபேர்கள், நல் அறம் செய
வேண்டுமோ - நல்ல தருமம்செய்ய வேண்டுமோ, நல்மனோசு
த்தி உண்டானபோ நல்மனசுத்தியுள்ளபேர்கள், மேலும் ஒரு
நதி படிந்திடவேண்டுமோ - வேறும்ஒரு புண்ணியநதியிற்
போய் முழுகவேண்டுமோ, மெய்ஆம்நின் அடியரைபரவுவோர்
உண்மையாகிய உன் அடியார்களை வழிபடுவோர், உன்பதம்
விரும்பி வழிபடவேண்டுமோ - உன்திருவடியைவிரும்பி வழி
படவேண்டுமோ, வேதியர் தமைபூசைபண்ணுவோர் - வேதி
யரைப்பூசிப்பவர்கள், வானவரை - தேவர்களை, வேண்டி அர்ச்
சனை செய்வரோ - விரும்பி அர்ச்சனை செய்வார்களோ, ஐயா

ருடன் - திருவையாற்றோடு, கமலை - திருவாரூர், சோணாசலம் - திருவண்ணாமலை, தில்லை - திருத்தில்லை (என்பவற்றுக்கு) அதிபனை இறைவனை - அருமை மதவேள். எ-று.

சீலம்-ஒழுக்கம், அது பொய்யாத வாய்மையோடு சேர்ந்து வந்தமையால் நல்லொழுக்கத்துக்காயிற்று பூ-பூமி படிதல்-முழுகுதல் நெருப்புமலையாதலால் சோணாசலம் எனப்பட்டது சோணம்-அசலம் எனப்பிரித்துக்கொள்க- சோணம்-சிவப்பு, அசலம்-மலை கமலாலயம் என்பது கமலை யென்றாயிற்று.

## அரிய ராவோர்.

பதின்மரி லொருத்தர்சபை மெச்சிடப் பேசுவோர்
பாடுவோர் நூற்றி லொருவர்
பார்மீதி லாயிரத் தொருவர்வி திப்பாது
பாடிப்ர சங்க மிடுவோர்
இதனருமை யறிகுவோர் பதினா யிரத்தொருவ
ரிதையறிந் திதய மகிழ்வா
யீகின்ற பேர் புவியி லேயருமை யாகவே
யிலட்சத்தி லேயொருவ ராம்
துதிபெருக வருமூன்று காலமு முணர்ந்தமெய்த்
தூயர் கோடியி லொருவராந்
தொல்லுலகு புகழ்காசி யேகாம் பரங்கலை
சூழ மயிலாசி பேரூர்
அதிகமுள வெண்காடு செங்காடு காளத்தி
யத்தனே யருமை மதவே

ளனுதினமு மனதினினை கருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௬௬

(இ-ள்.) சபைமெச்சிடப் பேசுவோர் - சபையார் மெச்சும்படிபேசுகிறவர்கள், பதின்மரில் ஒருவர் - பத்துப்பேரிலொருவர், பாடுவோர் - பாடுகிறவர்கள், நூற்றில் ஒருவர் - நூறுபேரிலொருவர், விதிதப்பாதுபாடிப்ரசங்க மிடுவோர் - விதிதவறுமற்பாடிப்பிரசங்கம் செய்கிறவர்கள், பார்மீதில் - உலகத்தின்மேல், ஆயிரத்து ஒருவர் - ஆயிரம்பேரிலொருவர், இதன் அருமை அறிகுவோர் - இந்தப் பிரசங்கத்தின் அருமையை அறிவார்கள். பதினாயிரத்து ஒருவர் - பதினாயிரம் பேரி லொருவர் இதை அறிந்து இந்த அருமையை அறிந்து இதயமகிழ்வால்-மனமகிழ்ச்சியால் ஈகின்றபேர் - கொடுக்கிறபேர்கள், புவியிலே பூமியிலே, அருமையாகவே - அருமையாகவே, இலட்சத்திலே ஒருவர் ஆம்-லக்ஷத்தில் ஒருவர், துதிபெருகவரும் - தோத்திரம் பெருகவந்த, முக்காலமும் அறிந்த - முக்காலத்தையுமறிந்த, மெய்தூயர் - உண்மையாகிய பரிசுத்தர், கோடியில் ஒருவர் ஆம் - கோடிபேரில் ஒருவராவர், தொல்உலகுபுகழ - பழமையாகிய வுலகம் புகழ்கின்ற காசி-காசி, ஏகாம்பரம் - திருவேகம்பம், கைலை-கயிலாயம், சூழும் அவிநாசி-மதிக்கத்தக்குரிய அவிநாசி. பேரூர் - திருப்பேரூர், அதிகம்உள்ள வெண்காடு - மேன்மையுள்ள திருவெண்காடு, செங்காடு - திருச்செங்காடு, காளத்தி-திருக்காளத்தி, (இந்தத்திருப்பதிகளில் எழுந்தருளியிருக்கிற) அத்தனே-கடவுளே, அருமை மதவேள் எ-று.

சபையென்றது சபையிலுள்ளோரை, முக்காலம் - இற ந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பன.

## கற்பு மேப்பாடு.

தன்கணவ னுருவமாய்த் தற்புணர வந்தோன்
றனக்கிணங் காத நிறையா
டழற்கதி ரெழாமலும் பொழுதுவிடி யாமலுஞ்
சாபங் கொடுத்த செயலாள்
மன்னிவா ழுன்மூழ்கி யுலகறிய வேதனது
மகிழ்நனைச் சேர்ந்த பரிவாள்
மைந்தனைச் சுடவந்த விடைவன் றடிந்தவடி
வாண்மாலை யான கனிவாள்
என்னதி படிந்திடுவ தென்னவா ழுன்மூழ்கி
நாயகனை மேவு தயவா
ளிலம் புகழ்சாவி பேர்பெறு நாளாயினி
நளினமலர் மேல் வைதேகி
அன்னமென வருசந்திர மதிதுரோ பதையென்ப
ராதியே யருமை மதவே
எனுமினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯0

(இ-ள்.) தன்கணவன் உருவமாய் - தன்கணவனுருக்கொ ண்டு, தற்புணரவந்தோன் தனக்கு தன்னைப் புணரவந்தவனு க்கு, இணங்காத நிறையாள் - இசையாத நிறையுடையவளாம்,

தழல்கதிர் எழாமலும் - சூரியன் உதிக்காமலும், பொழுதுவிடி யாமலும்-பொழுது விடியாமலு மிருக்கும்படி, சாபங்கொடுத்த செயலாள்-சாபங்கொடுத்த செய்கையையுடையவளும், மன்னி வளர்-அழல்மூழ்கி-நிலைபெற்று வளராநின்ற நெருப்பில்மூழ்கி உலகு அறிய - உலகமுழுதும் அறியும்படி, தனது மகிழ்நனை சேர்ந்தபரிவாள் - தன் கணவனைக்கூடின அன்புடையவளும், மைந்தனை சுடவந்த - புதல்வனைச் சுடவந்த, இறைவன் - தன் கணவன், தடிந்த - வெட்டின, வடிவாள் - கூர்மையாகிய வாளா னது, மாலை ஆன-மாலையாகப்பெற்ற, கனிவாள் - அன்புடைய வளும், நல்நதி படிந்திடுவது என்ன-நல்ல நதியில் மூழ்குவது போல், ஆர் அழல் மூழ்கி-(சகித்தற்கு) அரிதாகிய நெருப்பில் மூழ்கி, நாயகனை மேவுதயவாள்-தன்நாயகனைச்சேர்ந்த தயை யுள்ளவளும், யாரெனின், (முறையே) நால் நிலம் புகழ் சாலி- உலகத்தாரால் புகழப்படுகிற அருந்ததியும், பேர்பெறு - நளா யினியும், நளிமலர்மேல் வைதேகி—தாமரைமலர்மேல் வாழ்கின் றசீதேவியும், அன்ன என வருசந்த்ரமதி - அன்னம்போல நடக்கிற சந்திரமதியும், துரோபதை - துரோபதையும் ஆவர், என்பர் - என்று சொல்லுவர் (பெரியோர்), ஆதியே - முதல் வனே, அருமை மதவேள், எ-று.

கோடி யுடுக்குநாள்.

கறைபடா தொளிசேரு மாதிவா ரந்தனிற்
கட்டலாம் புதிய சீலை

கலைமதிக் காகாது பலகாலு மழையினிற்
கடிது நனைவுற் றொழிதரும்
குறைபடா திடர்வரும் வீரியம் போமரிய
குருதி வாரந் தனக்குக்
கொஞ்சநா ளிற்கிழியும் வெற்றிபோம் புந்தியிற்
குருவார மதி லணிந்தால்
மடைபடா தழகுண்டு மேன்மேலு நல்லாடை
வருமினிய சுக்கி ரற்கோ
வாழ்வுண்டு திருவுண்டு பொல்லாத சனியற்கு
வாழ்வுபோ மரண முண்டாம்
அறைகின்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவேள்
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௬௯

(இ-ள்.) கறைபடாது ஒளிசேரும் - ஒருகறையும் படாமல் ஒளியைப் பொருந்துமாதலால், ஆதிவாரந்தன்னில் - ஆதிவாரத்தில், புதியகலை கட்டலாம்-புதிய ஆடையுடுக்கலாம், பலகாலும்-பலதாரமும், மழையினில்-மழையினால், கடிது நனைவுற்று ஒழிதரும்- மிகுதியாகநனைந்து நைந்தொழியும் ஆதலால், கலைமதிக்கு ஆகாது-கலைகளையுடைய சோமவாரத்தில் ஆடையுடுக்கலாகாது, அரியகுருதிவாரம் தனக்கு-அருமையாகிய மங்கள வாரத்தில் உடுத்தால், குறைபடாத இடர்வரும் வீரியம்போம் குறைபடாத இடர்வரும் வீரியம்போம் - குறையாத துன்பங்

கள் உண்டாகும் வீரியமும்போகும், புந்தியில் புதவாரத்தித்
உடுத்தால், கொஞ்சநாளில்கிழியும் வெற்றிபோம்-அற்பகாலங்
தில் கிழியும் வெற்றியும்போகும், குருவாரமதில் அணிந்தால்
குருவாரத்தில் உடுத்தால், மறைபடாத அழகு உண்டு-மறை
யாத அழகுண்டாகும், மேன்மேலும் நல் ஆடைவரும்-மேலு
மேலும் நல்ல ஆடைகள்வரும், இனியசுக்கிரற்கோ இனிதா
கிய சுக்கிரவாரத்தில் உடுத்தாலோ, வாழ்வு உண்டு - ஆயுள்
உண்டு, திரு உண்டு-செல்வமும் உண்டு, பொல்லாதசனிபற்கு
பொல்லாத சனிவாரத்தில் உடுத்தால், வாழ்வுபோம் மரணம்
உண்டாம் - ஆயுள்குறைந்து மரணமும் உண்டாகும், அறை
கின்ற - சொல்லப்பட்ட, வேதாகமத்தின் வடிவாய் விளங்கு
வேதாகம ரூபமாகவிளங்குகிற, அமலனே-பரிசுத்தனே, அரு
மைமதவேள். எ-று.

கறை-கறுப்பு, புள்ளி, மதிசந்திரன் (சோமன்), குருதி
செவ்வாய். புந்தி-புதன். குரு - வியாழன். சுக்கிரன்-வெள்ளி-

## சகுனம்.

சொல்லரிய கருடன்று னரமரவ மூஞ்சூறு
சூகரங் கீரி கலைமான்
றுப்பபா ரத்வாச மட்டையெலி புன்கூகை
சொற்பெருக மருவு மாந்தை
வெல்லரிய காடிகோட் டான்பூனை புலிமேல்
விளங்குமிரு நா வுடும்பு

கலைமதிக் காகாது பலகாலு மழையினிற்
கடிது நனைவுற் றொழிதரும்
குறைபடா திடர்வரும் வீரியம் போமரிய
குருதி வாரந் தனக்குக்
கொஞ்சநா ளிற்கிழியும் வெற்றிபோம் புந்தியிற்
குருவார மதி லணிந்தால்
மடைபடா தழகுண்டு மேன்மேலு நல்லாடை
வருமினிய சுக்கி ரற்கோ
வாழ்வுண்டு திருவுண்டு பொல்லாத சனியற்கு
வாழ்வுபோ மரண முண்டாம்
அறைகின்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவேள்
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கூ௩

(இ-ள்.) கறைபடாது ஒளிசேரும் - ஒருகறையும் படாமல் ஒளியைப் பொருந்துமாதலால், ஆதிவாரந்தன்னில் - ஆதிவாரத்தில், புதியகலை கட்டலாம்-புதிய ஆடையுடுக்கலாம், பலகாலும்-பலதாமும், மழையினில்-மழையினால், கடிது நனைவுற்று ஒழிதரும்- மிகுதியாகநனைந்து நைந்தொழியும் ஆதலால், கலைமதிக்கு ஆகாது-கலைகளையுடைய சோமவாரத்தில் ஆடையுடுக்கலாகாது, அரியகுருதிவாரம் தனக்கு-அருமையாகிய மங்களவாரத்தில் உடுத்தால், குறைபடாத இடர்வரும் வீரியம்போம் குறைபடாத இடர்வரும் வீரியம்போம் - குறையாத துன்பங்

கள் உண்டாகும் வீரியமும்போகும், புந்தியில் புதவாரத்தித் உடுத்தால், கொஞ்சநாளில்கிழியும் வெற்றிபோம்-அற்பகாலந் தில் கிழியும் வெற்றியும்போகும், குருவாரமதில் அணிந்தால் குருவாரத்தில் உடுத்தால், மறைபடாத அழகு உண்டு-மறை யாத அழகுண்டாகும், மேன்மேலும் நல் ஆடைவரும்-மேலும் மேலும் நல்ல ஆடைகள்வரும், இனியசுக்கிரற்கோ இனிதா கிய சுக்கிரவாரத்தில் உடுத்தாலோ, வாழ்வு உண்டு - ஆயுள் உண்டு, திரு உண்டு-செல்வமும் உண்டு, பொல்லாதசனியற்கு பொல்லாத சனிவாரத்தில் உடுத்தால், வாழ்வுபோம் மரணம் உண்டாம் - ஆயுள்குறைந்து மரணமும் உண்டாகும், அறை கின்ற - சொல்லப்பட்ட, வேதாகமத்தின் வடிவாய் விளங்கு வேதாகம ரூபமாகவிளங்குகிற, அமலனே-பரிசுத்தனே, அரு மைமதவேள். எ-று.

கறை-கறுப்பு, புள்ளி, மதிசந்திரன் (சோமன்). குருதி செவ்வாய். புந்தி-புதன். குரு - வியாழன். சுக்கிரன்-வெள்ளி.

## சகுனம்.

சொல்லரிய கருடன்று னரமாவ மூஞ்சூறு
சூகரங் கிரி கலைமான்
றுப்பபா ரத்வாச மட்டையெலி புன்கூகை
சொற்பெருக மருவு மாந்தை
வெல்லரிய காடிகோட் டான்பூனை புலிமேல்
விளங்குமிரு கா வுடும்பு

மிகவுரைசெ யிவையெலாம் வலமிருந் திடமாகில்
வெற்றியுண் டதிக நலமாம்
எல்லையின் வழிப்பயண மாகுமவர் தலைதாக்க
லொருதுடை யிருத்தல் பற்ற
லொருதும்ம லாணையிட விருமல்போ கேலென்ன
வுபசுருதி சொல்லிவை யெலாம்
அல்லறரு நல்லவல வென்பர்முதி யோர்பரவு
மமலனே யருமை மதவேள்
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கூஉ

(இ-ள்.) சொல் அரிய கருடன் - சொல்லுதற்கரிய கருடனும், வாநரம்-குரங்கும், அரவம்-பாம்பும், மூஞ்சூறு - மூஞ்சூறும், சூகரம்-பன்றியும், கீரி - கீரிப்பிள்ளையும், கலைமான் கலைமானும், தூய்ய பாரத்வாசம்-பரிசுத்தமாகிய - கரிக்குருவியும், அட்டை - அட்டையும், எலி-எலியும், புல்கூகை - அற்பமாகிய கூகையும், கொல்பெருக மருவும் ஆந்தை - சொற்களை மிகுதியாய்ப் பொருந்திய ஆந்தையும், வெல் அரியகரடி-வெல்லுதற்கரிதாகியகரடியும், காட்டு ஆன்-காட்டுப்பசுவும், பூனை - பூனையும், புலி-புலியும், மேல்-மேலும், விளங்கும் - காணப்படுகிற இருநாஉடும்பு - இரண்டுநாக்களையுடைய உடும்பும், மிக-அதிகமாக, உரைசெய்-சொல்லப்பட்ட, இவையெலாம்-இவையாவும் வலம் இருந்து-வலப்பக்கத்திலிருந்து, இடம் ஆகில் இடப்பக்கத்திற்போனால், வெற்றி உண்டு - செயமுண்டு, அதிகநலம் ஆம் - அதிகநன்மையும் உண்டாகும், எல்லையின் - விரைவாக

வழிப்பயணம் ஆகுமவர் - வழிப்பயணப்படுவோருடைய, தலை தாக்கல்- தலைபடுதலும், ஒருதொடை இருத்தல் - ஒருதொடை மேல் நிற்றலும், பற்றல்-பிடித்தலும், ஒருதும்மல், ஒற்றைத் தும்மலும், ஆணையிடல் - ஆணையிடுதலும், இருமல் - இருமுதலும், போகேல்என்ன - போகாதேயென்று, உருசுருதி சொல்ல - உபசுருதிசொல்லுமாகிய, இவையெலாம் - இவையாவும், அல்லல்தரும்-துன்பத்தையுண்டாக்கும் ஆதலால், நல்ல அல்ல என்பர் - நற்சகுனங்களல்ல என்று சொல்லுவர் (பெரியோர்,) முதியோர் பரவும் அமலனே-ஞானிகளால் வழிபடப் படுகிற பரிசுத்தனே, அருமை மதவேள், எ-று.

ஒல்லை-விரைவு, தலைதாக்கல் - வாசற்படியில் தலைகட்டுதல் உபசுருதிசொல்-வேறொருவனுக்கு மற்றொருவன் சொல்லுஞ்சொல். முதியோர்-அறிவினால் முதிர்ந்தவர்.

இதுவுமது.

நரிமயில் பசுங்கிள்ளை கோழிகொக் கொடுகாக்கை
நாவி சிச்சிலி யோந்திதான்
நரையான் கடுத்தவாய்ச் செம்போத் துடன்மேதி
நாடரிய சுரபி மறையோர்
வரியுழுவை முதலியவை யனைத்தும்வல மாயிடின்
வழிப்பயண மாகை நன்றாய்
மற்றுமிவை யன்றியே குதிரையனு மானித்தல்
வாய்ச்சொல் வாவா வென்றிடல்

கருவளை தொனிக்கிடுதல் கொம்புஇடு முடிமுரசு
தப்பட்டை யொலிவல் வேட்டுத்
தனமணி முழக்கெழுத லிவையெலா மூர்வழி
தனக்கேக நன்மை யென்பார்
அருணகிரி ரொருதயத் தருணயா ளுனையனைய
என்னுளே யருமை மகவே
வழுதினமு மனைதினினை சருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௬௫

(இ-ள்.) கரி-கரியும், மயில்-மயிலும், பசுங்கிள்ளை-பச்சை நிறமுள்ள கிளியும், கோழி-கோழியும், கொடுக்கொடு காக்கை கொண்டுடனே காகமும், நரி-நரியும், கிச்சிலியும், ஓந்தி-ஓணானும், நரையான் - நரையானும், கடுத்தவாய் செம்போத் துடன்மேதி-கறுத்த முகத்தையுடைய செம்போத்துடனே எருமையும், நாடு அரிய காலி காண்பதற்கரிய பசுவும், மறையோர் - வேதியரும், வரிஉழுவை - கோடுகளையுடைய புலியும், முயல்-முயலும் ஆகிய, இவை அனைத்தும்-இவைகளெல்லாம், வலமாயிட-வலத்திற்போக, வழிப்பயணம் ஆகை-வழிப்பயணமாதல், நன்றாம் - நன்மையாகும், மற்றும்-மேலும், இவை யன்றியே-இவையல்லாமலே, குதிரை அநுமானித்தல் - குதிரை கனைத்தலும், வாய்ச்சொல்லாவா என்றிடல்-(ஒருவரையொருவர்) வாய்ச்சொல்லாலே வாவாவென்று அழைத்தலும், கருவளை தொனிக்கிடுதல்-கருகிற சங்கு தொனிக்கதலும் கொம்பு இடுமுடி முரசு தப்பட்டை ஒலி-கொம்பு இடுமுடி முரசு தப்பட்

டை ஆகிய இவற்றின் ஒலியும், வல்லேவட்டு-வலியவெடியும், தனி
ஒப்பற்ற, மணிமுழக்கு ஒழுதல்-மணியோசை யுண்டாதலும்
ஆகிய, இவையெலாம் - இவையாவும், ஊர்வழி தனக்கு ஏக-
ஊர்ப்பிரயாணம் போவதற்கு, நன்மை என்பார்-நன்மையென்
றுசொல்லுவார் பெரியோர், அருணகிரணம்-செவந்த கிரணங்
களையுடைய, உதயதருண பாநுவை அனைய - உதயகாலத்துச்
சூரியனை நிகர்த்த, அண்ணலே - பெரியோனே, அருமை மத
வேள். எ-று.

நாவி-கஸ்தூரி மிருகம், புழுகுபூனை யெனினுமாம். கிச்
சிலி - பொன் வாய்ப்பறவை. நரையான் - செங்காலுரை, மீன்
குத்திப்பறவை யெனினுமாம். வேட்டு - துப்பாக்கி பீரங்கி
களின் வெடி.

இதுவுமது.

தலைவிரித் தெதிர்வருத லொற்றைப் பிராமணன்
றவசி சன்னாசி தட்டான்
றணமிலா வெறுமார்பி மூக்கறைபுல் லிரகுதலை
தட்டைமுடி மொட்டைத் தலை
கலன்கழி மடைந்தையர் குசக்கலஞ் செக்கான்
கதித்ததில தைல மிவைகள்
காணவெதிர் வரவொணா நீர்க்குட மெருக்கூடை
கனிபுலா லுபய மறையோர்
நலமிகு சுபங்கலை கிழங்கு சூதகமங்கை
நாளும் வண்ணா னழுக்கும்

நசைபெருகு பாற்கலச மணிவளையன் மலரிவைக
ளாடியெதிர் வர நன்மையாம்
அலைகொண்ட கங்கைபுனை வேணியாய் பரசணியு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கூசு.

(இ-ள்.) தலைவிரித்து எதிர்வருதல்-தலைமயிர் விரித்துக் கொண்டு எதிரில்வருதலும், ஒற்றை பிராமணன் - ஒருபிராமணும், தவசி-தவசியும், சன்னாசி-சந்நியாசியும். தட்டான் - தட்டானும், தனம் இல்லா வெறுமார்பி-முலையில்லாத வெறுமார்பையுடையவளும், மூக்கறை-மூக்கறையும், புல்-புல்லும், விறகுதலையரும், தட்டைமுடி-சப்பைத்தலையும் மொட்டைத்தலை-மொட்டைத்தலையும், கலன்கழி மடந்தையர்-விதவைப்பெண்கள், குசக்கலம் - குசக்கலங்களும், செக்கான் - வாணியனும், கதித்ததில தைலம் - பெருத்த எள்ளெண்ணெயும் ஆகிய, இவைகள் - இப்பொருள்கள், காண-பார்க்கும்படி, எதிர் வர வொணா-எதிரில் வரவொண்ணாதனவாகும், நீர்க்குடம்-நீர்க்குடமும். எருக்கூடை - எருமுட்டைக் கூடையும், கனி பழமும், புலால்-மாமிசமும், உபயமறையோர்-இரட்டைப்பார்ப்பாரும். நலம்மிகு சுமங்கலை-நன்மை மிகுந்த சுமங்கலையும், கிழங்கு-கிழங்கும், சூதகமாதும் நாளும் - நாள்தோறும், வண்ணான் அழுக்கும், நசைபெருகு-ஆசைபெருகுதற்குரிய பால்கலசம் பாற்குடமும், மணி - இரத்திநமும், வளையல் - வளையலும், மலர்-பூவும் ஆகிய, இவைகள்-இந்தப்பொருகள், நாடி எதிர்வர

தேடியெ திரிவ்வரின். நன்மை ஆம்-நன்மையுண்டாகும், அலை கொண்ட-அலைகளையுடைய, கங்கை-கங்காநதியை, புனை-தரித் தவேணியாய் - சடையை யுடையவனே, பாசு அணியும் அண் ணலே மழுவைத் தரித்த பெரியோனே, அருமை மதவேள்.

மூக்கறை-மூக்கற்றவன். கலன்-மங்கிலியம். குசக்கலம் குசவன்செய்த மட்கலங்கள். உபயம்-இரண்டு. குதகமங்கை பூப்புள்ளபெண். பாற்கலசம் - பாற்குடுவை. குடுவை - கலயம் அணி வளையல் எனப்பிரித்து தரிக்கின்ற வளையல் என்றுரை த்தலும் பொருந்தும்,

## உணவில் விலக்கு.

கைவிளைக் குக்கொளும் பாலசப் பால்வருங்
காராக் கறந்த வெண்பால்
காளான் முருங்கைசுரை கொம்மடி பழஞ்சோறு
காந்திக் கரிந்த சோறு
செவ்வையில் சிறுகீரை பீர்க்கத்தி வெள்ளுப்பு
தென்னைவெல் லமலா வகஞ்
சீரிலா வெள்ளுள்ளி யீருள்ளி யிங்குவொடு
சிறப்பில்வெண் கத்தரிக் காய்
எவ்வமில் சிலன்கோயி னிர்மாலி யங்கிரண
மிலகுசுட ரில்லாதவூ
ணிவையெலாஞ் சீலமுடை யோர்களுக் காகா
வெனப்பழைய நூலுரை செயும்

ஐவகைப் புலன்வென்ற முனிவர்விண் ணவர்போற்று
மமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசது ரகிரிவள
றறப்பளீ சுர தேவனே. ௯௩

(இ-ள்.) கைவிளக்கு கொள்ளும்பால்-கைவிளக்கு வாங்குகிற பாலும், அசப்பால்-ஆட்டுப்பாலும், வரும் கார் ஆகுறங்குவெண்பால்-வருகிற காராவினின்றும் கறக்கப்பட்ட வெள்ளியபாலும், காளான்-காளானும், முருங்கை-முருங்கையும், சுரைசுரையும், கொம்மடி-கொம்மடியும், பழஞ்சோறு - பழயசோறும், காந்திக் கரிந்தசோறு-தீந்துகரிந்துபோன சோறும், செவ்வையில் சிறுகீரை - நற்குணமில்லாத சிறுகீரையும், பீர்க்கு-பீர்க்கங்காயும், அத்தி- அத்திக்காயும், வெள் உப்பு - வெள்ளேயுப்பும், தென்னைவெல்லம் - தென்னவெல்லமும், மலைவேதம்பிண்ணாக்கும், சீர் இல்லா வெள் உள்ளி-சிறப்பில்லாதவெள்ளுள்ளியும், இங்குவொடு-பெருங்காயத்துடனே, சிறப்பு இல்-மேன்மையில்லாத, வெள் கத்தரிக்காய்-வெள்ளைக் கத்தரிக்காயும் எவ்வம் இல்-குறைவில்லாத, சிவன் கோயில் நிர்மாலியம்-சிவன் கோயில் நிர்மாலியமும், கிரணம் இலகு சுடர் இல்லாத ஊண் கிரணம்விளங்குகிற சூரியனில்லாத உணவும் (ஆகிய) இவை யெலாம்-இவையாவும், சீலம் உடையோர்களுக்கு-நல்லொழுக்கமுடையோர்களுக்கு, ஆகா என-ஆகாதனவென்று, பழையமுறைசெயும்-வேதங்கள் சொல்லாநிற்கும், ஐவகை புலன் வென்ற-ஐவகையாகிய புலன்களைவென்ற, முனிவர் விண்ணவர் போ

ற்றும் அமலனே-முனிவர்களும் தேவர்களும் வணங்குகின்ற பரிசுத்தனே அருமை மதவேள். எ-று.

அசம்-ஆடு. காரா-காராம்பசு. கொம்மடி - நீர்மோலாய் பழம். வெள்ளுள்ளி-பூண்டு, கருள்ளி-வெங்காயம். வேதம் எல் லா நூல்களுக்கும் முதநூலாதலால் அதனைப் 'பழையநூல்' என்றார். ஐவகைப்புலன்கள்-ஐம்புலன்கள். அவை சத்த பரிச ரூப ரச கந்தங்கள்.

நற்பொருளிற் குற்றம்.

பேரான கங்கா நதிக்குமதன் மேல்வரும்
பேனமே தோஷ மாகும்
பெருகிவளர் வெண்மதிக் குள்ளுட் களங்கமே
பெரிதான தோஷ மாகும்
சீராக் தபோதனர்க் கொருவர்மேல் வருகின்ற
சீற்றமே தோஷ மாகுந்
திதின்முடி மன்னவர் விசாரித் திடாதொன்று
செய்வதவர் மேற் றோஷமாம்
தாராள மாமிகத் தந்துளோர் த்ராமை
தானிரப் போர் தோஷமாந்
சாரமுள நற்கருப் பஞ்சாறு கைப்பதவர்
தாலஞ்செய் தோஷ மாகும்
ஆராயு மொருநான் மறைக்குமெட் டாதொளிரு
மண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) பேர் ஆன கங்காநதிக்கும்-பேற்பெற்ற கங்கை யாற்றுக்கும், அதன்மேல்வரும் பேநமே-அதன்மேல் மிதந்து வருகிற நுரையே, தோஷம் ஆகும்-குற்றமாகும். பெருகிவ ளர் (கலைகளால்) வளர்ந்து நிறைகிற, வெள்மதிக்கு - வெண் ணிறமான சந்திரனுக்கு, உள்ளுள் களங்கமே-நடுவிலுள்ளகள ங்கமே; பெரிது ஆன தோஷம் ஆகும்-பெரிதாகிய குற்றமா கும், சீர் ஆம் தபோதனர்க்கு-சிறப்பையுடைய முனிவர்களு க்கு, ஒருவர்மேல் வருகின்ற சீற்றமே-ஒருவர்மேல் உண்டாகி ன்ற கோபமே, தோஷம் ஆகும்-குற்றமாகும், தீது இல்-குற் றமில்லாத, முடிமன்னவர் - கிரீடாதிபதிகளாகிய அரசர்கள் விசாரித்திடாது-விசாரணை செய்யாமல், ஒன்று செய்யின்-ஒரு காரியத்தைச் செய்தால், (அது) அவர்மேல் தோஷம் ஆம் அவர்மேல் குற்றமாகும், தாராளமா மிகதந்துளோர்(முன்னே பலயாசகர்களுக்கு) மிகுதியாகத்-தாராளமாகப்பொருள்கொடு த்தவர்கள், தாராமைதான் (பின்னை அப்படி) கொடாமையே இரப்போர் தோஷம் ஆம் - அந்த யாசகரது குற்றமேயாகும் சாரம் உள்ள-இனிய சுவையுள்ள, நல்கருப்பஞ்சாறு, கைப்பது (சிலர்க்கு) கசப்பது, அவர் தாலம்செய் தோஷம் ஆகும்-அவர் களுடைய நாக்கள்செய்த குற்றமே யாகும், ஆராயும்-ஆராய் கின்ற, ஒரு நால்மறைக்கும் - ஒருநான்கு வேதங்களுக்கும், எட்டாது-எட்டாமல், ஒளிரும் (அவற்றிற்கு மேற்பட்டு)விளங் குகிற, அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள். எ-று.

பேர்-பிரசித்தி. வெண்மதி யென்பதில் வெண்மை இயற் கையடை, தபோதனர்-தவத்தையே செல்வமாக வுடையவர்.

## மனைகோல்வதற்கு மாதம்.

சித்திரைத் திங்கடனின் மனைகோல மனைபுகச்
செல்வமுண் டதினு நலமே
சேரும்வை காசிக்கு மேனு ளரன்புரத்
தீயிட்ட தானி யாகா
வெற்றிகொ ளிராகவன் றேவிசிறை சேர்கடகம்
விறல்ல வாவணி சுகம்
மேவிடுங் கன்னியிர ணியன்மாண்ட தாகாது
மேன்மையுண் டைப்ப சிக்கே
உத்தமங் கார்த்திகைக் காகாது மார்கழி
லோங்கு பாரதம் வந்தநா
ளுபர்வுண்டு மாகத்தின் மாசிமா தத்தில்வி
மும்பர்கோ னுண்ட தாகா
தத்தநீ மாரனை யெரித்தபங் குனிதானு
மாகுமோ வருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள கூஎ
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) சித்திரைத்திங்கள்தனில் - சித்திரைமாதத்தில், மனைகோலமனைபுக - மனைகோலினும் மனைபுகினும், செல்வம் உண்டு-செல்வமுண்டாகும், வைகாசிக்கு-வைகாசிமாசமாயின் அதினும் நலமே சேரும்-அதினும் மிகுந்த நன்மையே உண்

திங்களுக் குறவுண்டு நன்மையாம் பகைவருஞ்
செவ்வாய் விருந் தருந்தார்
பொங்குபுத னன்மையுண் டுறவாம் விருந்துணைப்
பொன்னவர்க் கதிக பகையாம்
புகரவற் காகிலோ கெடுநாள் விரோதமாய்ப்
போன வுறவுந் திரும்பும்
மங்குனிகர் சனிவார நல்லதா மிதனினு
மனமொத் திருந்த விடமே
வாலாய மாய்ப்போய் விருந்துண விருந்துசெ
வாய்த்தநா ளென் றறிபலாம்
அங்கையில் விளங்கிவளர் அங்கமழு வாளனை
யண்ணலை யருமை மதலை
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கஅ

(இ-ள்) செங்கதிர்க்கு-ஞாயிற்றுக்கிழமையில் விருந்துசெ
ய்தாலும் உண்டாலும், உறவுபோம் - நட்புக்கெடும் ஆதலால்
ஒருவர் - ஒருவரும், விருந்து செய்பொழுது உண்பொழுது
விருந்து செய்தலுமாகாது உண்ணுதலுமாகாது, திங்களுக்கு
உறவு உண்டு நன்மை ஆம்-திங்கட்கிழமையிலாயின் நட்புண்
டாம் நன்மையுமுண்டாகும், பகைவரும்-பகையுண்டாதலால்
செவ்வாய் விருந்து அருந்தார்-செவ்வாய்க்கிழமையில் விருந்து
ண்ணமாட்டார்கள், பொங்குபுதன்-விளங்குகிற புதன்கிழமை
யானால், நன்மை உண்டு உறவு ஆம்-நன்மையுண்டு உறவுமுண்

டாகும், மேல்நாள்-முன்னாளில், அரன்-சிவபெருமான், புரம் முப்புரத்தில், நீபிட்டது-நெருப்பிட்டதாதலால், ஆனி ஆகா ஆனிமாதமாகாது, வெற்றிகொள் வெற்றியைக்கொண்ட, இராகவன்தேவி-ஸ்ரீராமனது தேவியாகியசீதை, சிறைசேர்-கடகம் சிறையடைந்த ஆடிமாதம், வீறு அல்ல-சிறந்ததல்ல, ஆவணி ஆவணிமாசமாயின், சுகம்மேவிடும்-சுகம் உண்டாகும், இரணியன்மாண்டது-இரணியன் மடிந்த தாகையால், கன்னி ஆகாது புரட்டாசிமாதம் ஆகாது, ஐப்பசிக்கு மேன்மையுண்டு-ஐப்பசியிலானல் மேன்மையுண்டாகும், கார்த்திகைக்கு உத்தமம் கார்த்திகை மாசமானல் உத்தமம், ஓங்கு பாரதம் வந்தநாள் உயர்ந்த பாரதமுண்டான காலமாதலால், மார்கழியில் ஆகாது மார்கழி மாசத்திலாகாது, மகரத்தில் உயர்வுண்டு-தைமாசத்திலானல் உயர்ச்சியுண்டாகும், மாசிமாதத்தில்-மாசி மாதத்திலானல், உம்பர்கோன் விடம் உண்டது ஆகாது-தேவர் பெருமானே நீ விஷமுண்டதனல் அது ஆகாது, அத்த-அத்தனே நீ மாரனையெரித்த - நீ மன்மதனை எரித்த, பங்குனிதானும் ஆகுமோ-பங்குனிமாசமும் ஆகுமோ (ஆகாது) அருமை மதவேள். எ-று.

மனைகோலுதல்-வீடுகட்ட அடிப்படை போடுதல். மனைபுகுதல்-கிருகப்பிரவேசம் செய்தல். மாசிமாதத்தில் சிவபெருமான் விஷமுண்ட நாளையே சிவராத்திரி யென்பர்.

## விருந்து வாரம்.

செங்கதிர்க் குறவுபோம் பகைவரும் விருந்தொருவர்
செய்யொரு தூண்ணுறு ணுது

திங்களுக் குறவுண்டு நன்மையாம் பகைவருஞ்
செவ்வாய் விருந் தருந்தார்
பொங்குபுத னன்மையுண் டுறவாம் விருந்துணப்
பொன்னவர்க் கதிக பகையாம்
புகரவற் காகிலோ நெடுநாள் விரோதமாய்ப்
போன வுறவுந் திரும்பும்
மங்குனிகர் சனிவார நல்லதா மிதனினு
மணமொத் திருந்த விடமே
வாலாய மாய்ப்போய் விருந்துண விருந்தவ
வாய்த்தநா ளென் றறிபலாம்
அங்கையில் விளங்கிவளர் துங்கமழு வாளினை
யண்ணலை யருமை மதனை
லனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௬அ

(இ-ள்) செங்கதிர்க்கு-ஞாயிற்றுக்கிழமையில் விருந்து செ...தாலும் உண்டாலும், உறவுபோம் - நட்புக்கெடும் ஆதலால் ஒருவர் - ஒருவரும், விருந்து செய்பொழுது உண்...... விருந்து செய்தலுமாகாது உண்ணுதலுமாகாது, திங்களுக்கு உறவு உண்டு நன்மை ஆம்- திங்கட்கிழமையிலாயின் நட்புண்...டாம் நன்மையுமுண்டாகும்,பகைவரும்-பகையுண்டாதலால் செவ்வாய் விருந்து அருந்தார்-செவ்வாயக்கிழமையில் விருந்து ...ண்ணமாட்டார்கள், பொங்குபுதன்-விளங்குகிற புதன்கிழமை ...யானால், நன்மை உண்டு உறவு ஆம்-நன்மையுண்டு உறவுமுண்

டாகும், பொன்னவற்கு-வியாழக்கிழமையில், விருந்துஉண்ண விருந்து உண்டால், அதிகபகை ஆம் - மிக்கபகை யுண்டாகும் புகரவற்கு ஆகிலோ - வெள்ளிக்கிழமையில் ஆனால், நெடுநாள் விரோதமாய் போன உறவும் திரும்பும்-நெடுநாள் பகையாய்ப் போன உறவும் திரும்பி வந்துசேரும், மங்குல்நிகர்சனிவாரம் நல்லது ஆம்-(நீல) மேகத்தை நிகர்த்த சனிக்கிழமை நல்லதா கும். இதனினும்-இதைப்பார்க்கிலும், மனம் ஒத்திருந்த விடமே - மனமிசைந்திருந்த இடமே, வாலாயமாய்போய்-தாராளமாகப்போய், விருந்து உண்ண விருந்து உதவ-விருந்துண்பதற்கும் விருந்து செய்வதற்கும், வாய்த்தநாள் என்று அறியலாம் பொருத்தமான நாளென்றறிந்துகொள்ளலாம். அங்கையில்விளங்கிவளர்-அகங்கையில் விளங்கி வளராநின்ற, துங்கம் மழுவனே - உயர்ந்த மழுவாயுதத்தை யுடையவனே, அண்ணலே - பெரியோனே, அருமை மதவேள். எ-று.

செங்கதிர்-சூரியன் (செவந்த கிரணங்களை யுடையவன்) பொன்னவன்-வியாழம் (குரு) புகரவன்-சுக்கிரன். சனி கறுப்பாதலால் மங்குனிகர் சனியென்றார் துங்கம் பரிசுத்தம் எனினுமாம்.

## பூப்புவாரம்.

அருக்கனுக் கதிரோகி யாவணற் சோமனுக்
கானகற் புடைய ளாவா
ளங்கார கற்குவெகு துக்கியா வாள்புந்தி
யளவில்பைங் குழவிபெறுவாள்

திருத்தகு வியாழத்தின் மிக்கசம் பத்தினொடு
சிறுவரைப் பெற் றெடுப்பாள்
சீருடைய பார்க்கவற் கதிபோக வதியுமாய்
திருவு முண்டா யிருப்பள்
கருத்தழிக் கெழில்குன்றி வறுமைகொண் டுலைகுவார்
காரிவா ரத்தி லாகில்
களபமுலை மடமாதர் புட்பவதி யாய்வார
காலபய னென்றுரை செய்குவார்
அருத்தியுட னெனையினை யாட்கொண்ட சோதியே
பண்ணமலை யருமை மதலே
வானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) அருக்கனுக்கு-ஆதிவாரத்தில் புட்பவதியானால், அதிரோகி யாவள்-மிகுந்த நோயுள்ளவளாவாள், சோமனுக்கு சோமவாரத்திலானால், ஆனகற்பு உடையவள் ஆவாள்-நன்மையாகிய கற்புள்ளவளாவாள், அங்காரகற்கு வெகுதுக்கி ஆவாள் மங்களவாரத்திலானால் மிகுந்த துக்கமுள்ளவளாவாள், புத்தி அளவு இலபல குழவிபெறுவாள்-புதவாரத்திலானால் அளவில்லாத பலபிள்ளைகளைப் பெறுவாள், திருதகு வியாழத்தில்-அழகுபொருந்திய குருவாரத்திலானால், மிக்கசம்பத்தினொடு மிக்க பாக்கியத்துடனே, சிறுவரை பெற்றெடுப்பள்-குழந்தைகளைப்பெற்றெடுப்பள், சீர் உடைய பார்க்கவற்கு - சிறப்புள்ள சுக்கிரவாரத்தினால்; அதிபோகவதியும் ஆம்-அதிக போகவதி

யுமாவாள், திருவும் உண்டாயிருப்பாள்-செல்வ மூண்டாயிருப் பாள், காரிவாரத்தில் ஆகில் - சனிவாரத்திலானால், கருத்து அழிந்து-மனங்கெட்டு, எழில் குன்றி-அழகுகுறைந்து, வறு மைகொண்டு அலைகுவாள்-தரித்திரமடைந்து திரிவாள், (இது வே) களபம்-கலவைச்சந்தன மணிந்த, முலை - ஸ்தனங்களை யுடைய, மடமாதர்-இளம்பெண்கள், புட்பவதி ஆம்-புஷ்பவதி களாகிய வாரகால பலன் என்று உரைசெய்வார் - வாரகாலபல னென்று சொல்லுவர் (பெரியோர்) அருத்தியுடன்-அன்போடு எளியேனை ஆட்கொண்ட, சோதியே-ஒளிமே, அண்ணலே. பெரியோனே அருமைமதவேள். எ-று.

அருக்கன்-சூரியன். சோமன்-சந்திரன். அங்காரகன்-செவ்வாய், புந்தி-புதன். வியாழன்-குரு. பார்க்கவன் - சுக்கிரன். போகவதி - போகத்தில் விருப்பமுள்ளவள். திரு - செல்வம். காரி-சனி. அருத்தி-கருணையெனினுமாம்.

## பூப்பிலக்கணம்.

வறுமைதப் பாதுவரு மேடத்தி விடபத்தின்
மாறாது விபசாரி யாம்
வாழ்வுண்டு போகமுண் டாகுமிது னங்கடகம்
வலிதினிற் பிறரை யணைவாள்
சிறுமைசெயு மிடிசேர்வண் மிருகேந் திரற்கெனிற்
சீர்பெறுவள் கன்னி யென்னில்
செட்டுடைய டுலையெனுற் பிணியான் மெலிந்திடுவ
டேளினுக் குத் தனுசெனில்

நெறிசிதைவள் பூருவத் தபரநெறி யுடையளா
நீண்மகர மான மிலளா
நிறைபோக வதிகுப்ப மெனின்மீன மென்னிலோ
நெடிய பேரறி வுடையளாம்
அறிவாளர் மடமாதர் தமையறியி ராசிபல
னதுவென்ப ரருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எ௰

(இ-ள்.) மேடத்தில் - மேஷலக்கினத்தில் (புஷ்பவதியா ளுல்) வறுமைதப்பாதுவரும்-தரித்திரம் தவருமலுண்டாகும், இடபத்தில்-ருஷபலக்கினத்திலாளுல், மாருது விபசாரி ஆம் இடையருமல் விபசரிப்பவளாவாள், மிதுநம்-மிதுநலக்கினத்தி லாளுல், வாழ்வு உண்டு-வாழ்வுண்டாகும், போகம் உண்டாகு போகமும் உண்டாகும், கடகம்-கடலத்திலாளுல், வலிதினில் பலாத்காரமாக, பிறரை அணைவாள் - அந்நியரைச் சேர்வாள் மிருகேந்திரற்கு எனின்-சிங்கலக்கினத்திலாளுல், சிறுமைசெ ய்யும் மிடிசேர்வள் - தாழ்வையுண்டாக்குகிற தரித்திரத்தை யடைவாள், கன்னியென்னில்-கந்யாலக்கினமென்றல், சீர்பெ றுவள்-சிறப்புப்பெறுவாள், துலை எனில்-துலாலக்கினத்தி லா ளுல், செட்டு உடையள்-செட்டுடையளா யிருப்பள், தேளிளு க்கு-விருச்சிக லக்கினத்திலாளுல், பிணியால் மெலிந்திடுவள் நோயிளுல் இளைத்துப்போவாள், தநுசு எனின்-தநூர்லக்கின த்திலாளுல், நெறிசிதைவள் பூருவத்தி-முன்னே கற்புவழிபி

ளின்றும் தவறுவள், (அதுவுமன்றி) அபரநெறி உடையளாம் பின்னெறியாகிய விபசாரத்தை யுடையவளாவள், நீள் மகரம்-பெரிய மகரலக்கினத்திலென்றாலோ, நெடியபேரறிவு உடையள் ஆம் - மிகுந்த பேரறிவை யுடையவளாவள், அறிவாளர் விவேகிகள், மடமாதர்தமை-இளம் பெண்களை, அறி-அறிந்து கொள்ளுதற்குரிய, இராசிபலன் இது என்பர் - இதுவென்று சொல்லுவர், பெரியோர் அருமைமதவேள்.எ-று.

வாழ்வு-உயிர்வாழ்க்கை (ஆயுள்) செல்வம். கடகம் கற்கடகள். சிங்கம் மிருகங்களுக்கெல்லாம் அரசனாதலால் அதனை மிருகேந்திரன் என்றார். செட்டு-சிக்கனவு (பிசுநத்தனம்)

## தீவுங் கடலும்.

நாவலந் தீவினைச் சூழ்கருங் கடலளவு
லட்சம் யோசனை யிதனையே
நாடொறுஞ் சூழ்வதில வந்தீ வதைச்சூழ்த
னற்கழைச் சாற்றின் கடல்
மேவுமிது சூழ்வது குசத்தீ வதைச்சூழ்தன்
மிருமதுக் கட லதனையே
விழைவொடுஞ் சூழ்தல்கிர வுஞ்சதீ வம்மிதனின்
மேற்சூழ்த னெய்க் கடலதாம்
பூவிலிது சூழ்தல்சா கத்தீவ மிங்கிதைப்
போர்ப்பது திருப்பாற் கடல்
போதவறு சூழ்தல்சான் மலிதீவ மாந்தயிர்ப்
புணரி யப்பாலு மப்பால்

ஆவலுறு புட்கரத் தீவா மிதைச்சூழ்வ
தரும்புனற் றருமை மதமே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவளை
ரறப்பளீ சுர தேவனே. எ௩

(இ-ள்.) நாவலந்தீவினை - நாவலந்தீவை சூழ்-வளைந்த கருங்கடல் அளவு - கருங்கடலின் பிரமாணம், லட்சம் யோசனை - லக்ஷம் யோசனையாகும், இதனை - இதை, நாள்தோறும் சூழ்வது - எந்நாளும் வளைந்திருப்பது, இலவந்தீவு - இலவந்தீவாகும், அதைச்சூழ்தல் - அதை வளைந்திருப்பது நல்கழைசாற்றின் கடல் - நல்ல கருப்பஞ்சாற்றுக்கடலாகும், மேவும் இது சூழ்வது - பொருந்திய இதைச் சூழ்ந்திருப்பது குசத்தீவு குசத்தீவாகும், அதை சூழ்தல் - அதைச்சூழ்ந்திருப்பது மிகு மதுக்கடல்-மிகுந்த கள்ளுக்கடலாகும், அதனை மேவிழைவொடும் சூழ்தல் - அதைவிருப்பத்தோடு சூழ்ந்திருப்பது, கிரவுஞ்சதீவும் - க்ரௌஞ்ச தீவாகும், இதனின்மேல சூழ்தல் - இதன்மேற் சூழ்ந்திருப்பது, நெய்க்கடலதுஆம் - நெய்க்கடலாகும் பூவில் - உலகில், இதுசூழ்தல் - இதைச் சூழ்ந்திருப்பது சாகத்தீவம் - சாகத்வீபமாகும், இங்கு இதை போர்ப்பது, இங்கிதனைச் சூழ்ந்திருப்பது, திருப்பாற்கடல் - திருப்பாற்கடலாகும், போதஅது சூழ்தல்-மிகவும் அதைச் சூழ்ந்திருப்பது, சால்மலிதீவாம் - சால்மலித்தீவுமாகும், அப்பாலும் - அதைச் சூழ்ந்திருப்பதும், தலர்புணரி - தயிர்க்கடலாகும், அப்பால - அதற்கப்புறத்திருப்பது, ஆவல்உறப்பு புட்காத்திவாம் - விரும்புதற்குரிய புஷ்கரத்வீபமாகும், இதைச்சூழ்வது - இதைச்

சூழ்ந்திருப்பது, அருப்புனற்று - அருமையாகிய சுத்த நீர்க்கடலாகும். அருமைமதவேள் எ-று.

நலவிந்திய - ஐம்பூதவிடயம் கழை - கரும்பு மது - கள் புணரி - கடல்

## மேலான பொருள்.

சுழிசுத்த மாயிருந் ததிலும் படைக்கான
துரகமோர் மாணிக்க மாம்
சூழ்புவிக் கரசனு யதிலே விவேகமுள
துரையுமோர் மாணிக்க மாம்
பழுதற்ற நிருப ததியுமாய்க் கற்புடைய
பாவையோர் மாணிக்க மாம்
பலகலைகள் கற்றறி யடக்கமுள பாவலன்
பார்க்கிலோர் மாணிக்க மாம்
ஒழிவற்ற செல்வனு யதிலே தியாகியா
முசிதனோர் மாணிக்க மா
மூத்தகுலத்துதித் ததிலுமோ மெய்ஞ்ஞான
முண்டயனோர் மாணிக்க மாம்
அழிவற்ற வேதாக மத்தின்வடி வாய்விளங்
கமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எஉ

(இ-ள்.) சுழிசுத்தமாயிருந்து - சுழிகள் சுத்தமானவைகளாயிருக்கப்பெற்று, அதிலும் - இதனோடும், படைக்கு ஆன

துரகம் - படைவகுப்புக்குரியதாகிய குதிரை, ஓர் மாணிக்கம் ஆம் - ஒரு மாணிக்கமாகும், சூழ்புவிக்கு அரசன் ஆய் - விளைந்த இவ்வுலகத்துக்கு அரசனாகி, அதிலே - அதிலும், விவேகம் உள்ள - விவேகத்தையுடைய, துரையும் - பிரபுவும். ஓர் மாணிக்கம் ஆம் - ஒரு மாணிக்கமாவான், பழுது அற்ற - குற்றமற்ற, அதிரூபவதியுமாய் - அதிக சௌந்தரியமுடையவளுமாகி, (அதனுடன்) கற்புஉடைய பாவை - கற்புள்ள பெண் ஓர் மாணிக்கம் ஆம் - ஒரு மாணிக்கமாவாள். பலகலைகள் பல நூல்களையும், கற்று - படித்து, அறி-(அவற்றின் பொருள்களை சந்தேக விபரீதங்களில்லாமல்) அறிந்த, அடக்கம்உள்ள - அடக்கத்தையுமுடைய, பாவலன்-வித்துவான், பார்க்கில்-பார்க்குமிடத்து, ஓர் மாணிக்கம்ஆம் - ஒருமாணிக்கமாவான், ஒழிவு அற்ற செல்வன் ஆய் - தொலைவில்லாத பெருஞ் செல்வத்தையுடையவனாய், அதிலே - அதிலும், தியாகி ஆம் - கொடையாளனாகிற, உசிதன் - மேலோன், ஓர்மாணிக்கம் ஆம் - ஒருமாணிக்கமாவான், உத்தமகுலத்து உதித்து - சிறந்தகுலத்திற் பிறந்து, அதிலும்-அதிலும் மெய்ஞ்ஞானம் உடையன் - உண்மை ஞானத்தை யுடையவன், ஓர்மாணிக்கம்ஆம் - ஒருமாணிக்கமாவான், அழிவு அற்ற- அழிவில்லாத, வேதாகமத்தின் - வேதாகமங்களின், முடிவுஆய் விளங்கு - முடிவுபொருளாய் பிரகாசிக்கிற, அமலனே - பரிசுத்தனே, அருமைமதவேள் எ-று.

சூழ்புவிக் கரசனும் என்பதற்கு தன்னைச் சூழ்ந்திருக்கிற உலகத்தார்க்கரசனாய் என்றுரைத்தலும் பொருந்தும் சூழ்புவி- கடலாற் சூழப்பட்ட வுலகம் எனினுமாம். பாவை - பிரதிமை

போல்வாள் இது உவமை யாகுபெயர் பாவலன் - கவிஞன் எனி னுமமையும். ஒழிவற்ற என்ற விசேடணத்தால் செல்வம் பெ ருஞ்செல்வத்துக்காயிற்று.

## உண்டி யிலையும் முறையும்.

வாழையிலை புன்னைபுர சுடனற் குருக்கத்தி
மாப்பலாத் தெங்கு பன்னீர்
மாவிலமு துண்ணலா முண்ணாத வேவாரசு
வகைசஞ் செழும் பாடலம்
தாழையிலை யத்தியா லோண்ட பத்திரஞ்
சகதேவி முண் முருக்குச்
சாருமிசை யன்றிவெண் பாலெருக் கிச்சிலிலை
தனினுமுண் டிடவொணா தால்
தாழ்விலாச் சிற்றுண்டி நீரடிக் கடிபருகல்
சாதங்கள் பல வருந்தல்
சற்றுண்டன் மெத்தவூ ணித்தனையு மெய்ப்பிணி
தனக்கிட மெனப் பருகிடார்
ஆழிபுடை சூழுலகில் வேளாளர் குலதிலக
னருமைம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுரதேவனே, எ௬

(இ-ள்) வாழையிலை - வாழையிலையிலும், புன்னை - புன்னை யிலையிலும்; புரசுடன் - புரச இலையொடு, நல்குருக்கத்தி-நல்ல குருக்கத்தி யிலையிலும், மா-மாவிலையிலும், பலா-பலா யிலையி

யிலும், தெங்கு - தென்னையிலையிலும், பன்னீர் - பன்னீரிலையிலும், மாசு இல் - குற்றமில்லாத, அமுது உண்ணலாம் - சோறுண்ணலாம். உண்ணுதலோ - உண்ணத்தகா தனவோ என்றால், அரசு-அரசிலையும் வனசம்-தாமரையிலையிலும், செழு பாடலம்-செழுமையாகிய பாதிரியிலையிலும், தாழையிலை-தாழையிலையிலும், அத்தி-அத்தியிலையிலும், எரண்டபத்திரம் - ஆமணக்கிலையிலும் சாவேதம்-சிறுநாவல் இலையிலும், முள்முருக்கு-முள் முருக்கிலையிலும், சாரும் இவையன்றி - பொருந்திய இவைகளேயன்றி வெள்பால்-வெள்ளிய பாலுள்ள எருக்கு எருக்கிலை, இச்சில்இலை தன்னிலும் - உண்ணக்கூடாது, தாழ்வு இல்லா - குறைவற்ற, சிற்றுண்டி - சிற்றுணவும், நீர் அடிக்கடி பருகல்-நீரை அடிக்கடி குடித்தலும், சாதங்கள்பல அருந்தல்-பலவகையாகிய சோற்றையிண்ணுதலும் சற்று உண்டல் கொஞ்சமாயுண்ணுதலும், மெத்த ஊண் - மிகவுண்ணுதலும் ஆகிய இவையெல்லாம்-இவையாவும், மெய்ப்பிணி தனக்கு இடம் என-சரீரவியாதிக்கு ஏதுவாமென்று, பகிடார்-உணர்ந்தோர் (அறிவுடையோர்) ஆழி-கடலானது, புடைசூழ்-சுற்றிலும் வளைந்திருக்கிற, உலகில்-உலகத்தில், வேளாளர் குலதிலகன் ஆகும்-வேளாளரது குலத்துத் திலகம்போல்பவனாகிய எமதருமைதவேள் எ-று.

சாதங்கள்பல என்றது சித்திரான்னங்களை, சித்திரான்னங்களாவன புளியோரை, பொங்கல் சாக்கரைப்பொங்கல், ததியோதனம் முதலியன.

## கவிஞர் வறுமை.

எழுதப் படிக்கவகை தெரியாத மூடனை
யிணையிலாச் சேட னென்று
மீவதில் லாதகன லோபியைச் சபையதனி
லிணையிலாக் கர்ணனென்றும்
அழகற்ற வெகுகோர ரூபத்தை யுடையோனை
யதிவடிவ மாரனென்று
மாயுத மெடுக்கவுந் தெரியாத பேடிதனை
யாண்மைமிகு விஜய னென்றும்
முழுவதும் பொய்சொல்லி யலைகின்ற வஞ்சனை
மொழி யரிச்சந்த்ர னென்றும்
மூதுலகி லிவ்வணஞ் சொல்லியே கவிராஜர்
முறையின்றி யேற்ப தென்னோ
அழலென வுதித்துவரு விடமுண்ட கண்டனே
யமலனே யருமை மதவே
எழுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯௬

(இ-ள்.) எழுதப்படிக்க-எழுதவும் படிக்கவும், வகைதெரியாதமூடனை-வகையறியாதமூடனை இணையில்லா சேடன் என்றும்-நிகரற்ற ஆதிசேஷனென்றும் ஈவது இல்லாதகனலோபியை-ஈகையில்லாத பெரியலோபியை சபையதனில்-சபையிலே இணையில்லாகர்ணன் என்றும்-நிகரற்ற கர்ணமஹா ராஜனென்றும் அழகு அற்ற-அழகில்லாத, வெகுகோர ரூபத்தையுடை

யோனை - மிகுந்த கோரவடிவத்தை யுடையவனை மதிப்பவம் மாரன் என்றும்-மிக்க அழகியருபத்தையுடைய மன்மதனென்றும் ஆயுதம் எடுக்கவும் தெரியாத பேடிதனை-ஆயுதத்தை யெடுக்கவும் அறியாத பேடியை, ஆண்மைவிசயன் என்றும் ஆண்மையில் மிகுந்த அருச்சுனன் என்றும், முழுவதும் பொய்ச்சொல்லி-முழுதும் பொய்பேசி அலைகின்ற வஞ்சகனை அலைகின்றவனாகிய வஞ்சனையுள்ளவனை மொழி அரிச்சந்திரன் என்றும் மூது உலகில்-பழமையாகிய வுலகத்தில், இவ்வண்ணம் சொல்லி கவிராஜர்-கவிராயர்கள் முறையின்றி ஏற்பது என்னே முறையில்லாமல் ஏற்பது என்ன காரணத்தினாலோ (அறிந்திலெம் (அறிந்திலோம்) அழல் என-நெருப்புப்போல உதித்து வரு-தோன்றிவந்த விடம் உண்ட நஞ்சையுண்ட கண்டனே நீலகண்டனே, அமலனே-பரிசுத்தனே அருமைதேவன் எ-று

ஆதிசேஷன் கல்வியிற் சிறந்தவன் என்பதும் கர்ணன் ஈகையிற் சிறந்தவன் என்பதும் மன்மதன் அழகிற் சிறந்தவன் என்பதும் அருச்சுனன் ஆண்மையிற் சிறந்தவன் என்பதும் இச்செய்யுளால் இனிது விளக்கப்பட்டன, பேடி-அலி.

கவிஞன்.

தெள்ளமிர்த தாரையென மதுரக் கவித்தரைச்
தேன்மடை திறந்த தெனவே
செப்புமுத் தமிழ்நெறி நாற்கவிதை காப்பொரு
டெரிந்துரைசெய் திறமை யுடனே
விள்ளரிய காவியத் துட்பொரு ளலங்காரம்

விரிவிலக் கண விகற்பம்
வேறுமுள தொன்னூல் வழக்குமுல கத்தியல்பு
மிக்கப் பந்த வண்மை
உள்ளமெல் லாமறிந் தலைபடங் குங்கடலை
யொத்ததிக சபை கண்டபோ
தோங்கலை யொலிக்கின்ற கடல்போற்ப்ர சங்கம
துரைப்பவன் கவிஞ னாகும்
அள்ளிவிட முண்டகனி வாயனே நேயனே
யமலனே யருமை மதனே
எனுதினமு மனதினினை வருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எரு

(இ-ள்.) தெள்அமிர்த்தாரைஎன-தெளிவாகிய அமிர்த்தாரையைப்போலவும் மதுரம் கதித்த மதுரமிகுந்த பைந்தேன் மடைதிறந்து என- பசிய தேன்மடை திறந்தாற் போலவும், செப்பும் முத்தமிழினோடும் -சொல்லப்பட்ட முத்தமிழுடனே நாற்கவிதை-நாற்கவிகள், நாற்பொருள்-நாற்பொருள்கள் (என்பவற்றை), தெரிந்து உரைசெய்திறமையுடனே-அறிந்து சொல்லத்தகுந்த சமர்த்துடனே விள் அரிய-சொல்லுதற்கரிய காவியத்துட்பொருள்-காவியங்களின் உட்பொருள் அலங்காரவிரிவு அலங்காரவிரிவு, இலக்கண விகற்பம்-இலக்கணவேறுபாடு வேறும் உள்ள-மற்றுமுள்ள தொன்னூல் வழக்கும் - பழைய நூல் வழக்கும், உலகத்து இயல்பும்-உலகவியற்கையும்மிக்க ப்ரபந்த வண்மை - மேறான பிரபந்த வண்மையும், உள்ள எல்லாம்

அறிந்து-இன்னும் உள்ளவையாவும் கற்றறிந்து, அலை அடங்கும் கடலை ஒத்து-அலையடங்கிய கடலை நிகர்த்து, அதிகசபை கண்டபோது - மேலான சபையைக கண்டபொழுது, ஓங்கு அலை ஒலிக்கின்ற கடல்போல் - உயர்ந்த அலைகள் முழுங்கப் பெற்ற கடல்போல, பிரசங்கமது - உரைம்பவன் - பிரசங்கம் செய்பவன், கவிஞன் ஆகும் - கவிஞனுவான், விடம் அள்ளி உண்ட-நஞ்சை அள்ளிப்புசித்த, கனிவாயனே - கனிவாயையுடையவுவனே. நேயனே-அன்புள்ளவனே, அமலனே பரிசுத்தனே, அருமைமதவேள், எ-று.

முத்தமிழ்-இயற்றமிழ், இசைத்தமிழ் நாடகத்தமிழ் என்பன. நாற்பொருள்-அறம், பொருள், இன்பம், வீடு என்பன. காவியம் - சிந்தாமணிமுதலிய பஞ்சகாவியங்கள். அலங்காரம் அலங்காந் சாத்திரம், இலக்கண விற்பம் - எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், முதலிய வகை வேறுபாடு உலகத்தியல்பு-லோகாசாரம். பிரபந்தவண்மை-பிரபந்தங்கள்செல்து உபகரித்தல் வண்மை-கொடை.

நற் சார்ப்பு.

காணரிய பெரியோர்கள் டெரிசனம் லபிப்பதே
கண்ணிணைகள் செய் புண்ணியங்
கருணையா யவர்சொன்மொழி கேட்டிட லபிப்பதிரு
காது செய்திடு புண்ணியம்
பேணியவர் புகழையே துதிசெய லபித்திடுதல்
பேசில்வாய் செய் புண்ணியம்

பிழையாம லவர்தமைத் தொழுதிட லபிப்பதுகை
பெரிது செய்திடு புண்ணியம்
வீணெறி செலாமலவர் பணிவிடை லபிப்பதுதன்
மேனி செய்திடு புண்ணியம்
விழைவொடவர் சொற்படி நடத்திட லபிப்பதே
மிக்க பூருவ புண்ணியம்
ஆணவ மெனுங்களை களைந்தறி வினைத்தந்த
வண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௭௩

(இ-ள்) காண் அரிய பெரியோர்கள் தரிசநம் லபிப்பதே-காண்பதற்கரிய பெரியோர்களுடைய தரிசனம்வாய்ப்பதே கண் இணைகள் செய்புண்ணியம் - இருகண்கள் செய்த புண்ணியமாகும், கருணையாய்-கிருபையுடனே, அவர் அந்தப் பெரியோர் சொல்-சொல்லுகிற, மொழி-சொற்களை, கேட்டிட லபிப்பதே கேட்கும்படி வாய்ப்பதே, இருகாதுசெய்திடு புண்ணியம் இரு செவிகள் செய்த புண்ணியமாகும், பேணி-விரும்பி, அவர் புகழையே-அவரது கீர்த்தியையே, துதிசெய லபித்திடுதல்-தோத்திரம்பண்ண வாய்ப்பது, பேசில்-சொல்லுமிடத்து, வாய் செய்புண்ணியம்-வாய்செய்த புண்ணியமாகும், பிழையாமல்-தவறாமல், அவர்தமை தொழுதிட லபிப்பது-அவர்களை வணங்க வாய்ப்பது, கை-கைகள், பெரிது செய்திடு புண்ணியம்-மிகவுஞ் செய்த பிண்ணியமாகும், வீண்நெறி சொல்லாமல்-வீண்வழியிற் சொல்லாமல், அவர் பணிவிடை லபிப்பது-அவ

ரது தொண்டுசெய்ய வாய்ப்பது. தன்மேனி செய்திடு புண்ணியம்-தன் உடம்புசெய்த புண்ணியமாகும், விழைவோடு-விருப்பத்துடனே, அவர்சொல்படி-அவரதுசொற்படியே, நடந்திட லபிப்பது - நடக்கவாய்ப்பதே, மிக்க- மேலான, பூருவ புண்ணியம்-பூர்வபுண்ணியமாகும் ஆணவம் என்னும் களை ஆணவமென்கிற களையை, களைந்து-பறித்து, அறிவினைதக்க- அறிவாகிய பயிரைக்கொடுத்த; அண்ணலை - பெரியோனை, அநமைமதவேள், எ-று.

தரிசனம்- காட்சி சேவை. லபித்தல்-கிடைத்தல், வீண்நெறி-பயனில்லாத மார்க்கம். விழைவு-விருப்பம். பூருவபுண்ணியம்-முற்சநசத்திற் செய்த புண்ணியம் என்றது புண்ணியப்பயனை, இடு என்பதற்கு வேறுபொருளின்மையால் கேட்டிட, தொழுதிட, நடந்திட. என்பவற்றை ஒருசொற்களாகக்கொண்டு, கேட்க தொழநடக்க எனப் பொருளுரைக்கலாயிற்று ஆணவம்-அகங்காரம்.

## பிறந்த நாளோடு வருகிற வாரபலம்.

சென்ம நக்ஷத்திரத் தாதிவா ரம்வரிற்
    றீரா தலைச்ச லுண்டாந்
திங்களுக் காகில்வெகு சுகபோ சனத்தினொடு
    திருமாதி னருளு முண்டாம்
வன்மைதரு மங்கார வாரம்வந் தாற்சிறிதும்
    வாராது சுகம் மென்பார்
மாசில்பல கலைபயில்வர் மேன்மைபாம் புந்தியெனு
    வாரத் துடன் கூடினால்

பிழையாம லவர்தமைத் தொழுதிட லபிப்பதுகை
 பெரிது செய்திடு புண்ணியம்
வீணெறி செலாமலவர் பணிவிடை லபிப்பதுதன்
 மேனி செய்திடு புண்ணியம்
விழைவொடவர் சொற்படி நடத்திட லபிப்பதே
 மிக்க பூருவ புண்ணியம்
ஆணவ மெனுங்களை களைந்தறி வினைத்தந்த
 வண்ணலே யருமை மதவேள
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
 ரறப்பளீ சுர தேவனே, எசு

(இ-ள்) காண் அரிய பெரியோர்கள் தரிசனம் லபிப்பதே-காண்பதற்கரிய பெரியோர்களுடைய தரிசனம்வாய்ப்பதே கண் இணைகள் செய்புண்ணியம் - இருகண்கள் செய்த புண்ணியமாகும், கருணையாய்-கிருபையுடனே, அவர் அந்தப் பெரியோர் சொல்-சொல்லுகிற, மொழி-சொற்களை, கேட்டிட லபிப்பதே கேட்கும்படி வாய்ப்பதே, இருகாதுசெய்திடு புண்ணியம் இரு செவிகள் செய்த புண்ணியமாகும், பேணி-விரும்பி, அவர் புகழையே-அவரது கீர்த்தியையே, துதிசெய லபித்திடுதல்-தோத்திரம்பண்ண வாய்ப்பது, பேசில்-சொல்லுமிடத்து, வாய் செய்புண்ணியம்-வாய்செய்த புண்ணியமாகும், பிழையாமல்-தவறாமல், அவர்தமை தொழுதிட லபிப்பது-அவர்களை வணங்க வாய்ப்பது, கை-கைகள், பெரிது செய்திடு புண்ணியம்-மிகவுஞ் செய்த பிண்ணியமாகும், வீண்நெறி சொல்லாமல்-வீண்வழியிற் சொல்லாமல், அவர் பணிவிடை லபிப்பது-அவ

ரது தொண்டுசெய்ய வாய்ப்பது. தன்மேனி செய்திடு புண்ணியம்-தன் உடம்புசெய்த புண்ணியமாகும், விழைவொடு-விருப்பத்துடனே, அவர்சொல்படி-அவரதுசொற்படியே, நடந்திட லபிப்பது - நடக்கவாய்ப்பதே, மிக்க- மேலான, பூருவ புண்ணியம்-பூர்வபுண்ணியமாகும் ஆணவம் என்னும் களை ஆணவமென்கிற களையை, களைந்து-பறித்து, அறிவினைத்தந்த- அறிவாகிய பயிரைக்கொடுத்த; அண்ணலை - பெரியோனை, அந்நமைமதவேள், எ-று.

தரிசனம்- காட்சி சேவை. லபித்தல்-கிடைத்தல். வீண்நெறி-பயனில்லாத மார்க்கம். விழைவு-விருப்பம். பூருவபுண்ணியம்-முற்சநசத்திற் செய்த புண்ணியம் என்றது புண்ணியப்பயனை, இடு என்பதற்கு வேறுபொருளின்மையால் கேட்டிட, தொழுதிட, நடந்திட. என்பவற்றை ஒருசொற்களாகக் கொண்டு, கேட்க தொழுநடக்க எனப் பொருளுரைக்கலாயிற்று ஆணவம்-அகங்காரம்.

## பிறந்த நாளோடு வருகிற வாரபலம்.

சென்ம நக்ஷத்திரத் தாதிவா ரம்வரிற்
 தீரா தலைச்ச லுண்டாக்
திங்களுக் காகில்வெகு சுகபோ சனத்தினொடு
 திருமாதி னருளு முண்டாம்
வன்மைதரு மங்கார வாரம்வந் தாற்சிறிதும்
 வாராது சுகம் மென்பார்
மாசில்பல கலைபயில்வர் மேன்மையாம் புத்திவெனும்
 வாரத் துடன் கூடினல்

நன்மைதரு குருவார மதுசேர்ந்து வரிலாடை
நன்மை யுடனே வந்திடும்
நாரிப ருடன்போக மிகவுமுண் டொருவெள்ளி
நல்ல வாரத்தில் வந்தால்
ஆண்மருவு பீடையுண் டாமென்பர் சனியனுக்
கமலனே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எஎ

(இ-ள்.) சென்ம நக்ஷத்திரத்து - ஜந்மநக்ஷத்திரத்தில், ஆதிவாரம்வரின்-ஆதிவாரம்வந்த தானல், தீராத அலேச்சல் உண்டாம்-ஒழியாத அலேச்சலுண்டாகும், திங்களுக்கு ஆகில் சோமவாரத்துக்கானல், வெகுசுக போசநந்தினெடு - மிகுசுக ஜநம்துடன், திருமாதின் அருளும் உண்டாம்-இலக்குமியின் கிருபையுமுண்டாகும் வன்மைதரும் அங்காரவாரம் வந்தால் வலிமையைத்தருகிற மங்களவாரம் வந்தால். சிறிதும்-கொஞ் சமும் சுகம்வராது என்பர் சுகம் உண்டாகாதென்பர். மேன் மைஆம்-மேன்மையாகிய, புத்தி என்னும் வாரத்துகின் கூடி ஞல்-புதவாரத்தோடு சேர்ந்தால், மாசு இல்-குற்றமில்லாத, பலகலேபயில்வர்-பலநூல்களேயும் கற்பார்கள். நன்மைதரு-நன் மையைத்தருகிற. குருவாரம் சேர்ந்துவரில்-குருவாரம் சேர்ந் துவந்தால், ஆடை-வஸ்திரம். நன்மையுடனே வந்திடும் - நன் மையோடும்வரும், ஒரு-ஒப்பற்ற, வெள்ளிநல்வாரத்தில் வந் தால்-சுக்கிரனென்கிற நல்லவாரத்தில் வந்தால், நாரியருடன் மாதரோடு, மிகவும் போகம் உண்டு-மிகவும் சுகாநுபவமுண்

டாகும், சனியனுக்கு - சனிவாரத்துக்கு, அல்மருவு அந்தகா சம்பொருந்திய, பிடை உண்டாம் என்பர் - பீடையுண்டாகு மென்று சொல்லுவர், அமலனே-பரிசுத்தனே, அருமைமத வேள். எ-று.

சுகபோசனம்-சௌக்கியமான உணவு. திருமாதினை நள் என்றது. செல்வத்தை. குரு-வியாழம்.

இதனை யுடையவர்க் கீது வில்லையெனல்.

பொன்னாசை யுள்ளவர்க் குறவேது குருவேது
பொங்குபசி யுள்ள பேர்க்குப்
போதமே சுசியேது ருசியேது மயல்கொண்டு
பொதுமாதர் விழி வலையிலே
எந்நாளு மலைபவர்க் கச்சமொடு வெட்கமே
தென்றென்று முறு கல்வியே
விச்சையுள பேர்க்கதிக சுகமேது துயிலேது
வெளிதா யிருந்து கொண்டே
பன்னாளு மலைபவர்க் கிகமேது புகழேது
பாரி லொருவர்க் கதிகமே
பண்ணியிடு மூடருக் கறமேது மறலோர்
பகாசிரய மொன் றுளதுகாண்
அன்னவருகரி யுரித்தணிபு மெய்யனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எஅ

(இ-ள்.) பொன் ஆசை உள்ளவர்க்கு-பொன் விருப்பமுள்ளவர்களுக்கு, உறவு ஏது குரு ஏது-உறவில்லை குருவில்லை, பொங்கு பசி உள்ளோர்க்கு-மிகுந்தபசியுள்ளபேர்களுக்கு, போத மிகவும், சுசியேது ருசியேது-சுத்தியில்லை சுவையில்லை. மயல் கொண்டு-காமமயக்கங்கொண்டு, பொதுமாதர் விழிவலையிலே-பொதுமாதராது கண்வலையிலே யகப்பட்டு, எந்நாளும் அலைபவர்க்கு-எக்காலத்திலும் அலைந்துகொண்டிருப்பவர்களுக்கு, அச்சமொடு வெட்கம் ஏது அச்சத்தோடு நாணவில்லை, என்றென்றும்-எப்பொழுதும், உறுகல்வியிலே-மிகுந்த கல்வியின் மீது, இச்சை உள்ளபேர்க்கு-விருப்பமுள்ள பேர்களுக்கு, அதிக சுகம் ஏது துயில் ஏது-அதிக சுகமில்லை தூக்கமில்லை, எளிதாய் இருந்துகொண்டே, எளிய நிலையிலிருந்துகொண்டே, பலநாளும் அலைபவர்க்கு-பலநாளும் அலைவோருக்கு, புகழ் ஏது புகழ் ஏது-இகழ்ச்சியில்லை புகழ்ச்சியில்லை, பாரில் உலகத்தில், ஒருவர்க்கு-ஒருவருக்கு அதிகமே பண்ணியிடும் மூடருக்கு-(மிகையே) குற்றமேசெய்கிற மூடர்களுக்கு, பறம் அல்லால் அறம் ஏது-பாவமல்லாமல் புண்ணியமில்லை, பகர்-சொல்லப்பட்ட நிரயம் ஒன்று உள்ளது-நரகமும் ஒன்றுண்டு, அந்நாள் ஒரு-இருட்டும் நாளுப்படி வந்த, கரி உரித்து அணியும்-யானையையுரித்து (அதன்தோலை) தரித்துக்கொண்ட, மெய்யனே-திருமேனியையுடையவனே, அமலனே-பரிசுத்தனே, அருணமமதவேள். எ-று.

ஏது என்னும்வினா எதிர்மறையாய் இல்லையென்னும் பொருளில்வந்தது. பொதுமாதர்-வேசையர். தமது கணவர்க்கே

யன்றி மற்றையர்க்குப்போகும் கோடாத குலமாதர் போல அதம்மை நாடிவந்த பொருள் கொடுப்போ ரெல்லாருக்கும் பொதுவாய் போகம் கொடுப்பவராதல் வேசையர்க்குப் பொது மாதர் எனப்பெயர்வந்தது.

மழைநாட் குறிப்பு.

சித்திரைத் திங்கள்பதின் மூன்றுக்கு மேனல்ல
சீரான பரணி மழையுந்
தீதில் வைகாசியிற் பூரணை கழித்தபின்
சேரு நாலா நாளியினில்
ஒத்துவரு மழையும்மவ் வானியிற் றேய்பிறைபி
லோங்கு மேகா தசியினி
லொளிர்பரிதி விழ்பொழுதின் மந்தார மும்மழையு
முண்டா யிருந் தாடியில்
பத்திவரு தேதிபைந் தினிலாதி வாரமும்
பகரு மாவணி மூலநாள்
பரிதியு மறைந்திடக் கனமழை பொழிந்திடப்
பாரில்வெகு விளைவு முண்டாம்
அத்தனை பைங்குவளை மாலையணி மார்பனை
மண்ணலெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. எக

(இ-ள்.) சித்திரை திங்கள்-சித்திரைமாசம். பதின்மூன்றுக்குமேல் - பதின்மூன்றுக்குமேலே, நல்ல - நன்மையாகிய, சீர் ஆன சிறப்பாகிய பரணிமழையும்பரணி நக்ஷத்திரத்தில்

பெய்கிறமழை, தீதுஇல்-குற்றமில்லாத, வைகாசியில்-வைகாசிமாசத்தில். பூரணை கழிந்தபின்-பௌர்ணமி கழித்தபிறகு, சேரும் நாலாம் நாளினில்-வருகிறநான்காவது நாளில், ஒத்து வரும் மழையும்-ஒத்துவருகிற மழையும், ஆ ஆனியில்-அந்த ஆனிமாசத்தில், தேய்பிறையில் - அமரபக்ஷத்தில், ஓங்கும் ஏகாதசியினில்-உயர்ந்த ஏகாதசியில் ஒளிர் பரிதி வீழ்பொழுதில்-விளங்குகின்ற சூரியன் அஸ்தமிக்கும்போது மந்தாரமும் மழையும் உண்டாயிருந்து-மந்தாரமும் மழையுமுண்டா யிருந்து, ஆடியில்-ஆடிமாசத்தில். பத்திவருதேதி ஐந்தினில்-வரிசையாய் வருகிற தேதிஐந்தில், ஆதிவாரமும் - ஆதிவாரமாகவும் பகரும் ஆவணி-சொல்லப்பட்ட ஆவணிமாசத்தில். மூலநாள்-மூலநக்ஷத்ரத்தில் பரிதியும்மறைந்திட-சூரியனும் மறைந்துபோகும்படி, ககனம் மழைபொழிந்திட - மேகமான்துமழையைச்சொரிய, (அதனால்) பாரில்-பூமியில், வெகுவிளைவும் உண்டாம்-வெகுவிளைச்சலு முண்டாகும், அத்தனே-கடவுளே, குவளை மாலை அணி-பசிய குவளை மலர்மாலையைத் தரித்த மார்பன் ஆம் -மார்பையுடையவனாகிய, அண்ணல் - பெருமை பொருந்திய, எமது அருமைமதவேள். எ-று.

திங்கள்-மாசம். ககனம் - ஆகாயம். அது இடவாகுபெயராய் அங்குள்ள மேகத்தை யுணர்த்திற்று, குவளை-முதலாகுபெயர்.

## இருந்து முதவாமை.

சமயத்தி லுதவாத நிதியமேன் மிக்கதுயர்
சார்பொழு திலாத கிளையேன்

சபைமுகத் துதவாத கல்வியே யெதிர்வரு
சமரத் திலாத படையேன்
விமலனுக் குதவாத பூசையே யனுதினம்
வேளைக் கிலாத சுடரேன்
வெம்பசிக் குதவாத வன்னமே நீடுகுளிர்
வேளைக் கிலாத கலையேன்
தமதுதளர் வேளைக் கிலாதவோர் மனைவியேன்
சரசத் திலாத நகையேன்
சாமரண காலத்தி லுதவாத புதல்வனேன்
றரணிமீ தென்பர் கண்டாய்
அமரர்க்கு முனிவர்க்கு மொருவர்க்கு மெட்டாத
வாதியே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அ0

(இ-ள்.) தரணிமீது-பூமியின்மேல், சமயத்தில் உதவாத சமயத்தில் உதவியாகாத, நிதியம் ஏன் - திரவியம்யாதுக்கு, மிக்கதுயர் சார்பொழுது - மிகுந்த துன்பம் வந்தபோது, இல்லாத-உதவாத, கிளை ஏன்-உறவுயாதுக்கு, சபைமுகத்து உதவாத-சபையினிடத்தே உதவாத, கல்வி ஏன் - கல்வியாதுக்கு எதிர்வரு சமரத்து இல்லாத - பகைவன்வருகிற போர்க்களத்தில் உதவாத, படை ஏன்-சேனையாதுக்கு, விமலனுக்கு உதவாத-நிர்மலனாகிய சிவபிரானுக்கு ஏற்காத, பூசை ஏன் - பூசையாதுக்கு, நாளும்-நாள்தோறும், இருள் வேளைக்கு இல்லாத இருட்டுக்காலத்தில் உதவாத, சுடர் ஏன்-தீபம்யாதுக்கு, வெம்

பசிக்கு உதவாத-கடும்பசிக்கு உதவாத, அன்னம் ஏன்-சோறு யாதுக்கு, நீடுகுளிர் வேளைக்கு இல்லாத-பெரியகுளிர்காலத்தி லுதவாத, கலை ஏன் - ஆடையாதுக்கு, தமது தளர்வேளைக்கு இல்லாத - தமது தளர்ச்சிக்காலத்தில் உதவாத, ஓர்மனைவி ஏன்- ஒருமனையாள் யாதுக்கு, சமயத்து இல்லாத - சமயவேளை யில் இல்லாத, நகை ஏன் - சிரிப்பு யாதுக்கு, சாம்மரணகாலத் தில் உதவாத, புதல்வன் ஏன்-புத்திரன்யாதுக்கு, என்பர்-என் றுசொல்லுவர் (பெரியோர்), அமரர்க்கும் - தேவர்களுக்கும் முனிவர்க்கும்-முனிவர்களுக்கும், ஒருவர்க்கும்-வேறொருவர்க் கும், எட்டாத-எட்டவொண்ணாத, ஆதியே- முதல்வனே, அரு மைமதவேள். எ-று.

நிதியம்-புதையல் எனினும் பொருந்தும். உறவைக் கிளை யென்றது உவமையாகுபெயர். சபைமுகத்து என்பதில் முகம் ஏழனுருபு. சமரம்-போர். ஏன் என்றவினா பயனில்லை யென் னும் பொருளைக் குறித்தது. என்பர் என்னும் பயனிலைக்கு எழுவாயாகிய பெரியோர் என்பது வருவிக்கப்பட்டது.

## மறையோர் சிறப்பு.

ஓராறு தொழிலையுங் கைவிடார் சௌசவிதி
யொன்று தப்பாது புரிவா
ருதயாதி யிற்சென்று நீர்படிகு வார்கால
மொருமூன்றி னுக்கு மறவா
தாராய்ந்து காயத்ரி யதுசெபிப் பார்நாளு
மதிதி பூசைகள் பண்ணுவார்

யாகாதி கருமங்கள் மந்த்ரகிரி யாலோப
மின்றியே செய்து வருவார்
பேராசை கொண்டிடார் வைதிகநன் மார்க்கமே
பிழையா திருக்கு மறையோர்
மெய்யெனப் பொய்யருகி வர்மகிமை யெவர்களும்
பேசுதற் கரிதரிது காண்
ஆரார் நெடுஞ்சடில வபலனை யெனையாளு
மண்ணாமலை யருமை மதலைவ
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பதீ சுரதேவனே. அக

(இ-ள்.) ஓர் ஆறுதொழிலையும் கைவிடா - ஒப்பற்ற அறு தொழில்களையும் கைவிடமாட்டார்கள், சௌசவிதி ஒன்று தப்பாது புரிவார் - சௌசவிதி ஒன்றையாயினும் தவறுமற் செய்வார்கள், உதயாதியில்சென்று நீர்படிகுவார்-இதயாதியிற் போய் நீரில்முழுகுவார்கள், காலம் ஒருமூன்றினுக்கும்-காலம் ஒருமூன்றிலும், மறவாது ஆராய்ந்து - மறவாமல் ஆராய்ந்து காயத்திரியது செபிப்பார்-காயித்ரி மந்திரத்தைச் செபிப்பார் கள், நாளும் - நாள்தோறும், அதிதிபூசைகள் பண்ணுவார்-அதிதிபூசைகளைச் செய்வார்கள், யாகாதிகருமங்கள் -யாகமுதலிய சற்கிரியைகளை, மந்த்ரக்ரியா லோபம் இன்றியே செய்து வருவார் - மந்திரத்திலும் கிரியையிலும் குறைவில்லாமலே செய்துவருவார்கள், பேராசை கொண்டிடார்- (எந்தப்பொருளினும்) பேராசையையார்கள், (இப்படி) வைதிகம்-வைதிகமாகிய நல்மார்க்கமே-நன்னெறியின்கண்ணே, பிழையாது இருக்கும்

மறையோர் - தவருமலிருக்கிற வேதியர்கள், பெய் என - பெய்யென்று சொல்லுதலும், முகில்பெய்யும் - மேகம் மழையைச் சொரியும், (ஆதலால்) அவர்மகிமை - அவர் பெருமையானது, எவர்களும் - யாவரும், பேசுதற்கு-சொல்லுதற்கு, அரிது-மிகவும் அரிதாகும், ஆர் ஆர்-ஆத்திமலர்மாலை பொருந்திய; நெடுஞ்சடிலம்-நீண்ட சடையையுடைய அமலனே-பரிசுத்தனே என்னை ஆளும் அண்ணலே-என்னையாண்டருளுகிற பெரியோனே அருமைமதவேள். எ-று.

ஓராறு தொழில் என்றது ஓதல் - ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் என்பவற்றை. படிதல் - மூழ்குதல் காலமொரு மூன்று என்றது காலை மாலை பகல் என்பவற்றை அதிதி-தேசாந்தரி. விருந்தாளி லோபம்-குறைவு. வைதீகம் வேதசம்பந்தம். அரிது அரிது என்ற அடுக்கில் முன்னது மிகுதிப்பொருளைத் தரவந்தது.

## அரசர் சிறப்பு.

மநுநீதி முறைமையும் பரராசர் கொண்டாட்
வருமதிக ரண வீரமும்
வாள்விஜய மொடுசரச சாதன விசேஷமும்
வாசி மதகரி யேற்றமும்
கனமா மமைச்சரும் பலமான துர்க்கமுங்
கைகண்ட போர்ப் படைஞருஞ்
சுஜாத பதாதியுந் துரகப்ர வாகமுங்
கால தேசங்க ளவையும்

இனிதா யறிந்தஸ்தா னபதி ளொடுசமர்
　　இளையாத தள கர்த்தரு
மென்றும்வற் றாததன தானிய சமுத்திரமு
　　மேற்றமுள குடி வர்க்கமும்
ஆனவொரு மெச்சலிங் கிவையிலா முடையபே
　　ரரசரா மருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
　　ரறப்பளீ சுர தேவனே. அஉ

(இ-ள்.) மனுநீதி முறையையும் - மநுநீதியின் கிரமமும், பரராஜர் கொண்டாடவரும்-வேற்றரசர் கொண்டாடப்படியுண்டான, அதிகாரணவீரமும் - மிகுதியாகிய போர்வீரத்தன்மையும், வாள்விசயவமாடு- வாட்போரில் வெற்றியோடு, சரசசாதகவிசேஷமும் - சரசமான சாதன விசேஷங்களும், வாசிமதகரி ஏற்றமும், குதிரையேற்றம் மதயானை யேற்றம் என்பனவும் கனம் ஆம் அமைச்சரும்-மேன்மையாகிய மந்திரிகளும், பலம் ஆன துர்க்களும்-உறுதியாகிய அரணும், கஜரதபதாதியும்-யானைதேர்காலால் முதலியவும், துரகப்ரவாகமும்-குதிரைவெள்ளமும், காலதேசங்கள் எவையும் - காலதேசங்கள் யாவும், இனிதாய் அறிந்த-நன்றாயறிந்த, ஸ்தானபதிகளொடு-தானபதிகளுடனே, சமர்க்கு இளையாத தளகர்த்தரும் - போருக்கு இளைக்காத தளகர்த்தர்களும், என்றும்-எக்காலத்திலும், வற்றாத-வடியாத, தனதானியசமுத்திரம் - தனதானியக்கடலும், ஏற்றம் உள்ள-மேன்மையுள்ள, குடிவர்க்கமும்- குடித்தொகையும் (ஆகிய,) இங்கிவையெல்லாம் - இவையாவும், ஆனவொரும்

மெச்ச- எல்லாரும்மெச்சும்படி, உடையபேர்கள் அரசர் ஆம் அரசராவார்கள், அருமைமதவேள். எ-று.

மனுநீதி மனுவினாற் செய்யப்பட்ட நீதி சாஸ்திரங்கள் அவை மனுதர்ம சாஸ்திரம் மனுஸ்மிருதி முதலியன. சாதக விசேஷம் - பழக்கமிகுதி. ஏற்றம்-ஏறுதல். (சவாரிசெய்தல்) அரண்மதிலரண்-நீரரண், காட்டரண், மலையரண் என நால்வகைப்படும். அரண் - காவல் - ப்ரவாகம் மிகுதிப் பொருளில் வந்தது.

## வைசியர் சிறப்பு.

நீள்கடல் கடந்திடுவர் மலையாள மும்போவர்
நெடிது தூரந் திரிந்து
நினைவுதடு மாறார்கள் சலியார்கள் பொருடேடி
நிலத் தாசு புரியும்
வாருழவ ரைத்தமது கைவசஞ் செய்வார்கள்
வருமிடம் வராத விடமும்
மனதையு மறிந்துதனி யொன்றுநா றாயிட
வளர்ப்பர்வரு நாலு நாலைக்கும்
ஆள்விடுவர் மலிவுகுறை வறிவிசா ரித்திடுவ
ரளவில் பற்பல சரக்கு
மமைவுறக் கொள்வர்விற் பார்கணக் கதில்ஞாபக
மறவிடார் செலவு வரிலோ
ஆளியொத் தேமலையி னளவுங் கொடுத்திடுவ
ரருள்வைசிய ரருமை மதவேள்

ளனு தினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௮௨

(இ-ள்.) நீள்கடல் கடந்திடுவர் நெடியகடலைக்கடந்து போவார்கள், மலையாளமும்போவர் - மலையாள தேசத்துக்கும் போவார்கள், நெடிதுதூரம் திரிந்தும் - நெடுந்தூரம்போய்த் திரிந்தும், நினைவு தடுமாறார்கள்-நினைவு தடுமாறமாட்டார்கள் சலியார்கள்-சலிக்கமாட்டார்கள், பொருள்தேடி-பொருள்சம்பாதித்து, நீள்நிலத்து-பெரியபூமியில், அரசுபுரியும் - அரசாட்சி செய்கிற, வாள் உழவரை-வேந்தரை, தமதுகைவசம் செய்வார்கள், தமதுகைவசப் படுத்திக்கொள்வார்கள், வரும் இடம் வராத இடமும்-வருமிடத்தையும் வராத இடத்தையும், மனதையும்-கருத்தையும், அறிந்து - அறிந்துக்கொண்டு, உதவி-(அவர்களுக்கு வேண்டியவற்றை) உதவிசெய்து, ஒன்றுநூறு ஆயிடவளப்பர் - ஒன்றே நூறாகும்படி விருத்தி செய்வார்கள், வருதுலைதுலைக்கும்-அதிகமான தோன தூரங்களுக்கும், ஆள் விடுவர்-ஆளனுப்புவார்கள், (அனுப்பி அவ்விடங்களில்) மலிவு குறைவது விசாரித்திடுவர் - மலிவும் குறைவும் விசாரித்துக் கொள்வார்கள். அளவு இல் - அளவில்லாத, பற்பல சரக்கும்-பலபலசரக்குகளையும், அமைவுற - அவசரப்படாமல் (அமைதியாக) கொள்வர் விற்பார் - வாங்குவார்கள் விற்பார்கள், கணக்க இல்-கணக்கில், அணுவும் அறவிடா - அணுவாயினும் நழுவ விடார்கள்; செலவுவரினோ-செலவுநேரிட்டாலோ, ஆளி ஒத்து சிங்கத்தையொத்து, மலையினளவும் கொடுத்திடுவர்-மலையளவு பொருளையாயினும் கொடுத்துவிடுவார்கள், (இப்படிக்கெல்லாம்

செய்பவர்யார் என்றால்) அருள்வைசியர்-கருணையுள்ளவைசியரே அருமைமதவேள். எ-று.

மலையாளமும் என்றவும்மையால் போதற்கருமை தோன்றுகின்றது தடுமாறுதல்-கலங்குதல். சலித்தல் - வெறுத்தல் அணு - மிகச்சிறியபாகம்,

## வேளாளர் சிறப்பு.

பசனாதி கருமமுந் தப்பாமல் வேதிய
ரியற்றிநல் லோர் பெறுவதும்
இராச்யபா ரஞ்செய்து முடிமனனர் வெற்றிகொண்
டென்றுநல் லோர் பெறுவதும்
வசனாதி தப்பாது தனதானி யந்தேடி
ளசியர்நல் லோர் பெறுவதும்
மற்றுமுள பேரெலா மிடியென் றிடாததிக
வளமைபெற் றோர் பெருவதும்
திசைதோறு முள்ளபல தேவா லயம்பூசை
செய்யநல் லோர் பெறுவதுஞ்
சீர்கொண்ட பைங்குவளை மாலைபுனை வேளாளர்
செய்யு மேழிப் பெருமைகாண்
அசையாது வெள்ளிமலை தனின்மேவி வாழ்கின்ற
வண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அச

(இ-ள்.) வேதியர் - மறையோர் யசநாதி கருமமும் - யஜநமுதலிய அறுதொழில்களையும், தப்பாமல் இயற்றி - தவறாமற்செய்து, நல்ஏர் பெறுவதும் - நல்ல அழகை யடைந்திருப்பதும் முடிமன்னர் - முடிவேந்தர், இராச்சியபாரஞ் செய்து - ராஜ்யபாரத்தைத் தாங்கி, வெற்றிகொண்டு - ஜயமடைந்து, என்றும்-எக்காலத்திலும், வசியர்-வைசியர், வசனாதி தப்பாது வாக்குமுதலானவைகள் தவறாமல், தனதானியந்தேடி - தனதானியங்களைச் சம்பாதித்து, நல்ஏர் பெறுவதும்-நல்ல அழகையடைந்திருப்பதும், மற்றும்உள்ள பேரெல்லாம் - இன்னமும் உலகத்திலுள்ள பேரெல்லாரும், மிடிஎன்றிடாது - வறுமை என்றுசொல்லாமல், அதிகவளமைபெற்று ஏர்பெறுவதும்-மிகுந்த செல்வத்தைபடைந்து அழகுபெற்றிருப்பது, திசைதோறுஉள்ள - எல்லாத்திசைகளிலுமுள்ள, பலதேவாலயம் - பலதேவாலயங்கள், பூசைசெய்ய - உலகத்தார்பூசைசெய்யும்படி நல்ஏர்பெறுவதும் நல்ல அழகை யடைந்திருப்பதும் (ஆகிய இவையெல்லாம்) சீர்கொண்ட - சிறப்புப்பெற்ற, பைகுவளைமாலைபுனை-பசியகுவளைமலர்மாலையணிந்த, வேளாளர் செய்யும்-வேளாளர் செய்கிற, மேழிபெருமை-மேழியின் பெருமையாலுண்டாவனவேயாம், அசையாது - அசையாமல், வெள்ளிமலைதனில்-வெள்ளிமலைமேல், மேவிவாழ்கின்ற-பொருந்தி வாழ்கின்ற, அண்ணலே-பெரியோனே, அருமை மதவேள், எ-று.

யசநாதிகருமம் என்றது வேட்டல்முதலிய அறுதொழில்களை: அவை வேட்டல், வேட்பித்தல் ஓதல் ஓதுவித்தல் ஈதல், ஏற்றல் என்பனவாம், இவற்றையே முறையே யஜநயாஜந

அத்யயந அத்யாபந தாநப்ரதிக்ரகஷம் என்பர் வடநூலார் வசநாதி-வாக்கு தொழில் முதலியவை, வசியர்-வணிகர் பலதேவாலயம் என்றமையால் சிவாலயம் விஷ்ணுவாலயம் யாவுங்கொள்க ஆலயம்-கோயில் மேழி-கலப்பை,

## தானாதிபதி மந்திரி சேனாதிபதிகளி னியல்பு.

தன்னரசன் வலுமையும் பாராச ரெண்ணமுஞ்
சாலமேல் வரு கருமமமுந்
தானறிந் ததிபுத்தி யுத்தியுண் டாயினோன்
றானாதி பதியாகுவான்
மன்னவர் மனத்தையும் காலதே சத்தையும்
வாழ்குடி படைந் திறமையும்
மந்திரா லோசனையு மெல்லா மறிந்தவன்
வளமான மதி மந்திரி
துன்னிய படைக்குணங் கரிபரி பரீகைஷயே
சூழ்பகைவர் புரி சூழ்ச்சியுந்
தோலாத வெற்றியுந் திடமான சித்தியுள
சூரனே சேனாதி பன்
அன்னையினு நல்லமலை மங்கைபங் காளனே
யமலனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அ௫

(இ-ள்.) தன்அரசன் வலுமையும் - தன் அரசனது வலியும், பாராஜர் எண்ணமும் - வேற்றரசர் கருத்தும், சால-மிக

வும் மேல்வரு கருமமும் - இனிமேல் வரப்போகிற காரியமும் தான்அறிந்து - தான்தெரிந்துக்கொண்டு, அதிபுத்தி யுத்தி உண்டாயினோன் - அதிக புத்தியுத்திக ளுண்டாயிருப்பவன், தாராதிபதி ஆகுவான் - தாராதிபதியாவான், ' மன்னவர் மனத்தையும் - அரசர் மனத்தையும், காலதேசத்தையும் - காலதேசங்களையும், வாழ்-வாழ்கின்ற, குடிபடை திறமையும்-குடிபடைகளின் திறமையையும், மந்திராலோசனையும் - மந்திராலோசனையையும், எல்லாம் - மற்றெல்லாவற்றையும். அறிந்தவன்-அறிந்திருப்பவன், வளம் ஆனமதிமந்திரி-வளமாகிய மதிமந்திரியாவான், துன்னிய-நெருங்கிய, படைக்குணம் - சேனையின் குணம், கரிபரிபரிக்ஷை-யானை குதிரைகளின்பரிக்ஷை-சூழ்வளைந்த, பகைவர்-பகைவரானவர், புரி-செய்கிற, சூழ்ச்சியும்-ஆலோசனையும், தோலாத வெற்றியும்-தோற்காத ஜெயமும், திடம்ஆன - உறுதியாகிய, சித்தி - காரியசித்தியும், உள்ள - உடைய, சூரனே-சூரனே, சேனாதிபன்-சேனாதிபதியாவான், அன்னையிலும் நல்ல-தாயினுஞ் சிறந்த, மலைமங்கை பங்களனே-பார்வதிபாகனே, அன்பனே- பரிசுத்தனே, அருமைமதவேள். எ-று.

காலதேசம்-காரியஞ் செய்யத்தகுந்த காலமும் இடமும் மந்திராலோசனை-ரஹஸ்யாலோசனை, வளம்-அறிவின் வளம் மதிமந்திரி-புத்திசாலியாகிய மந்திரி சித்தி-பலிதம்.

## இராயச கருணீகர் சிறப்பு.

வருமோலை யுத்தரத் தெழுதிவரு பொருளினல்
வரவிடுப் போன் மனதையும்

மருவிவரு கருமமுந் தேசகாலத்தையும்
வருகாத லாமலக மாய்
விரைவா யறிந்தரச ரெண்ணிலெண் ணினையள
விடவெழுத வாசிக்கவும்
வெற்றிகொண்டே பெரிய புத்தியுடை யோன்புவியின்
மேன்மை ராயச காரனும்
சருவா யறிந்துதொகை யீராறு நொடியினிற்
கடிதேற் றிடக் குறைக்கக்
கடுகையொரு மலையாக மலையையொரு கடுகுமாய்க்
காட்டுவோன் கருணீக னால்
அருவாகி யுருவாகி யொளியாகி வெளியாகு
மண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அகூ

(இ-ள்.) வரும் ஓலை உத்தருத்து-வருகிற ஓலைப்புறத்தில் எழுதி வருபொருளினால்-எழுதிவருகிற அர்த்தத்தினால், வரவிடுப்போன் மனதையும்-வரவிடுவோனுடைய மனக்கருத்தையும் மருவிவருகருமமும்-பொருந்திய வருகிற கருமத்தையும், தேசகாலத்தையும்-தேச காலங்களையும், வருகாதலாமலகமாய்-உண்டான கரதலாமலகமாக, விரைவாய் அறிந்து-சீக்கிரமாயறிந்துகொண்டு, அரசர்-அரசருடைய, எண்ணில்-மனத்தினுள்ள, எண்ணினை-எண்ணத்தை. அளவிட - அளவிடவும், எழுதவாசிக்கவும் - எழுதவும வாசிக்கவும், வெற்றிகொண்டு-ஜயங்கொண்டு, பெரியபுத்தி யுடையோன்-பேரறிவை யுடைய

வன், மேன்மை-மேன்மையுள்ள, சாயசகாரன் ஆம்-சாயசகார ஞவான், கருவாய் அறிந்து-நுட்பமாயறிந்து, தொகை - தொகையை, ஈராறுகோடியினில்-பன்னிரண்டு கோடிப்பொழுதில் கூடிது எற்றிட குறைக்க - விரைவா யேற்றவும் குறைக்கவும், கடுகை ஒரு மலைபாக-கடுகையொரு மலைபாகவும். மலையை ஒரு கடுகுமாய்-மலையை ஒரு கடுகாகவும், காட்டுவோன்-காண்பிப்ப வன், கருணீகன் ஆம். கருணீஞவான், அருஆகி - அருவமாகி யும். உருஆகி-உருவமாகிய, ஒளிஆகி-பிரகாசமாகியும், வெளி ஆகும்-வெளியுமாகிற, அண்ணலே-பெரியோனே அருமைமத வேள். எ-று.

உத்தரம்-பின்புறம். பொருள்-அர்த்தம். வரவிடுப்போன் அனுப்புகிறவன். கருமம் - காரியம். கரதலாமலகம் என்பதை கரதலம் ஆமலகம் எனப்பிரித்து, கைத்தலத்திலுள்ள நெல் லிக்கனியெனப் பொருளுரைத்துக்கொள்க. கரு-நுட்பம், எற் றுதல்-அதிகப்படுத்துதல். கருணீகன்-கணக்கன்.

## கோபத்தின் கொடுமை.

கோபமே பாவங்க ளுக்கெலாந் தாய்தந்தை
கோபமே குடி கெடுக்குங்
கோபமே யொன்றையுங் கூடிவர வொட்டாது
கோபமே துயர் கொடுக்கும்
கோபமே பொல்லாது கோபமே சீர்கேடு
கோபமே யுற வறுக்குங்

கோபமே பழிசெயுங் கோபமே பகையாளி
கோபமே கருணை போக்கும்
கோபமே யீனமாங் கோபமே யெவரையுங்
கூடாம லொருவ னுக்குங்
கோபமே மறலிமுன் கொண்டுபோய்த் தியநர
கக்குழியி னிற் றள்ளுமால்
ஆபத் தெலாந்தவிர்த் தென்னையாட் கொண்டருளு
மண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினிலை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அ௭

(இ-ள்.) கோபமே-கோபந்தானே, பாவங்களுக்கு எல்லாம்-தீவினைகளெல்லாவற்றுக்கும் தாய்தந்தை-தாயும் தந்தையுமாகும், கோபமே-கோபந்தானே-குடிகெடுக்கும்-(தன்னையுடையவனுடைய) குடும்ப விருத்தியை அழித்துவிடும். கோபமே-கோபந்தானே, ஒன்றையும் கூடி வரவொட்டாது-(தன்னையுடையவனுக்கு) ஒரு காரியத்தையும் கைகூடி வரவொட்டாது, கோபமே-கோபந்தானே, துயர்கொடுக்கும் (தன்னை யுடையவனுக்கு) துன்பத்தை யுண்டாக்கும், கோபமே - கோபந்தானே, பொல்லாது-கொடியது, கோபமே-கோபந்தானே, சீர்கேடு (தன்னையுடையவனுடைய) புகழையழிப்பது, கோபமே-கோபந்தானே, உறவு அறுக்கும்-(தன்னை யுடையவனது) பந்து ஜனங்களை அவனை விட்டு நீங்கச்செய்யும். கோபமே-கோபந்தானே, பழிசெய்யும் - (தன்னையுடையவனுக்கு) பழிப்பை யுண்டாக்கும், கோபமே-கோபந்தானே பகையாளி-(தன்னை

யுடையவனுக்கு) விரோதியாகும், கோபமே-கோபந்தானே, கருணைபோக்கும்-(தன்னை யுடையவனிடத்தில்) கிருபையைக் கெடுக்கும்: கோபமே கோவந்தானே, ஈனம் ஆம்-(தன்னை யுடையவனுக்கு) இழிவைத் தருவதாகும், கோபமே-கோபந்தானே, எவரையும் கூடாமல்-(தன்னை யுடையமனோடு) ஒருவரையும் சேராமற்செய்து, ஒருவன் ஆக்கும்-(அவனை) தனியனாகச்செய்யும், கோபமே-கோபந்தானே, மறலிமுன் கொண்டுபோய் - (தன்னைக்கொண்டே உயிரை மறுமையில் யமனுக்கெதிரேகொண்டுசெலுத்தி, தீய-கொடிதாகிய, நரகக்குழியினில் தள்ளும்-நரகக்குழியிலே தள்ளிவிடும். ஆபத்து எல்லாம் தவிர்த்து-(என்) துன்பங்களெல்லாவற்றையும் நீக்கி, என்னை ஆட்கொண்டருளும்-என்னையடிமைகொண்டருளுகின்ற அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள். எ-று.

மறல்-கொடுமை, அதனை யுடையவனாதலால் யமனுக்கு மறலியென்னும் பெயர்வழங்கும், பகையாளி - பகைத்தன்மையை ஆள்பவன். (சத்துரு)

பல் துறை.

தான்புரி தவத்தையுங் கொடையையும் புகழுவோர்
தங்களுக் குவை தழைவுறூ
சற்றுமறி வில்லாம லந்தணரை நிந்தனைசெய்
தயவிலோ ராயுள் பெருகார்
மேன்படு நறுங்கலவை மாலைதயிர் பால்புலால்
வீடுநற் செந்நெ லிவைகள்

வேறொருவர் தந்திடினு மறுமொழி யறிந்தபேர்
விலைகொடுத் தேகொள்ளு வார்
தேன்கனி கிழங்குவிற கிலையிவை யனைத்தையுந்
தீண்டரிய நீச ரெனினுஞ்
சீர்பெற வளிப்பரேல் விகழாது கைக்கொள்வர்
சீலமுடைய யோரென்ப ரால்
ஆன்கொடி யுயர்த்தவுமை நேசனே யீசனே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௮௫

(இ-ள்.) தான்புரிதவத்தையும் கொடையையும்) தாம்செய்த தவத்தையும் தானத்தையும், புகழ்வோர் தங்களுக்கு-தாமே புகழ்ந்து சொல்லிக்கொள்வோர்களுக்கு' அவை-அந்தத் தவமும் தானமும் தழைவுறா-விருத்தியடையமாட்டா, சற்றும் அறிவு இல்லாமல்-சிறிதும் விவேகமில்லாமல் அந்தணரை-பிராமணரைநிந்தனைசெய்-நிந்திக்கிற தயவு இல்லோர்-தயையில்லாதவர்கள், ஆயுள்பெருகார்-ஆயுள்விருத்தியை யடையமாட்டார்கள் மேம்படு-மேன்மைபொருந்திய. நறுசுவை-மணமுள்ள கலவைச்சந்தனம், மாலை-பூமாலை. தயிர்பால் - தயிர்பால், புலால் மாமிசம். வீடு - வீடு, நல்செந்நெல் - நல்செந்நெல், இவைகள் இவைகளை, வேறு ஒருவர் தந்திடினும் - வேறொருவர் தந்தாலும், மறுமொழி அறிந்தபேர்-மறுநீதிமொழிகளையறிந்தபேர்கள், விலைகொடுத்தே கொள்ளுவார் - விலைகொடுத்தே வாங்கிக்கொள்வார்கள், தேன் - தேன் கனி - பழம் கிழங்கு - கிழங்கு

விறகு-விறகு இலை-இலை இவை அனைத்தையும்-இவையெல்லா வற்றையும் தீண்டு அரிய நீசர் எனினும் - தீண்டவொண்ணாத நீசராயிருந்தாலும், சீர்பெற அளிப்பரேல் - மேன்மைபெறத் தருவாரானால், சீலம் உடையோர் - ஆசாரமுடையவரும், இக ழாது-(தென்முதலியவற்றை) அவமதிக்காமல், கைக்கொள்வர் கைப்பற்றுவார், என்பர்-என்றுசொல்லுவர் (பெரியோர்) ஆன் கொடி உயர்த்த-இடபக்கொடியை உயர்த்தின, உமைநேசனே உமாதேவி ப்ரியனே, ஈசனே - ஈச்சுரனே, அண்ணலே-பெரி யோனே, அருமைமதவேள்.

'தாம்புரி தவத்தையும் கொடையையும் புகழுவோர்தங்க ளாக்கவை தழைவுறா' என்றமையால் பிறர்புகழலாம் தாமே புகழ்ந்து கொள்ளலாகாதென்பதும், சற்று மறிவில்லாமலந்த ணரை நிந்தனை செய்தயவிலோ ராயுள்பெருகார், என்றமை யால் அந்தணரை நிந்திக்க லாகாதென்பதும், பெறப்பட்டன கலவை முதலியவற்றை மறுமொழி யறிந்தபேர் விலைகொடுத் தேகொள்ளுவார் என்றமையால் அறியாதவர் விலைகொடாமற் கொள்ளுவார் என்றும், வேறொருவர்தருதல் விலையில்லாமலே என்றும் பொருள்படுத்தல் காண்க உமை நேசன் என்பதனை ஒரு சொல்லாகக்கொண்டு அதற்கு ஆனகொடி யுயர்த்த என் பதை விசேடணமாக்குக.

## தத்துவத் திரயம்.

பூதமோ ரைந்துடன் புலனைந்து ஞானம்
பொருந்து மிந்திரிய மைந்து

வேறொருவர் தந்திடினு மறுமொழி யறிந்தபேர்
விலைகொடுத் தேகொள்ளு வார்
தேன்கனி கிழங்குவிற கிலையிவை யனைத்தையுந்
தீண்டரிய நீச ரெனினுஞ்
சீர்பெற வளிப்பரே லிகழாது கைக்கொள்வர்
சீலமுடைய யோரென்ப ரால்
ஆன்கொடி யுயர்த்தவுமை நேசனே யீசனே
மண்ணலே யருமை மதவே
எனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்ளீ சுர தேவனே. அஅ

(இ-ள்.) தான்புரிதவத்தையும் கொடையையும்) தாம்செய்த தவத்தையும் தானத்தையும், புகழ்வோர் தங்களுக்கு-தாமே புகழ்ந்து சொல்லிக்கொள்வோர்களுக்கு' அவை-அந்தத் தவமும்தானமும் தழைவுறு-விருத்தியடையமாட்டா, சற்றும் அறிவு இல்லாமல்-சிறிதும் விவேகமில்லாமல் அந்தணரை-பிராமணரைநிந்தனைசெய்-நிந்திக்கிறதயவு இல்லோர்-தயையில்லாதவர்கள், ஆயுள்பெறுகார்-ஆயுள்விருத்தியை யடையமாட்டார்கள் மேம்படு-மேன்மைபொருந்திய. நறுசுவை-மணமுள்ள கலவைச்சந்தனம், மாலை-பூமாலை. தயிர்பால் - தயிர்பால், புலால் மாமிசம். வீடு - வீடு, நல்செந்நெல் - நல்செந்நெல், இவைகள் இவைகளை, வேறு ஒருவர் தந்திடினும் - வேறொருவர் தந்தாலும், மறுமொழி அறிந்தபேர்-மறுநீதிமொழிகளையறிந்தபேர்கள், விலைகொடுத்தேகொள்ளுவார் - விலைகொடுத்தே வாங்கிக்கொள்வார்கள், தேன் - தேன் கனி - பழம் கிழங்கு - கிழங்கு

விறகு-விறகு இலை-இலை இவை அனைத்தையும்-இவையெல்லா வற்றையும் தீண்டு அரிய நீசர் எனினும் - தீண்டவொண்ணாத நீசராயிருந்தாலும், சீர்பெற அளிப்பரேல் - மேன்மைபெறத் தருவாரானால், சீலம் உடையோர் - ஆசாரமுடையவரும், இக மூன்று-(தேன்முதலியவற்றை) அவமதிக்காமல், கைக்கொள்வர் கைப்பற்றுவார், என்பர்-என்றுசொல்லுவர் (பெரியோர்) ஆன் கொடி உயர்த்த-இடபக்கொடியை உயர்த்தின, உமைநேசனே உமாதேவி ப்ரியனே, ஈசனே - ஈச்சுரனே, அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள்.

'தாம்புரி தவத்தையும் கொடையையும் புகழுவோர்தங்களுக்கவை தழைவுறா' என்றமையால் பிறர்புகழலாம் தாமே புகழ்ந்து கொள்ளலாகாதென்பதும், சற்று மறிவில்லாமலந்தணரை நிந்தனை செய்தயவிலோ ராயுள்பெருகார், என்றமையால் அந்தணரை நிந்திக்க லாகாதென்பதும், பெறப்பட்டன கலவை முதலியவற்றை மறுமொழி யறிந்தபேர் விலைகொடுத்தேகொள்ளுவார் என்றமையால் அறியாதவர் விலைகொடாமற் கொள்ளுவார் என்றும், வேறொருவர்தருதல் விலையில்லாமலே என்றும் பொருள்படுத்தல் காண்க உமை நேசன் என்பதனை ஒரு சொல்லாகக்கொண்டு அதற்கு ஆனகொடி யுயர்த்த என்பதை விசேடணமாக்குக.

## தத்துவத் திரயம்.

பூதமோ ரைந்துடன் புலனைந்து ஞானம்
பொருந்து மிந்திரிய மைந்து

பொருவில்கன் மேந்திரிய மைந்துமன மாதியாம்
புகலரிய கரண நான்கே
ஓதினோ ரிவையான்ம தத்துவ மெனச்சொல்வ
ருயர்கால நியதி கலையோ
டோங்கிவரு வித்தைரா கம்புருடன் மாயையென்
றுரைசெய்யு மோரேழுமே
தீதில்வித் யாதத்வ மென்றிடுவ ரிவையலாற்
றிகழ்சுத்த வித்தை யீசன்
சீர்கொள்சா தாக்கியஞ் சத்திசிவ மைந்துமே
சிவதத்வ மென் றறைகுவார்
ஆதிவட நீழலிற் சனகாதி யர்க்கருள்செ
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. அ௬

(இ-ள்.) பூதம் ஓர் ஐந்துடன் – பூதங்கள் ஓரைந்துடனே புலன் ஐந்து - புலன்களைந்து, ஞானம்பொருந்துங் இந்திரியம் ஐந்து - ஞானேந்திரியங்களைந்து, பொருவில் கன்மேந்திரியம் ஐந்தும் ஒப்பற்ற கர்மேந்திரியங்களைந்தும், மனம் அதி ஆம் மனமுதலாகிய, புகல் அரிய-சொல்லுதற்கரிய, கரணம்நான்கு அந்தக்கரணங்கள்நாங்கு, இவை-இவைகளை, ஓதினோர்-கற்று வல்லோர், ஆன்மதத்துவம் எனச்சொல்வர் - ஆத்மதத்துவம் என்றுசொல்லுவர், உயர் - உயர்ந்த, காலம் நியதி கலையோடு ஓங்கிவருவித்தை ராகம் புருடன் மாயை என்று உரைசெய்யும்

ஓர் எழும் - காலம் நியதிகலையுடனே பெருகி வருகிறவித்தை இராகம் புருடன்மாயை என்றுசொல்லப்பட்ட ஒப்பற்ற ஏழும் தீது இல்-தீமையில்லாத, வித்யாதத்வம் என்றிடுவர்-வித்தியா தத்துவம் என்று சொல்லுவர், இவை அல்லால் - இவைகளல்லாமல், திகழ்-விளங்குகிற, சுத்தவித்தை-சுத்தவித்தை, ஈசன் ஈசுரனை, சீர்கொள் சாதாங்கியம் - சிறப்பைக்கொண்ட சாதாக்கியம் சத்தி-சத்தி சிவம்-சிவம் ஐந்தும்சிவதத்வம் என்று அறைகுவார்-சிவதத்துவமென்றுசொல்லுவர், ஆதி-முற்காலத்தில் வடதிரூவில் - கல்லாலமாநிழலில், சனகாதியர்க்கு - சனகர்முதலிய நால்வருக்கும் - நால்வருக்கும் அருள்செய் - அருள்செய்த அண்ணலே-பெரியோனே, அருமைமதவேள்.

முதலோரைந்து-நிலமுதலிய ஐந்துபூதங்கள், புலனைந்து மெய்முதலிய ஐந்துவிடயங்கள். ஞானம் பொருந்து மிந்திரியமைந்து-மெய்முதலிய ஐந்து ஞானேந்திரியங்கள். கன்மேந்திரியமைந்து-வாக்குமுதலிய கர்மேந்திரியங்களைந்து. மனமாதியாம் காணநான்கு - மனமுதலிய அந்தக் காணங்கள் நான்கு, ஓதினோர் - தத்துவ சாத்திரங்களைக் கற்றுவல்லோர். வடம் ஆலமரம்.

மன்மதபாணமும் அவற்றின் குணமுதலியவும்.

வனசஞ் செழுஞ்சுத முடனசோ கந்தளவ
மலர்நீல மிவை யைந்துமே
மாரவேள் கணைகளா மிவைசெயுங் குணமுளரி
மனதி லாசையை யெழுப்பும்

விணவிலொண் கூகமலர் மெய்ப்பசலை புண்டாக்கு
மிகவசோ கந்துயர் செயும்
வீழ்ந்திடுங் குளிர்முல்லை நீலமுயிர் போக்கிவிடு
மேவுமிவை செயு மவத்தை
நினைவிலது வோநோக்கம் வேறொன்றி லாசையற
நெட்டுயிர்ப் பொடு பிதற்ற
னெஞ்சுந் திடுக்கிடுத லணம்வெறுத் திடல்காய்ச்ச
னேர்தன் மௌனம் புரிகுதல்
அனையவுயி ருண்டில்லை யென்னவீ ரைந்துமா
மத்தனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯0

(இ-ள்.) வசனம்-தாமரைமலர், செழுத்கூதமுடன்-செழுமையாகிய மாமலரோடு, அசோகம்-அசோகமலர், தளவமலர் முல்லைமலர், நீலம்-குவளைமலர், (ஆகிய) இவை ஐந்தும்-இவையைந்தும், மாரவேள் கணைகள் ஆம்-மன்மதனுடைய பாணங்களாகும், இவை செய்யும் குணம் - இவைசெய்யுங்குணங்களாவன முறை - தாமரைமலர்கள், மனதில் ஆசையை எழுப்பும் மனத்தில் விருப்பத்தை யுண்டாக்கும், வினவில் கேட்குமிடத்தில் ஒண்- ஒட்பமாகிய, சூதமலர் - மாமலர், மெய் - சரீரத்தில், பசலையுண்டாக்கும் - பசலைநிறத்தை யுண்டுபண்ணும், அசோகம் - அசோகமலர், மிகதுயர்செயும் - மிகவுந் துன்பத்தை யுண்டாக்கும், குளிர்முல்லை - குளிர்ந்த முல்லைமலர் உயிர் வீழ்ந்திடும்-கிடத்திவிடும், நீலம்-குவளைமலர், உயிர் போக்

விடும்-உயிர்நீக்கிவிடும், மேவும் - பொருந்திய, இவைசெயும் அவத்தை - இவைசெய்யும் அவஸ்தைகளாவன, நினைவில்அதுவே நோக்கம்-நினைப்பில் அதுவே நோக்கமாயிருந்தால், வேறு ஒன்றில் ஆசை அறல்-வேறொருபொருளினும் ஆசையற்றிருத்தல், நெட்டுயிர்ப்போடு - பெருமூச்சிவிடுதலோடு, பிதற்றல் - வாய்பிதற்றுதல், நெஞ்சம்திடுக்கிடுதல் - நெஞ்சம் திடுக்கிடல் அன்னம் வெறுத்திடல் - சோற்றைவெறுத்தல், காய்ச்சல் - உடல் வெதும்புதல், நோதல் - மெலிதல், மௌனம்புரிகுதல், மௌனமாயிருத்தல், அனையஉயிர்-அத்தன்மைத்தாகிய பிராணன், உண்டு இல்லையென்னல் - உண்டோ இல்லையோவென்று தோன்றுதல் (ஆகிய), ஈரைந்தும் ஆம்-பத்துமாகும் அத்தனை - இறைவனே, அருமை மதவேள்,எ-று.

நீலம்-கருங்குவளைமலர்-வைவர்ணியம். பிதற்றல்-புலம்புதல் நோதல்-உடலிளைத்தல் மௌனம் புரிகுதல்-வாய்பேசாதிருத்தல்.

## மன்மத னுபசரணங்கள்.

வெஞ்சிலை யெழுங்கழுவி னரிசரு வண்டின
மேல்விடுங் கணைக ளலராம்
வீசிடுந் தென்றறோர் பைங்கிள்ளை யேபரிகள்
வேழுங் கெடாத விருளாம்
வஞ்சியர் பெருஞ்சேனை கைதையுடை வாணெடிய
வண்மைபெறு கடன் முரசராம்

மகரம் பதாகைவரு கோகிலங் காகளம்
மனதே பெரும் போர்க்களம்
சஞ்சரிகை யிசைபாடல் குமுதநே யன்கவிகை
சாமிரதி யேமனைவி யாந்
தருகண்மட மாதரிள முலைமகுட வாமல்கு
தவரு திருக்கு மிடமாம்
அஞ்சுகணை மாரவேட் கென்பரெளி யோர்க்கெலா
மமுதமே யருமை மதவே
ளனுதினமு மன்றினிலை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯௩

(இ-ள்) அஞ்சுகணை மாரவேட்கு-பஞ்சபாணங்களையுடைய மன்மதனுக்கு, வெஞ்சிலை-கொடியவில், செழுகழை - செழுமையாகிய கரும்பாகும், வில்நாரி-வில்நாண், கருவண்டு இனம்-கரியவண்டின் கூட்டமாகும், மேல்விடும்-மேலே பிரயோகிக்கிற கணைகள்-பாணங்கள், அலர் ஆம்-மலர்களாகும், வீசிடும்தென்றல்-வீசுகிற தென்றற்காற்றானது, தேர் தேராகும், பை-பசிய கிள்ளையே-கிளிகளே பரிகள்-குதிரைகளாகும், கெடாத இருள் நீங்காத இருளானது. வேழம் ஆம் - யானையாகும், வஞ்சியர் மாதர் பெருஞ்சேனை - பெரியபடையாகும், கைதை - தாழை மடல், உடைவாள் - உடைவாளாகும், நெடிய வண்மைபெறு கடல்-பெரிய ஔதார்யம்பெற்றகடல், முரசம் ஆம் - பேரிகையாகும், மகரம்-மீன், பதாகை துவசமாகும், வருகோகிலம் வருகின்ற குயில்கள், காகளம் - ஊதுகொம்பாகும், மனதே மனமே பெருபோர்க்களம் - பெரிய யுத்தகளமாகும், சஞ்சரி

இசை - வண்டோசை, பாடல் - சங்கீதமாகும், குமுதநேசன் சந்திரன், கவிகை குடையாகும், சார்பொருந்திய, இரதியே ரதிதேவியே, மனைவி ஆம்-மனைவியாவாள், தருகண் - அஞ்சாமையுள்ள, மடமாதர் - இளம்பெண்களுடைய, இளமுலை - இளமுலைகள், மகுடம் ஆம்-கிரீடமாகும், அல்குல்-நிதம்பம், தவருது - இடைவிடாமல், இருக்கும் இடம் ஆம்-வீற்றிருக்குமிடமாகும், என்பர்-என்றுசொல்லுவர் (பெரியோர்) எளியோர்க்கு எல்லாம் - எளியவர்க்கெல்லாம், அமுதமே - அமிர்தம்போல் பவனே, அருமைமதவேள். எ-று.

பைங்கிள்ளை - பச்சைநிறமுள்ள கிளி. வஞ்சியர் - கொடிபோல்வார் கைதை-தாழை. உடைவாள்-அரைபிற்கட்டும்வாள் மகரம்-மீன் காகளம்-எக்காளம்(ஊதுகொம்பு) சஞ்சரிகம்-வண்டு இசை-ஓசை பாடல்-சங்கீதப்பாட்டு அல்லிமலர்களுக்கு நாயகனுதலால் சந்திரனைக் குமுதநேசன் என்ருர். குமுதம் அல்லிமலர்.

## பகைகொளத் தகாதவர்.

மன்னவ ரமைச்சர்துச் சனர்கோளர் தூதரொடு
மாறுத மரம முடையோர்
வலுவர்கரு ணீகர்மிகு பாகஞ்செய் தன்னமிடு
மடையர் மந்திர வாதியர்
சொன்னமுடை யோர்புலைய ருபதேச மதுசெய்வோர்
சூழ் வயித்தியர் கவிதைகள்
சொற்றிடும் புலவரிவர் பதினைந்து பேரொடுஞ்
சொற்பனந் தனி லாகிலும்

நன்னெறி யறிந்தபேர் பகைசெய்திடார்களிந்
நானிலத் தென்பர் கண்டாய்
நாரியோர் பாகனை வேதாக மம்பரவு
நம்பனை யன்பர் நிதியே
அன்னமூர் பிரமனுங் கண்ணனுங் காணாத
வண்ணனே யருமை மதவே
ளனுதின மு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கூஉ

(இ-ள்.) இ-இந்த நானிலத்து உலகத்தில், மன்னவர்-அரசர் அமைச்சர் - மந்திரிகள் துர்ச்சநர் - துர்ஜநங்கள் கோளர் கோள்சொல்லுவோர் தூதரொடு - தூதருடனே மாறுதகர்மம் உடையோர்-நீல்காத மர்ம முள்ளவர்கள் வலுவர்-பலமுள்ளவர்கள் கருணீகர்-கணக்கர் மிகுபாகம்செய்து-மிகுந்தசமையல்செய்து அன்னம் இடும்மடையர் - அன்னம்பரிமாறுகிற மடையர் மந்திரவாதியர்-மந்திரவாதிகள் சொன்னம் உடையோர்-பொன்னுடையவர் (திரவியமுள்ள.) புலையர்-நீசர் உபதேசமது செய்வோர்-உபதேசம்செய்கிறவர் சூழ்வயித்தியர்-ஆலோசனையுள்ள வைதியர் கவிதைகள் சொற்றிடும் புலவர் - கவிகள்பாடும் புலவர்கள் (ஆகிய) இவர் பதினேந்து பேரோடும்-இவர்கள் பதினேந்துபேர்களோடும், சொர்ப்பனம் தனிலாகிலும்-கனவிலாயினும் நல்நெறி அறிந்தபேர் பகைசெய்திடார்கள் - நல்வழியை யறிந்தபேர்கள் பகைத்துக்கொள்ளமாட்டார்கள், என்பர் - என்று சொல்லுவர்பெரியோர் நாரி ஓர்பாகனே - உமாதேவியை ஒரு பாகத்திலுடையவனே, வேதாகமம் பரவும்நன்பனே - வேதா

கமங்கள் துதிக்கின்ற சிவபிரானே, அன்பர்நிதியே - அன்பர் செல்வமே அன்னம் ஊர்பிரமனும் - அன்னத்தை நடத்துகிற பிரமதேவனும், கண்ணனும் - விஷ்ணுவும், காணாத - காண வொண்ணாத அண்ணலே-பெரியோனே அருமைமகவே.

வலுவர்-வலிமையுள்ளவர் மடையர் - சமையற்காரர். சொன்னம்-பொன், அது இங்கு நகதாதியாதிகளெல்லாவற்றையுங் குறித்தது. நாரி-பெண். நம்பன் - மங்களகுணங்கள் நிறைந்திருப்பவன். அன்பருக்குப் பொருட்செல்வஞ் செல்வமல்லாமையாலும், இறைவன் அருட்செல்வமே செல்வமாதலாலும் 'அன்பர் நிதியே' என்றார்.

இதாகிதஞ்செய்து பயன்கொள்வன.

சுவைசேர் கரும்பைவெண் பாலைப் பருத்தியைச்
சொல்லுநன் னெல்லை யெள்ளைத்
தூயதெங் கினியை யொண்ணாத துட்டரைத்
தொண்டரை தொழு தொழும்பை
நவதிரு மாறுகண் டித்தே பயன்கொள்வர்
நற்றமிழ்க் கவி வாணரை
நலமிக்க செழுமலரை யோவிய மெனத்தக்க
நயமுள்ள நாரியர் தமைப்
புவிமீதி லுபகார நெஞ்சரைச் சிறுவரைப்
போர் வீரரைத் தூயரைப்
போதவும் யரிவோ டிதஞ்செய்ய மிகுபயன்
புகழ்பெறக் கொள்வர் கண்டாய்

அவமதி தவிர்த்தென்னை யாட்கொண்ட வள்ளலே
யண்ணலே யருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯௩

(இ-ள்.) சுவை சேர்கரும்பை - (இன்) சுவையுள்ள கரும்பையும், வெண்பாலை - வெண்மையாகிய பாலையும், பருத்தியை பருத்தியையும், (யாவராலும்புகழ்ந்து) சொல்லும் - சொல்லப்பட்ட, நல்நெல்லை - நல்லநெல்லையும, எள்ளை - எள்ளையும், தூய தெங்கின்கனியை - பரிசுத்தமான தேங்காயையும், எண்ணாத துட்டரை - மதிக்காததுஷ்டரையும், தொண்டரை - தொண்டு செய்வோரையும், தொழுதொழும்பை - தொழும்படியான அடிமைகளையும், நவைதீருமாறு - குற்றமொழியும்படி, கண்டித்தே கண்டிதஞ் செய்தே, பயன் கொள்வர் - பயனடைவார்கள்; நல் தமிழ் - இனிய தமிழைக்கற்ற, கவிவாணரை - கவிவாணர்களையும் நலம் மிக்கசெழுமலரை - நன்மைமிகுந்த செழுமையாகிய பூவையும், ஓவியம் எனத்தக்க - சித்திரப்பாவையென்று சொல்லத்தகுந்த, நயம் உள்ள நாரியர்தமை - இன்பமுள்ள மாதரையும், புவிமீதில் - பூமியின்மேல், உபகார நெஞ்சரை - உபகார மனத்தையுடையவரையும், சிறுவரை - சிறுவரையும், போர் வீரரை யுத்தவீரரையும், தூயரை - பரிசுத்தரையும், போதவும்பரிவோடு - மிகவும் அன்போடு, இதம்செய்ய - நன்மைசெய்ய, புகழ்பெற - கீர்த்தியடையும்படி, மிகு பயன்கொள்வர் - மிகுபயனை யடைவார்கள், அவமதி தவிர்த்து துர்ப்புத்தியை நீக்கி, என்னை ஆட்கொண்ட - என்னையாட்கொண்டருளின, வள்ளலே - உதாரனே, அண்ணலே - பெரியோனே, அருமைமதவேள் எ-று.

கரும்பாதலால் சுவை இன்சுவையென் றுரைக்கப் பட்டது, வெண்பாலே யென்பதில் வெண்மை இயற்கை யடை. நன்னெல்-செந்நெல். கண்டித்து என்றது சிக்ஷித்து என்படி. நலம்-மணமெனினுமமையும், உபகாரநெஞ்சர் - உபகரிக்கவே ண்டுமென்கிற மனவிருப்ப முள்ளவர். தூயர் என்றது ஞானி யரை

தருமம்.

பெறுமில்பெறு வித்தலொடு காதோலை காட்டாறும்
பிள்ளைக ளருந்திடும் பால்
பேசரிய சத்திர மடமா வுரிஞ்சுகல்
பெண்போகம் நாவிதன் வண்ணான்
மறைமொழிக ளோதுதன் னீர்தலைக் கெண்ணெய்பசு
வாயினுறை பிணமடக்கல்
வாயிறு முயர்மீட்ட றின்பொரு ளடைக்காய்
வழங்கல் சுண்ணாம் புதவுதல்
சிறையுறு யவர்க்கமுது வேற்றிலங் காத்தல்பொழில்
செய்தன்முன் னூலின் மணத்
திகழ்விலங் கூண்பிச்சை பறிசயமய ருக்குண்டி
தேவ ராலய மவுஷதம்
அறைதல்கற் போர்க்கன்ன நாலெட் டறங்களுமு
னன்னைசெய லருமை மதவே
ளனுதினமு மனதினினை கருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்.) பெறும் இல் - பிள்ளைபெறுதற்கு வீடுவிடல், பெறுவித்தல், பிள்ளை பெறுவித்தலோடு, காதோலை-(சுமங்கலிகளுக்கு) காதோலை கொடுத்தல், நாள்தோறும்-தினந்தோறும் பிள்ளைகள் அருந்திடும்பால் - பிள்ளைகள் குடிக்கின்ற பாலுண்பித்தல், பேச அரிய சத்திரம் - சொல்லுதற்கரிய சத்திரம், மடம் மடங்கட்டுவித்தல், ஆவுரிஞ்சுகல் ஆவுரிஞ்சுகல், பெண்போகம் பெண்போகம் கொடுத்தல், நாவிதன் - அம்பட்டனைக்கொண்டு க்ஷவரம் செய்வித்தல், வண்ணான்-வண்ணானைக்கொண்டு ஆடை வெளுப்பித்துக் கொடுத்தல், மறைமொழி - வேதமோதுவித்தல் கண்ணாடி கொடுத்தல், தண்ணீர்-(தாகத்துக்கு தண்ணீர் கொடுத்தல், தலைக்கு எண்ணெய்-தலைக்கெண்ணெய் கொடுத்தல். பசுவாயின் உறை-பசுவுக்கு வாயுறை கொடுத்தல் பிணம் அடக்கல்-(திக்கற்ற) பிணத்தையடக்கஞ்செய்தல் வானியங்கும் உயிர்விடல்-பறக்கும் உயிர்களாகிய பறவைகளை விட்டுவிடுதல், இன்பொருள் அடைக்காய் வழங்கல் - இன்பண்டங்களையும் வெற்றிலைப் பாக்கையும் கொடுத்தல், சுண்ணம்பு உதவுதல்-சுண்ணாம்புகொடுத்தல், சிறை உறுபவர்க்கு அமுது-சிறைப்பட்டவர்க்கு அன்னங்கொடுத்தல். வேற்றிலம் காத்தல் வேற்றில்லத்தைக் காத்தல். பொழில் செய்தல்-சோலைவைத்தல், முன்நூலின் மணம்-பூணூற்கலியாணஞ் செய்துவைத்தல் திகழ்விலங்குணவு-விளங்குகிற விலங்குணவு கொடுத்தல் பிச்சை - பிச்சைபோடுதல், அறுசமயத்தார்க்கும் உணவளித்தல், தேவாலயம்-தேவாலயங்கட்டுவித்தல், ஔஷதம்-(நோய்க்கு) மருந்துக்கொடுத்தல் அறைதல் கற்போர்க்கு அன்னம்-

படிப்பவர்க்கு அன்னமளித்தல்,(இவைகளே) முன்-முற்கால த்தில். அன்னை-லோகமாதாவாகிய உமாதேவியார் நாலெட்டு அறங்களும் செயல் - முப்பத்திரண்டு தருமங்களையும் செய்த லாம், அருமைமதவேள். எ-று.

## இல்லறம்.

தந்தைதாய் சற்குருவை யிட்டதெய் வங்களைச்
சன்மார்க்க முள மனைவியைத்
தவறாத சுற்றத்தை யேவாத மக்களைத்
தனைநம்பி வரு வோர்களைச்
சிந்தைமகிழ் வெய்தவே பணிவிடைசெய் வோர்களைத்
தென்புலத் தோர் வறிஞரைத்
தீதிலா வதிதியைப்பரிவுடைய துணைவரைத்
தேனுவைப் பூசுரர் தமைச்
சந்ததஞ் செய்கடனை யென்றுமிவை பிழைபாது
தான்புரிந் திட வில்லறஞ்
சாருநல முடையாரந் துறவறத் தோருமிவர்
தம்முடன் சரியா யிடார்
அந்தரி யுயிர்க்கெலாந் தாய்தனினு நல்லவட்
கன்பனே யருமை மதவே
எனுதினமு மனதினினை சருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே கூடு

(இ-ள்.) தந்தைதாய் சற்குருவை-தந்தையாரையும் சற் குருவையும், இட்டதெய்வங்களையும் - இஷ்டதெய்வங்களையும்

(இ-ள்.) பெறும் இல் - பிள்ளைபெறுதற்கு வீடுவிடல், பெறுவித்தல், பிள்ளை பெறுவித்தலோடு, காதோலை-(சுமங்கலி களுக்கு) காதோலை கொடுத்தல், நாள்தோறும்-தினந்தோறும் பிள்ளைகள் அருந்திடும்பால் - பிள்ளைகள் குடிக்கின்ற பாலுண் பித்தல், பேசு அரிய சத்திரம் - சொல்லுதற்கரிய சத்திரம், மடம்-மடங்கட்டுவித்தல், ஆவுரிஞ்சுகல் ஆவுரிஞ்சுகல், பெண் போகம் பெண்போகம் கொடுத்தல், நாவிதன் - அம்பட்டனைக் கொண்டு க்ஷவரம் செய்வித்தல், வண்ணான்-வண்ணானைக்கொ ண்டு ஆடைவெளுப்பித்துக் கொடுத்தல், மறைமொழி - வேத மோதுவித்தல் கண்ணாடி கொடுத்தல், தண்ணீர்-(தாகத்துக்கு தண்ணீர் கொடுத்தல், தலைக்கு எண்ணெய்-தலைக்கெண்ணெய் கொடுத்தல். பசுவாயின் உறை-பசுவுக்கு வாயுறை கொடுத்தல் வாவி பிணம் அடக்கல்-(திக்கற்ற) பிணத்தையடக்கஞ்செய்தல் வாவி விடும் உயிர்மீட்டல்-பறக்கும் உயிர்களாகிய பறவைகளை மீட்டு விடுதல், தின்பொருள் அடைக்காய் வழங்கல் - தின்பண்டங் களையும் வெற்றிலைப் பாக்கையும் கொடுத்தல், சுண்ணம்பு உத வுதல-சுண்ணாம்புகொடுத்தல், சிறை உறுபவர்க்கு அமுது- சிறைப்பட்டவர்க்கு அன்னங்கொடுத்தல். வேற்றிலம் காத் தல்-வேற்றில்லத்தைக் காத்தல். பொழில் செய்தல்-சோலை வைத்தல், முந்நூலின்மணம்-பூணூற்கலியாணஞ் செய்துவைத் தல் திகழ்விலங்குஊண்-விளங்குகிற விலங்குணவு கொடுத்தல் பிச்சை - பிச்சைபோடுதல், அறுசமயத்தார்க்கும் உணவளித் தல், தேவலாயம்-தேவாலயம்கட்டுவித்தல், ஔஷதம்-(நோய் க்கு) மருந்துக்கொடுத்தல் அறைதல் கற்போர்க்கு அன்னம்-

படிப்பவர்க்கு அன்னந்தளித்தல்,(இவைகளே) முன்-முற்காலத்தில். அன்னை-லோகமாதாவாகிய உமாதேவியார் நாலெட்டு அறங்களும் செயல் - முப்பத்திரண்டு தருமங்களையும் செய்தலாம், அருமைமதவேள். எ-று.

## இல்லறம்.

தந்தைதாய் சற்குருவை யிட்டதெய் வங்களைச்
சன்மார்க்க முள மனைவியைத்
தவறாத சுற்றத்தை யேவாத மக்களைத்
தனைநம்பி வருவோர்களைச்
சிந்தைமகிழ் வெய்தவே பணிவிடைசெய் வோர்களைத்
தென்புலத் தோர் வறிஞரைத்
தீதிலா வதிதியைப்பரிவுடைய துணைவரைத்
தேனுவைப் பூசுரர் தமைச்
சந்ததஞ் செய்கடனையென்றுமிவை பிழைபாது
தான்புரிந் திட வில்லறஞ்
சாருநல முடையாரந் துறவறத் தோருமிவர்
தம்முடன் சரியா யிடார்
அந்தரி யுயிர்க்கெலாந் தாய்தனினு நல்லவட்
கன்பனே யருமை மதவே
ளனுதினமு மனதினினை சுருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே கூ௱

(இ-ள்.) தந்தைதாய் சற்குருவை-தந்தையாரையும் சற்குருவையும், இட்டதெய்வங்களையும் - இஷ்டதெய்வங்களையும்

சன்மார்க்கம் உள்ளமனைவியை-நன்னெறியுள்ளமனைவியையும், ஏவா தமக்களை தவறாத சுற்றத்தை-நீங்காத சுற்றத்தாரையும், ஏவா தமக்களை ஏவவேண்டாதமக்களையும் தன்னை நம்பிவருவோர்களை-தன்னை நம்பிவருவோர்களையும், சிந்தைமகிழ்வு ஆக பணிவிடை செய் வோர்களை-மனமகிழும்படி தொண்டுசெய்வோர்களையும் தென் டுலத்தோர் வறிஞரை - தென்புலத்தாரையும் வறியரையும், ஓது இல்லா அதிதியை குற்றமற்ற அதிதியையும், பரிவு உடைய துணைவரை - அன்புள்ள சிநேகரையும் தேநுவை பசுவையும், பூசுரர்தமை வேதியரையும், சந்தம் எப்பொழு தும், செய்கடனை-செய்வேண்டிய கடன்களையும், (இவை-இவற் றை) என்றும்பிழையாது - எக்காலத்தும் தவறாமல், புரிந் திடல் - செய்தலே, இல்லறம் - இல்லறமாகும் சாரும்-பொரு ந்தியநலம் உடையர்ஆம்- நன்மையுடையோராகிய, துறவத் தோரும் - துறவறத்தாரும், இவர்தம்முடன் - இவர்க ளுடனே, சரிஆயிடார் - சமானமாகமாட்டார்கள், அந்தரி அந்தரியாய், உயிர்க்கு எல்லாம் - சீவராசிகளுக்கெல்லாம் தாய்தனிலும் நல்லவட்கு - தாயினும்நல்லவளாகிய உமாதே விக்கு. அன்பனே-காதலனே, அருமைமதவேள். எ-று.

சன்மார்க்கமுள்ளமனைவி - கற்புடையமனைவி ஏவா தமக் கள்-இன்னதைச்செய்யென்று தந்தைதாயார் ஏவாமல்தாமே குறிப்பறிந்து செய்கிறமக்கள் தென்புலத்தோர்-பிதிர்த்தேவ தைகள், வறிஞர்-எளியார், அதிதி-விருந்து (தேசாந்திரி) இல் லறம்-இல்வாழ்க்கையோடு கூடிச்செய்யவேண்டிய தருமம் துற வறத்தோர் சந்நியாசிகள் அந்தரி - உயிருக்குயிராயிருப்பவள்.

## புராணம்.

தலைமைசேர் பௌடிக மிலிங்கமார்க் கண்டமெழில்
சாரும் வாமன மச்சமே
சைவம் பெருங்கூர்மம் வருவரா கங்காந்த
சரிதமே பிர மாண்டமும்
நிலைமைசே ரிப்பத்து மூவர்சிவ புராணமா
நெடுமால் கதை வைணவம்
நீதிசேர் காருட நாரதம் பாகவத
நீடிய புராண நான்காம்
கலைவளர்சொல் பதுமமொடு பிரமகை வர்த்தமே
கமலா லயன் கதையாம்
கதிரவன் கதையே சூரிய புராணமாங்
கனல்கதை யாக்கி னேயம்
அலைகொண்ட நதியும் வெண் மதியுமறு கும்புனையு
மத்தனே யருமை மதலை
யானுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. ௯௯

(இ-ள்) தலைமைசேர் - முதன்மைபொருந்திய, பௌடிகம் பௌடிகமும், இலிங்கம்-இலிங்கமும், மார்க்கண்டம் - மார்க்கண்டமும், எழில்சாரும்வாமம் - அழகுபொருந்திய வாமமும் மச்சம்-மச்சமும், சைவம்-சைவமும் பெருகூர்மம்-பெரியகூர்மமும், வருவராகம் - வருகின்ற வராகமும், சாந்தசரிதம்-சாந்தசரிதமும்,பிரமாண்டம் - பிரமாண்டமும் ஆகிய, நிலைமை

சேர் இப்பத்தும் - நிலைபொருந்திய இந்தப்பத்தும் உயர்-உயர்ந்த சிவபுராணம் ஆம்-சிவபுராணங்களாகும், நெடியமால் கதை - நெடுமாலின் சரித்திரத்தைக்கூறுவன, வைணவம்-வைணவமும், நீதிசேர்காருடம் - நீதிபொருந்திய காருடமும், நாரதம்-நாரதமும், பாகவதம்-பாகவதமும் ஆகிய, நீடிய-பெரிய புராணம்நான்கு ஆம்-நான்குபுராணங்களாகும், கலைவலர்சொல் நூல்வல்லார்புகழ்கின்ற, பதுமமொடு - பதுமத்துடன், பிரமகைவர்த்தம் - பிரமகைவர்த்தகமும், கமலாலன்காதை ஆம் - பிரமபுராணங்களாகும், கதிரவன்காதை - சூரியன்சரித்திரத்தைச்சொல்வது, சூரியபுராணம் ஆம்-சூரியபுராணமாகும் கனல் காதை - அக்நியின் சரிதத்தைச் சொல்வது, ஆக்கிநேயம்-ஆக்நேய புராணமாகும், அலைகொண்ட நதியும் - அலைகளையுடைய கங்காநதியையும், வெள்மதியும் - வெள்ளியசந்திரகண்டத்தையும், அறுகும் -அறுகம்புல்லையும், புனையும்- தரித்த, அத்தனை இறைவனை, அருமைமதவேள் எ-று.

சரிதம்-சரித்திரம் நெடியமால் என்றது திரிவிக்ரமாவதாரத்தைக் குறித்தது கமலாலயன் (கமலம்- ஆலயம்) தாமரைமலரை இடமாகவுடையவன் ஆலயம்-இடம் கனல்-அக்கினி

புகழ்ச்சி.

பருகாத அமுதொருவர் பண்ணாத பூஷணம்
பாரின் மறையாத நிதியம்
பரிதிகண் டலராத நிலவுகண் டுலராத
பண்புடைய பங்கே ருகம்

கருகாத புயல்கலைக ளருகாத திங்கள்வெங்
கானி லுரையாத சீயங்
கருதரிய விக்குண மனைத்துமுண் டானபேர்
காசினிய லருமை *யாகும்
தெரியவுரை செய்யின்மொழி கீர்த்திவரு கல்வியொடு
சீரிதய மீகை வதனங்
திடமான வீரமிவை யென்றறிகு வார்களிச்
செகலோங் கொண்டா லே
அருள்கற்ப தருவென வோங்கிடுந் தானதுரை
யாகுமெம தருமை மதவே
ளனுதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே. கூ௪

(இ-ள்) பருகாத அமுது-உண்ணாத அமிர்தம், ஒருவர் பண்ணாத பூஷணம் ஒருவர்செய்யாத ஆபரணம், பாரில் மறையாத நிதியம்-பூமியில் மறைந்துபோகாத நிக்ஷேபம், பரிதி கண்டு அலராத-சூரியனைக்கண்டு மலராததும் நிலவுகண்டு உலராதசந்திரனைக் கண்டு உலராததும் ஆகிய, பண்பு உடைய குணத்தையுடைய பங்கேருகம்-தாமரைமலர் கருகாதபுயல்-கருகாதமேகம், கலைகள்அருகாத திங்கள்-கலைகள் குறையாத சந்திரன் வெம்கானில் உறையாத சீயம-கொடிதாகியகாட்டில்வசிக்காதசிங்கம், கருது அரிய -சொல்லுதற்கரிதாகிய,இக்குணம் அனைத்தும் உண்டானபேர் - இந்தகுணங்களெல்லா வற்றையு முடைய பேர், காசினியில் உலகத்தில், அருமை ஆகும்-அருமையாம், தெரிய உரைசெய்யின்-தெரியச்சொல்லி

றால், பொருகீர்த்தி-சொல்லப்பட்டகீர்த்தி, வருகல்வியோடு - வளர்கின்ற கல்வியுடனே சீர் இதயம்- சிறந்த இருதயம்-ஈகை கொடை வகுதம்-முகம் திடம் ஆனவீரம்-உறுதியாகிய வீரம் இவை என்று அறிகுவார்கள் - இவைகளை யென்றறிவார்கள் இச்செகம் எல்லாம்கொண்டாட-இந்த உலகமுழுவதும் கொண்டாடும் படி அருள்-அருள்செய்கிற கற்பதரு என்ன-கற்பக தருவைப்போன்ற ஓங்கிடும்-உயர்ந்த தாததுரை ஆகும்-கொடைக்குப்பிரபுவாகிய எமதருமைமதவேள் எ-று.

மொழி முதலியவை முறையே அமுது முதலானவை யிருக்கப்பெற்றவனும் கற்பகத்தருவைப்போன்ற கொடையானும் யாரெனின், மதவேள் என்னும்பிரபுவேயாவன் என்பது இச்செய்ட்கருத்து.

## திருமாலவதாரம்.

சோமுகா சுரனைமுன் வதைத்தமரர் துயர்கெடச்
 சுருதிதந் ததுமச்சமாஞ்
சுரர்தமக் கமுதீந்த தாமையாம் பாய்போற்
 சுருட்டி மாநில மெடுத்தே
போமிரணி யாக்கனை யுயிருண்ட தேனமாம்
 பொல்லாத கனக னுயிரைப்
போக்கியது நரசிங்க முலகளந் தோங்கியது
 புனித வாமன மூர்த்தியாம்
எழுறு மிராவணனை வென்றவ னிராகவ
 னிரவிகுலம் வேரறுத்தோ

னேர்பரசி ராமன்வரு கண்ணனொடு பலராம
னிப்புவி பயந் தவிர்த்தோர்
ஆமினிய கற்கியினி மேல்வருவ திவைபத்து
மரிவடிவ மருமை மதியே
வானுதின முமனதி னினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே, கசு

(இ-ள்.) சோமுகாசுரனை - சோமுகன் என்னும் அசுரனை முன்-முன்னாளில், வதைத்து வதைசெய்து, அமரர்துயர்கெட-தேவர்களுடைய துன்பம் நீங்கும்படி, மறை தந்தது-வேதங்களைத் தந்தது, மச்சம் ஆய்-மச்சாவதாரமாகும், சுரர் தமக்கு-தேவர்களுக்கு, அமுது ஈந்தது-அமிர்தங்கொடுத்தது, ஆமையாம்-கூர்மாவதாரமாகும், மாநிலம்-பெரிதாகிய பூமியை பாய்போல் சுருட்டியெடுத்து - பாயைப்போலச் சுருட்டியெடுத்துப் போம்-போகும் இரணியாக்கனை-இரணியாக்ஷனை உயிர் உண்டது-உயிர்குடித்தது, ஏனம் ஆய-வராகாவதாரமாகும், பொல்லாத கனகன் உயிரை - பொல்லாத இரணியனுயிரை, போக்கியது-நீக்கினது, நரசிங்கம்-நரசிங்காவதாரமாகும், உலகு அளந்து ஓங்கியது - உலகத்தைத் திருவடியாலளந்து பிறகு உயர்ந்தது, வாமநமூர்த்தியாம்-வாமநாவதாரமாகும், எழுறும் இராவணனைவென்றவன்-இருமாந்திருந்த ராவணனை ஜெயித்தவன், இராகவன் - ஸ்ரீராமனுவான், இரவிகுலம்வேர் அறுத்தோன் சூரியகுலத்தை வேரறுத்தவன், ஏர் பரசுராமன் - வருகண்ணனொடு பலராமன்-அவதரித்த க்ருஷ்ணனும் பலராமனும், இப்புவி பயம் தவிர்த்தோர் - இந்தப் பூமியிலுள்ளோரது அச்சத்தை

யொழித்தவராயவர், இனியகற்கி-இனிதாகியகற்கி அவதாரம் இனிமேல் வருவது ஆம் - இனிமேல் எடுக்கப்போகிறதாகும் இவைபத்தும்-இவைபத்தும் அரிவடிவம் - திருமாலவதாரங்களாகும். அருமைமதவேள்.

ஆமை-கூர்மம். ஏனம்-பன்றி. (வராகம்.) எழுறுதம்-இருமாக்கல். இராகவன் - இரகுகுலத்தில் அவதரித்தவன். இரவி சூரியன். கற்கி-குதிரை.

## சிவமூர்த்தி.

பிறைசூடி யுமைநேசன் விடையூர்தி நடமிடும்
பெரியனுயர் வதுவை வடிவன்
பிச்சாட னன்காம தகனன்மற லியைவென்ற
பெம்மான் புரந் தகித்தோன்
மறமலி சலந்தரனை மாய்த்தவன் பிரமன்முடி
வெளவினோன் வீரே சுரன்
மருவுநர சிங்கத்தை வென்றவ னுமையாகன்
வனசரன் கங்கா ளனே
விறன்மேவு சண்டேச ரக்ஷகன் கடுமாந்தி
மிக்கசக் கர முதவினோன்
விநாயகற் கருள்செய்தோன் குகனுமை யுடன்கூடி
மிளிரேக பாதன் சுகன்
அறிவரிய தக்ஷிணா மூர்த்தியொ டிலிங்கமா
மையனே யருமை மதவே
ளாதினமு மனதினினை தருசதுர கிரிவள
ரறப்பளீ சுர தேவனே.

(இ-ள்) பிறைசூடி சந்திரசேகரன், உமைநேசன் - உமாதேவிக்கும் பிரியன், விடைஊர்தி - இடபவாகனன், நடமிடும் பெரியன் - நடனஞ்செய்கின்ற பெரியோன், உயர்வதுவை வடிவன் - சிறந்த மணக்கோலத்தை யுடையவன், பிச்சாடனன் பிக்ஷாடனன், காமதகனன் - காமனைவென்ற பெருமான், புரம் தகித்தோன் - திரிபுரத்தையெரித்தவன், மறம்மலி சலந்தரனை மாய்த்தவன் - கோபமிகுந்த சலந்தராசுரனை மடித்தவன், பிரமன்முடி வௌவினோன் - பிரமன் தலையைக் கவர்ந்தவன், வீரேசுரன் - வீரேசுவரன், மருவும் நரசிங்கத்தை வென்ற அரன் பொருந்திய நரசிங்கத்தைவென்ற ஹரன், உமைபாகன் - உமாதேவிபாகன், வனசரன் - வேடுவன், கங்காளன் - கங்காளன், விறல்மேவு சண்டேசரக்ஷகன் - வெற்றிபொருந்திய சண்டேசரக்ஷகன், கடுமாந்தி - விஷபானஞ்செய்தவன், மிக்கசக்கரம் உதவினோன் - மேலானசக்கரத்தைக் கொடுத்தவன், விநாயகற்கு அருள் செய்தோன் - விநாயகனுக்கு அருள் செய்தவன், குகன் உமையுடன்கூடி மிளிர் - முருகனோடும் உமாதேவி யோடும்கூடி விளங்குகின்ற, ஏகபாதன் - ஏகபாதன் சுகன் - சுகவடிவன் அறிவு அரிய - அறிதற்கரிய, தக்ஷிணாமூர்த்தியொடு - தக்ஷிணாமூர்த்தத்துடன், இலிங்கம் ஆம் - இலிங்க வுருவமுமாகின்ற, ஐயனை இறைவனை அருமைமதவேள், எ-று.

விடை - இடபம், ஊர்தி - நடத்துவோன். நடமிடல் - நடனஞ்செய்தல். வதுவை - மணம். மறம் - கோபம். மலிதல் - மிகுதல். கங்காளன் - முழுவெலும்பைத் தாங்குவோன். கடு - விஷம். மாந்தல் - குடித்தல்.

ருடன் வனத்துள்-காட்டிலுள்ள பூளை-பூளைமலர் பச்சறுகு-பச்சை அறுகம்புல் செம்முள்ளிமலர்-கசம்முள்ளிமலர்கள் (ஆகிய இவற்றை) சூட தரிக்க சித்தம்வைத்து - திருவுள்ளம்வைத்து அவையும்-அவற்றையும் அங்கீகரித்திடும் - ஏற்றுக்கொண்ட மகாதேவ தேவா - மஹாதேவயுதவனே கலைவலர் - நல்லகலைவலோர் தெரிந்து உரைக்கும் அறிந்துசொல்லுகிற, நன்கவியோடு-நல்லகவிகளோடு அம்பலவாண கவிராயன் ஆகும் அம்பலவாண கவிராயன் ஆகும்-அம்பலவாண கவிராயனாகிய என் புன் கவியையும்-எனது அற்ப கவியையும் சூடி-தரித்து மனமகிழ்ந்திடுவது-திருவுளங்களிப்பது உன் கடன் ஆகும்-உன்கடனாகும், அடல்நாகமும்-வலிமையுள்ள பாம்பையும், அலைபெருங்கங்கையும்-அலைபொங்குகின்ற கங்கையையும் செழுமதியமும் செழுமையாகிய சந்திரனையும் புனையும்-தரித்த அமலனே - பரிசுத்தனே, அருமைதவேள் எ-று.

மருக்கெழுந்து வாசனைக்கொழுந்து பத்திரம்-இலை சிலர் மணமுள்ள கோன்றைமலர் முதலியவற்றைச் சூட சிலர் மணமற்ற எருக்கமலர் முதலியவற்றைச் சூட அவ்விரண்டையும் ஒருங்கே திருவுளம்பற்றினது போல-கற்றுவல்லோராகிய பெரியோரது திருவுளம் பற்றினது போல எனதுபுன்கவியாய கவிமாலைகளைத் திருவுளம் பற்றினது போல எனதுபுன்கவியாய கவிமாலைகளைத் திருவுளம் பற்றியருளல் வேண்டுமென்பது கருத்து.

## அறப்பளீசுரசதகம்
## மூலமும் உரையும்
## முற்றிற்று.

"மாறன்" அச்சுக்கூடம் புரசை, சென்னை.